குருகுல வெளியீடு—5

உ
சிவமயம்

# சிவபூசை விளக்கம்

அச்சுவேலி
சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள்

[சைவ சமய நூல்களை ஆதாரமாகக்கொண்டு
எழுதியது.]

சிவானந்த குருகுலம் —
1965

அச்சுப்பதிவு :

கலைவாணி அச்சகம்,
10, மெயின் வீதி,
யாழ்ப்பாணம்.

# பதிப்புரை

சிவானந்த குருகுலத்தின் நோக்கங்களில் ஒன்று, பல சைவசமய நூல்களை வெளியிட்டுக் குருகுல மாணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் ஆக்கமும் ஊக்கமும் அளிப்பதாகும். வடமொழியைக் கட்டாய பாடமாகப் படித்துவரும் குருகுல மாணவர்களின் போதனாமொழி 'தமிழ்' ஆகும். எனவே, குருகுல மாணவர்களுக்குப் பயன்படக்கூடிய பல நூல்களை வெளியிடக் குருகுலம் பெருமுயற்சி செய்து வருவதைச் சைவ உலகம் வரவேற்குமென நம்புகின்றோம்.

சிவானந்த குருகுல வெளியீடுகளாக இதுவரை நான்கு நூல்கள் வெளிவந்துள்ளன. அவை:

1. முத்திராலட்சணம்
2. சோபகிருது வருஷ நவராத்திரி-சிவராத்திரி விரத நிர்ணயம்
3. சிவராத்திரி மாச நிர்ணயம்
4. அக்கினி காரிய விதி (மூலமும் உரையும்)

என்பன. இவற்றைத் தொடர்ந்து ஐந்தாவது வெளியீடாக 'சிவபூசை விளக்கம்' என்ற அரிய நூலை வெளியிடுவதில் நாம் பெருமகிழ்ச்சி அடைகின்றோம். 'சிவபூசை விளக்கம்' சிவானந்த குருகுல வெளியீடுகளில் தலைசிறந்ததாகும்.

இந்நூல் சிவானந்த குருகுலத்தின் பாடவிதானத்திற்கு அமைந்து விளங்குகின்றது. எனவே இந்நூல் குருகுல மாணவர்களுக்குச் சிறப்பாகப் பயன்படுவதோடு, பொதுவாக மற்றவர்களெல்லாரும் படித்துப் பயன்பெறக் கூடியதாகும்.

வாழ்க்கையின் பயனைப் பெறுவதற்குச் சிவபூசை இன்றியமையாததாகும். இதனைத் தற்கால இளைஞர்கள் உணர்ந்து அதன்வழி ஒழுகாதிருக்கின்றனர். அதற்குக் காரணம் அவர்கள் சிவபூசையின் தத்துவங்களையும், உண்மைகளையும் உணராதிருப்பதேயாகும். எனவே தற்கால மாணவர்களுக்கு வாழ்க்கை வழிகாட்டியாக அமைந்து அவர்களின் நல்வாழ்விற்கு நற்பயனை நல்குதற்குச் சிவபூசை விளக்கம் பெரிதும் பயன்படவேண்டும் என்பது எமது பெருவிருப்பாகும். இந்நோக்கத்தைப் பூர்த்தி செய்யவேண்டும் என்ற நல்லெண்ணத்தோடு இந்நூலை வெளியிடுகின்றோம்!

சிவபூசை விளக்கம் இனிய தமிழில் எளிமையாக எழுதப் பெற்றுள்ளது. சிவபூசை விதியை விளக்குவதற்குத் திருமுறைகள் எவ்வளவிற்கு ஆதாரமாகின்றன என்பதை இந்நூலில் நுழைவோர் எளிதிற் கண்டு கொள்வர்.

இந்நூலை அச்சுவேலி சிவஸ்ரீ ச. குமாரசுவாமிக் குருக்கள் எழுதியுள்ளார்கள். இன்று, சிவபூசையின் தத்துவங்களையும், உண்மைகளையும் எடுத்துரைக்கும் ஆற்றலும் அறிவும் நிரம்பியவர்களாக நம் மத்தியில் அப்பெரியார் வாழ்கின்றார். அவர்களின் ஆழ்ந்த அறிவாலும் முதிர்ந்த அனுபவத்தாலும் உருப்பெற்ற இந்நூல் வாழ்க்கைக்கு நல்லதொரு வழிகாட்டியாகுக! குருக்களவர்களின் பெருமுயற்சியைச் சைவ உலகம் பாராட்டி வரவேற்க வேண்டிய கடமையும் கடப்பாடும் உடையதாகும்.

"மேன்மை கொள் சைவநீதி விளங்குக உலகமெல்லாம்"

"கொட்டில்"
திருக்கேதீச்சரம்
குரோதி ஸு பங்குனி மீ
(26-3-65)

கந்தையா வைத்தியநாதன்
முகாமையாளர்
சிவானந்த குருகுலம்

உ
கணபதி துணை

# முகவுரை

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

சிவனெனுநாமந் தனக்கேயுடைய
செம்மேனியெம் மான்
அவனெனையாட்கொண் டளித்திடு
மாகிலவன் றனையான்
பவனெனு நாமம்பிடித்துத் திரிந்து
பன்னா ளழைத்தால்
இவனெனைப் பன்னா ளழைப்பொழியா
னென் றெதிர்ப்படுமே.

திருச்சிற்றம்பலம்

நாம் முற்பிறப்பிற் செய்த புண்ணியங் காரணமாகப் பெறுதற்கரிய இம்மானுட தேகத்தைப் பராபரமுதல்வராகிய பரமசிவன் எமக்குத் தந்து, வைதிகசைவ சித்தாந்த சமயத்திலே ஜனனமாகவுந் திருவருள் பாலித் தருளினார். நமக்கு இம்மானுடதேகத்தைச் சிவபெருமான் தந்தது சரியை, கிரியை, யோகம் என்னும் சிவபுண்ணியங்களைச் செய்து தம்மை வழிபட்டுச் சிவஞானத்தை உதிக்கும்படிசெய்து முத்தியின்பத்தைத் தரும் பொருட்டேயாம்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்னும் நான்கும் படிமுறையாக அரும்பும் பூவும் காயும் பழமும் போன்று ஒன்றற்கொன்று தொடர்ச்சியும் ஏற்றமுமுடையனவாயுள்ளன. அது,

"விரும்புஞ் சரியைமுதன் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்பு மலர் காய் கனி போலன்றோ பராபரமே"

என்னும் தாயுமான சுவாமிகள் திருவாக்கால் உணரப் படும்.

அவற்றுட் சரியையாவது புறத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய உருவத்திருமேனியை நோக்கி வழிபடுவதாம். கிரியையாவது ஆசாரியரிடத்திலே விசேட தீக்ஷைபெற்று, அருவுருவத்திருமேனியாகிய சிவலிங்கப் பெருமானையேற்று, அகத்தொழில் புறத்தொழில் என்னுமிரண்டானும் வழிபடுவதாம். அது ஆணவத்தை நீக்கிப் பிறவியொழித்து மோக்ஷத்தைத் தரும்படி வேண்டித் தூபம் தீபம் சந்தனம் புஷ்பம் திருமஞ்சனம் முதலிய பூசோபகரணங்களைக் கொண்டு, பஞ்ச சுத்திசெய்து அகமும் புறமும் பூசித்து அக்கினி காரியமும் பண்ணி, சிவபெருமானுடைய வரத அத்தத்தில் உடல் பொருள் ஆவி மூன்றையும் ஒப்பித்தலாகிய சிவபூசையாம். இதனியல்பு

புந்திரமார்க்கம் புகலிற் புதியவிரைப் போது
புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்திமானாஞ்
சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
பத்தியினா லருச்சித்துப் பரவிப் போற்றிப்
பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி
நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்க
ணின்மலன்ற னருகிருப்பர் நினையுங் காலே.

எனவரும் சகலாகமபண்டிதர் திருவாக்காற் புலப்படும்.

மந்திரம் கிரியை பாவனைகளால் மனம் வாக்கு காயம் என்னும் மூன்றுமொருமித்து மெய்யன்போடு கிரியை செய்தல் வேண்டும். அன்பின்றிச் செய்யும் கிரியையாற் பயனிலதாம். அன்பு முக்கியம் என்பது,



கோடிதீர்த்தங் கலந்து குளித்தவை
ஆடினாலு மரனுக்கன் பில்லையேல்
ஓடுநீரினை ஓட்டைக்குடத்தட்டி
மூடிவைத்திட்ட மூர்க்கனையொக்குமே,

எனவும்,

நெக்குநெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்குநிற்கும் பொன்னார்சடைப் புண்ணியன்
பொக்கமிக்கவர் பூவும் நீருங்கண்டு
நக்குநிற்பனவர் தம்மை நாணியே

எனவும் வரும் திருநாவுக்கரசு நாயனார் தேவாரத்தால் உணரப்படும்.

சிவபெருமானை வழிபாடு செய்யுங்கிரமங்களை அறிவுறுத்துவன முதனூல்களாகிய சிவாகமங்களேயாம். அச்சிவாகமங்களின் வழிவந்தனவாய் கிரியாக்கிரமங்களைப் பிரதிபாதிக்கும் பத்ததிகள் பதினெட்டு சிவானுக்கிரகம் பெற்ற சிவாசாரியர் பதினெண்மர்களால் அவை இயற்றப்பெற்றன. அவ்வப் பத்ததிகள் ஆக்கியோர்களாகிய அவ்வச் சிவாசாரியர்கள் பேரால் தமக்குப் பெயர்படைத்து விளங்குவனவாம். அவற்றுள் அகோரசிவாசாரியர் செய்தருளிய பத்ததி விளக்கமானது. அப்பத்ததியின்படியே பெரும்பாலும் சிவபூசை முதலிய கிரியைகள் நடைபெற்று வருகின்றன. வடமொழியில் சிவபூசாக்கிரமத்தை உணர்த்துவனவாகிய சம்புபூஜாவிதி, ஆத்மார்த்த பூஜா பத்ததி முதலிய அரிய கிரந்தங்களும், செந்தமிழிலுள்ள சிவபூசை அகவல், நித்திய கருமநெறி முதலிய நூல்களும் அகோர சிவாசாரியர். செய்தருளிய பத்ததியை அனுசரித்துச் செய்யப்பட்டனவேயாம். பத்ததி நெறி வழி என்பன ஒரு பொருட் சொற்கள்.

இவ்வாறு அனுஷ்டான வியாபகமாய் இருந்துவரும் அகோரசிவாசாரிய பத்ததியின் வழித்தாகச் சிவபூசாக்கிரமத்தை விளக்கத்துடனும், அவ்விளக்கத்துக்கு ஆதா

ரங்களாகக் கொண்ட வடமொழி தென்மொழிப் பிரமா
ணங்களுடனும் செந்தமிழ் வசன நடையில் ஒரு நூல்
எழுதும்படி கந்தவனக்கோயிலாதீன கர்த்தரும் சிவ
பூசாதுரந்தரருமாகிய திக்கம் ஸ்ரீ மாந் சி. செல்லையா
பிள்ளை அவர்களும், கந்தரோடை சைவ ஆங்கிலக்
கல்லூரி முகாமையாளர் ஸ்ரீ மான் S. கந்தையா உபாத்
தியாயர் அவர்களும் வேண்டிக் கொண்டார்கள்.
அவர்கள் விரும்பியவாறு இச்சிவபூசை விளக்கம் எழுதப்
பெற்று, வேதாரணிய ஆதீனம் ஸ்ரீமத் வே. விசுவநாத
தேசிகரவர்கள், கௌரவ சு. இராசரத்தினம், அப்புக்
காத்து M. S. இளையதம்பி. தென்மராட்சி மணியம்
வீ. மு. சிற்றம்பல முதலியார், பூநகரி மணியம்
பொ. இராசகோபால் முதலிய சைவாபிமானிகளது
திரவியோபகாரத்துடன் பிரபவ (1928) வருஷத்தில்
முதற் பதிப்பு அச்சிடப்பட்டு வெளிவந்தது.

இங்ஙனம் இந்நூல் வந்த சில வருஷங்களுக்குள்
பிரதிகள் கிடைத்தற் கரியனவாயின. இவ்விரண்டாம்
பதிப்பு, முன்னாள் அமைச்சராயிருந்து பல நன்மை
களைச் செய்தவரும், குரு லிங்க சங்கம பக்தியிற்
சிறந்தவரும், திருக்கேதீச்சரத் திருப்பணிச் சபைத்
தலைவரும், குருகுல முகாமையாளரும் ஆகிய திரு.
சேர். கந்தையா வைத்தியநாதன் அவர்கள் விரும்பிய
வாறு சில விஷயங்கள் புதிதாகக் கூட்டியும் விளக்கி
யும் குருகுல ஐந்தாவது வெளியீடாக வெளிவருகின்
றது. இனிப் பிரகடனமாகவிருப்பது பிராசாததீபப்
புத்துரையாகும்.

இந்நூலுக்கு மதிப்புரை அளித்த அறிஞர்களும்
பலர். சேலம் வித்துவான் சிவஸ்ரீ G. சிவசுப்பிரமணியக்
குருக்கள், கந்தவனம் அர்ச்சகர் சு. கனகசபாபதிக் குருக்கள்,
கரணவாய் சு. பஞ்சாக்ஷரக் குருக்களாதியோரது மதிப்புரை
கள் இப்பதிப்பிற் பக்கங்கள் கூடுதலால் வெளிப்படுத்த
வியலவில்லை.



இந்தச் சிவபூசை விளக்கம் எழுதுவதற்கு ஆதார
மாக விருந்தவை வடமொழிக் கணுள்ள காமிகம், கார
ணம், வீரம், சிந்தியம் முதலிய மூலாகமங்களும்,
பௌஷ்கரம், மிருகேந்திரம் முதலிய உபாகமங்களும்,
சித்தாந்தசாராவளி, நிர்மலமணிவியாக்கியானம் முத
லிய நூலுரைகளும், செந்தமிழிலுள்ள தேவாரம் முத
லிய திருமுறைகளும், சிவஞானசித்தியார் முதலிய
மெய்கண்டசாத்திர நூல்களும், சிவதருமோத்திரம்,
சைவசமயநெறி, சதாசிவரூபம், கந்தபுராணம், வாயு
சங்கிதை முதலியவைகளுமாம்.

மஹாவித்துவான்களும், சித்தாந்தச்செல்வர்களும்
எழுதற்பாலதாகிய இந்த நூலை, ஆகம அறிவும், சிவ
ஞானப் பேறுமில்லாத அடியேனைச் செலுத்தி எழுது
வித்த கௌரியம்பா சமேத ஸ்ரீ கேதீசுவர சுவாமியை
மனம் வாக்குக் காயங்களினாற் சிந்தித்து வணங்கி அப்
பெருமானுடைய திருவடிக் கமலங்களுக்கு அர்ப்பணஞ்
செய்கின்றேன்.

## திருஞானசம்பந்தப்பிள்ளையார்

திருச்சிற்றம்பலம்

பண்டுநால்வருக் கறமுரைத் தருளிப்
பல்லுலகினி லுயிர்வாழ்க்கை
கண்டநாதனார் கடலிடங் கைதொழக்
காதலித் துறைகோயில்
வண்டுபண்செயு மாமலர்ப் பொழின்மஞ்ஞை
நடமிடு மாதோட்டம்
தொண்டர் நாடொறுந் துதிசெய
வருள்செய் கேதீச்சரமதுதானே.

திருச்சிற்றம்பலம்

இங்ஙனம்
ச. குமாரசுவாமிக் குருக்கள்

குருகுலம்
திருக்கேதீச்சரம்
குரோதி ௵ பங்குனி மீ

உ

## திருப்பணியின் பெருமை

"சிவபெருமானைக் குறித்துத் திருப்பணி செய்யும் அன்பர்களுக்கும் குருசங்கமங்களைக் குறித்துத் திருப்பணி செய்யும் அடியார்களுக்கும் செம்பொன்னை விசுவாசத்துடன் கொடுப்பவர்களும் அன்பர்கள் கொடுக்கும் திரவியங்களை வாங்கித் திருப்பணி செய்பவர்களும் சிவபெருமானுடைய கிருபையைப் பெற்று முத்தியடைவார்கள்" எனவும்,

"சிவனடியார் தம்மிடத்துள்ள பொருள்களுள் ஒரு பகுதியைத் திருப்பணிக்குக் கொடுக்கவேண்டும்" எனவும்,

"புதிய ஆலயங்களை அமைப்பதிலும் பார்க்கப் புராதன க்ஷேத்திரங்களின் திருப்பணியை நிறைவேற்றிக் கும்பாபிஷேகம் செய்தல் பதினுயிரமடங்கு விசேஷம்" எனவும் சிவாகமங்கள் செப்புகின்றன.

ஆதலால், திருஞானசம்பந்தமூர்த்திநாயனுர், சுந்தரமூர்த்திநாயனுர் என்னும் சமயாசாரியர்களது தேவாரப் பதிகங்கள் பெற்ற புராதன புண்ணியத் தலமாகிய திருக்கேதீச்சரத் திருப்பணிக்குப் பொருளுதவி செய்வது சைவசமயிகளது அதிமுக்கிய கடமையாகும்.

### சைவசமயநெறி

திருப்பணி செய்வார்க்குஞ்சிவனை யுன்னிச்செம்பொன்
விருப்புடனீவார் பெறுக வீடு
உய்வாருதவு நிதிவாங்கித் திருப்பணியைச்
செய்வார் பெறுக சிவம்

— பிரதமகுரு, குருகுலம்;
திருக்கேதீச்சரம்

உ
சிவமயம்

## இரண்டாம் பதிப்பு சிறப்புப் பாயிரம்

கண்டனூர்

### வித்துவான் சிவஸ்ரீ அரு. இராமநாதக் குருக்கள் அவர்கள்

பிறக்கும் பொழுதும் பின் இறக்கும் பொழுதும் அதற்கிடைக்காலத்திலும் அனுபவிக்குந் துன்பத்தை ஓரறிஞன் சிந்தித்தால் பிறவாதிருத்தல் தவிரவேறென்றும் வேண்டவே வேண்டாமென்கிற முடிவிற்கே வரக்கூடும். அப்பிறவிகளிலும் மானுடப்பிறவியே மேலானதென்றும் கருதப்படுகின்றது. "இப்பிறவி தப்பினல் எப்பிறவி வாய்க்குமோ" என்றும் கூறினர் மேலோர். அப்பிறவி எப்படியிருத்தல் வேண்டுமென ஆராயும் போது நமது நாவுக்கரசரும்.

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம் போன் மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்த பொற் பாதமுங் காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதேயிந்த மாநிலத்தே.

என்றுபதேசித்தருளிய பாடல் மானிடப் பிறவியும் வேண்டற பாலதே என்கிறது. பிறவி என்னது பிறவியும் என்று கூறுவானேன்? எனில், அம்மானுடப் பிறப்பில் நல்ல அறிவோடு செய்ய வேண்டுவதைச் செய்தாலன்றிப் பின் பிறப்பு அதோ கதிதான்.

பிற பிறப்புகளில் ஜீவன் ஒழிந்த பிறகும் அச்சரீரம் ஊழ்வினையால் சிவகாரியத்திற்குமாகலாம். அதாவது சில பிராணிகள் உயிருடனிருக்கும் பொழுதும் அது வன்றி ஒழிந்த பிறகும் பல்வேறான சரீரங்களிலிருந்து பட்டு புனுகு கவரி கோரோசனை தந்தம் சிருங்கம் பால் தயிர் ஆதியனவும், தேன் நரம்பு தோல் ஆதிய னவும், அப்பிராணிகளின் உழைப்பும், தாவரங்களிலுண் டான சமித்துகள் பூ இலை காய் கனி முதலானவை களும் சிவகாரியத்துக்கு உபயோகப்பட்டு, அதனால் படிப்படியே மேலான சரீரங்கிடைக்கப் பெற்று மேலான மானுடப் பிறவியுங்கிடைக்கும். ஆறறிவுபெற்ற அப் பிறவியில் பிறப்பொழிக்க வழிவகுத்துக் கொள்ளா விட்டால் முற்கூறியபடி "புனரபிஜன்னம் புனரபிமர ணம்" என்பதே தான் கதி.

ஆகவே அப் பிறப்பொழிப்பு அப் பிறப்பிறப்பில் லாத ஒருவனாலேதான் செய்துவைக்க முடியும். அப் பைய தீக்ஷிதரவர்களும் "பூதஸ்ய ஜாத:" ஜாதொபி ருஹன்" என்கிற சுருதிவாக்கியத்தினாலே பிரம விஷ் ணுக்களுக்குப் பிறப் பிறப்புண்டென்றும்.

"யஸ்மாத ஜாயிதிமந் திரவரோப திஷ்டாத்"

என்கிற வாக்கியத்தால் பரமசிவன் உண்டாக்கப் படாத வனாதலினாலே அவ்வொருவனை அடைந்தே பாச விடுதலை பெறுவதைத் தவிர வேறுவழியில்லை யென்றும் சித்தாந்தித்துள்ளார்கள். ஆகவே இதற்கு வழி சிவபூசை ஒன்றேயாம்.

நமது வாழ்வெல்லாம் "சிவபூஜாவிதெ: பலம்" என் றாரொருவர். "துர்லபாசாம்பவீவித்யா சிவேபக்திஸ்து துர்லபா" என்றார் மற்றொருவர்.

அப்படி துர்லபமான மகா சிவவித்தையை நமது வித்துவான் அச்சுவேலி ச. குமாரசுவாமிக் குருக்கள



வர்கள் பல சிவாகமபத்ததிகளை ஆராய்ந்து ஒரு சேரத் திரட்டி இருமொழியிலுமாக நமக்கு உதவ முன்வந்த னர். அவைகளில் சிவபூசை விளக்கம் என்பதுமொன்று. அது தோன்றிச் சின்னாட்களுக்குள்ளாகவே நம் போன் றவர்களுக்குக்கிடைக்காது செலவாகிவிட்டது.

அக்குறையை இலங்கை முன்னாள் மந்திரியாக விருந்து லோகோபகாரமாக பல பசுதர்மங்களையும் பல பிரசங்கங்களின் மூலமாகச் சமயத்தொண்டுகளையு மாற்றிவந்த சிவமணி சேர் கந்தையா வைத்தியநாதன் அவர்கள் இன்னாள் எவ்வித இன்னல்களையும் பாராட் டாது சிவதரும சிந்தனை பூண்டு பதிதருமமாகிய திருக் கேதீச்சரத்திருப்பணியிலும் திருநகரத்தபிவிருத்தியிலும் ஈடுபட்டவர்களாய் குருகுல மொன்றுண்டாக்கி அதன் மூலமாகச் சிவவித்தியாபிவிருத்தியும் சிவசாஸ்திரப் பிரசாரமும் செய்து வருகிறார்கள்.

அவர்களால் இச்சிவபூசை விளக்கம் இரண்டாவது பதிப்பு குருகுல ஐந்தாவது வெளியீடாக வருகிறது. அது நமக்குக் கிடைப்பதற் கரிய நலனென்று சொல்ல வேண்டுவதில்லை. புகழை விரும்பாத அவர்களுடைய பெருமித குணம்.

"என் கடன் பணி செய்து கிடப்பதே"

என்ற நமதப்பரின் திருவாக்கைக் கொண்டதே தான். தற்போது நேர்ந்த புயலின் கொடுமையால் தம்மை வந்தடைந்த ஜனங்களுக்குப் பிரதிபலனை எதிர் பாராது செய்த உதவியைக்கேட்க எனது மனம் பூரிப் படைந்த தென்பது மிகையாகாது.

அவர்கள் நீண்டகாலமிருந்து சிவதர்மங்கள்செய்து அரோக திடகாத்திரத்தோடு வாழவேண்டுமெனத் திருக் கேதீச்சரநாதன் திருவடிகளை வேண்டுகிறேன்.

சுபம்

உ
சிவமயம்

முதற்பதிப்பு

# சிறப்புப்பாயிரங்கள்

புலோலி
ஆரியதிராவிட பண்டிதர்
**பிரமஸ்ரீ ம. முத்துக்குமாரசுவாமிக்குருக்கள் அவர்கள்**

## சொல்லியவை

**ஸ்ரக்தரா விருத்தம்**

வீணகானக்ய தேசே சுஜந பரிவ்ருதே யந்த்ர வாடீபுரஸ்தோ நாநாசாஸ்த்ரப்ரவீணோ த்விஜவரகுணதீ ச்லாக்யவான் ஸ்ரீகுமார/ ஸ்வாம்யாசார்யாக்ய தீரச்சிவ ஸமய ஜநாஹ்லாதநயை ப்ரயத்நாத் சக்ரே சம்யக் விசார்ய ஸ்புடதம சிவ பூஜா விதிம் பத்ர மஸ்து//

**எண்சீர் விருத்தம்**

உத்தமமா மியாழ்ப்பாண தேச மீதே
யுறுமச்சு வேலியெனு நகரில் வாழ்வோன்
சுத்தமறை யோர்குலமே லுதித்த செம்மல்
சொன்மறையா கமமுதல பலநூ லாய்ந்தோன்
வித்தகனுங் குமாரசுவா மிப்பே ருள்ள
வியன்குரவன் சிவபூசை விளக்கஞ் செய்தான்
இத்தலமேற் சிவநேச ராய்ந்து தேற
வெந்நாளு மிதுநிலவி யினிது வாழி.

சங்கானை மேற்கு
வித்துவான்
**பிரமஸ்ரீ அ. அருணாசல சாஸ்திரிகள்**

## சொல்லியது

ஸ்ரீமத் கௌதம வம்சபூஷணமணிஃ ஸ்ரீயந்த்ர வாடீ வஸன் ஸர்வோத் க்ருஷ்ட குணஸ்ஸபாபதி குமார ஸ்வாமி சர்மாமஹாந்/

சைவாநாமுபகாரகம் சிவமஹாபூஜா ப்ரகாசாபிதம் சக்ரே சாஸ்த்ரமநர்க்க மர்த்த பகுளம் சைவா கமா துத் ருதம்//

சூரியனூர் கோயிலாதீனம்
**இலக்கணம்**
**ஸ்ரீலஸ்ரீ முத்துக்குமாரத் தம்பிரான் சுவாமிகள்**

சிவஞானச் செல்வர்களாகிய குருக்கள் அவர்கட்கு இனிய விஞ்ஞாபனம்.

சிவபூசையின் உண்மைக் கருத்துக்களைத் தெரிய விரும்புவோர்க்குச் சிவபூசை விளக்கம் சிறந்த கருவியாக உதவும் என்பது எம் கருத்தாம்.

வித்தியாதரிசி

## பிரமஸ்ரீ தி. சதாசிவ ஐயரவர்கள்
## எழுதியது

ஆன்மார்த்தமாகிய சிவபூசை பண்ணும் கிரமம் அகோரசிவர் முதலிய சைவாசாரியர்களால் பத்ததியாக வடமொழியிற் செய்யப்பட்டுள்ளது. வடமொழிப் பயிற்சி இல்லாதவர்க்கு அதனையறிந்து அவ்வழியொழுகுதல் எளிதன்று அற்றாக, சிவபூசையின் கிரமத்தையும் சிறப்பையும் சைவநன்மக்கள் பலரும் அறிந்து சிவபூசையாகிய கிரியை வழிபாடியற்றி உயர்ச்சிபெறச் செய்தற்கேற்றது சிவபூசைவிளக்கம் என்னும் இந்நூல் என்க. சிவபூசையின் கிரமத்தையும் அதனோடு சார்ந்த பல விஷயங்களின் விரிவான விளக்கத்தையும், விளக்கத்திற்கு மேற்கோளாகச் சமயசாஸ்திரங்களினின்றும் தமிழ் வேதமாகிய திருமுறைகளினின்றும் சமயோசிதமாகத் தெரிந்து எடுத்த பல பாட்டுக்களையும் தன்னகத்துக் கொண்டு மிளிர்வது இந்நூலென்றறிக.

இந்நூலைத் தொகுத்து இயற்றினர் யாவரெனிற் கூறுதும் யாழ்ப்பாணத்து அச்சுவேலி பதிவாசரும் பரம்பரையாய்க் குருத்துவம் நடாத்திய பிராமண குலத்துதித்தவரும் தம் தந்தையாரிடத்தும் நீர்வேலி ஸ்ரீமத் சங்கரபண்டிதரவர்கள் குமாரர் சிவப்பிரகாசபண்டிதர் என்பவரிடத்தும் வடமொழித் தென்மொழிப் பயிற்சி பெற்றவரும் கல்வியறிவொழுக்கம், அடக்கம் முதலிய சுகுணங்கள் வாய்க்கப் பெற்றவரும் சைவக்கிரியானுஷ்டான சீலருமாகிய பிரமஸ்ரீ ச. குமாரசுவாமிக்குருக்கள் இந்நூலை இயற்றினர் என்க.

சைவசமய சாஸ்திரங்கள் பலவற்றிலும் பரந்து கிடக்கும் விஷயங்களை ஒருங்கு தொகுத்து ஒரு நூலாகச் சைவ உலகுக்குதவிய குருக்களவர்கள் நன்றி சைவ நன்மக்களால் என்றும் பாராட்டற்பாலது.

மட்டக்களப்பு.
பிரபவ ஞு தை மீ
6-2-28

இங்ஙனம்,
தி. சதாசிவ ஐயர்

புலோலி

## ஸ்ரீமத் சு. சிவபாதசுந்தரம் B. A., அவர்கள்
## எழுதியது

சிவபுண்ணியம் சரியை, கிரியை, யோகம் என மூவகைத்து. கிரியாமார்க்கத்தின் முக்கிய அனுட்டானம் இவ்வரிய நூலில் விளக்கப்படுவதாகிய சிவபூசையாம். சிவபூசை செய்வோருள் அதன் முறை தெரிந்தோர் சிலரே. அவருள்ளும் அதை விளங்கினோர் சிலர். அவருள்ளும் அவற்றின் இரகசியங்களை அறிந்தோர் மிகச் சிலர். ஆதலால் இத்தகைநூல் சிவபூசை செய்பவர்கட்கின்றியமையாததாய்ச் செய்யாதோரைக் கொண்டுஞ் செய்வித்தற்கோர் தூண்டுகோலாய்ச் சைவ சமயப் பெருமையை விளக்குதற்கு முக்கிய சாதனமாய் நிலவும்.

இந்நூலாசிரியர் கல்வியறிவொழுக்கங்களாற் சிறந்தவராய்ச் சிவபூசானுபவத்தையுடைய சிவாசாரியராதல் இந்நூலின் மாசின்மைக்குச் சாட்சியாம். இந்நூலுக்கியல்பான பிரமாணநூல் சிவாகமமாகவும் தமிழை நாயகமொழியாக்கும் தேவார திருவாசகங்கள் மேற்கோள்களாகக் காட்டப்பட்டமை ஆசிரியருக்கு அவற்றிலுள்ள ஆட்சியையும் ஆர்வத்தையும் அடியார் பத்தியையும் விளக்கும் இந்நூல் சிவபூசையின் அங்ககிரியைகள் ஒவ்வொன்றன் பொருளையும் பயனையும் விளக்கி அறிவையேற்றுவதோடு அப்பூசைக்கின்றியமையாததாகிய சிரத்தையையாக்குதற்கும் பெருந்துணையாகின்றது. இந்நூல் இயற்றற்குத் திருவருளாற் கூர்ந்த மதியும் ஆழ்ந்த அறிவுமன்றித் தளராத ஊக்கமும் பெருமுயற்சியும் வேண்டப்படும். இவற்றுக்காக நூலாசிரியர்க்கு நாம் நன்றி கூறுதல் சிவபூசாவான்களது முறைக்குப் பொருந்தாதாகலின் அவர்களையேற்ற திருக்கரத்தையும் திருவடிகளையும் என்றுந் தியானித்து இந்நூல் என்றும் நிலவி உலகத்துக்குப் பெரும்பயனளித்தலை விரும்புகின்றோம்.

## விஷயசூசிகை

குருகுல வெளியீடு : 5

உ
சிவமயம்

# சிவபூசை விளக்கம்

## விநாயக வணக்கம்

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

பண் — வியாழக்குறிஞ்சி

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

எந்தக் கருமத்தைச் செய்யத் தொடங்கும்பொழுதும் முதலில் விநாயக வணக்கம் வேண்டும். விநாயக மூலமந்திரத்தை உச்சரித்து முட்டியாகப் பிடித்த இரு கரங்களினாலும் சிரசில் ஐந்து முறை குட்டுதல் வேண்டும். குட்டும்பொழுது மத்தகத்திலிருக்கும் அமிர்தமானது பெருகிச் சுழுமுனைநாடி மார்க்கமாக மூலாதாரத்தில் ஒளி ரூபமாகவிருக்கும் விநாயகரையடைந்து அபிஷேகமாக அவர் அருள் செய்வரென்பதே இதன் பாவனையாம்.

ஐந்து முறை குட்டுவது பஞ்சபாசநீக்கத்தின் பொருட்டாகும். மும்முறை குட்டவேண்டுமென்று சிவநூல் கூறும்.

## சிவபூசையின் பொதுவிதி

பிறவிகளுட் சிறந்த மானுட சன்மத்தை முற்நிறப்பிற் செய்த புண்ணிய மேலீட்டினலே எடுத்த அன்பர்கள் செய்யும் சிவபூசையானது ஆன்மார்த்த பூசை பரார்த்த பூசையென இருவகைப்படும். ஆசாரியர் தீக்ஷை பண்ணி அருள் சுரந்து சீடனைப் பார்த்து நீ இறக்கும்வரையும் கைவிடாது இவரை நாடோறும் பூசி என்று அனுமதி செய்து "அடியேன் இச்சரீரமுள்ள வரையுஞ் சிவார்ச்சனை செய்தன்றி ஒன்றுமுண்ணேன்" என்று சம்மதி செய்வித்துக்கொண்டு கொடுக்க அவன் வாங்கிப் பூசிப்பது இட்டலிங்க பூசையாம். எல்லா ஆன்மாக்களுக்கும் அனுக்கிரகஞ் செய்யுங் காரணமாகக் கோயில்களிற் பிரதிஷ்டை செய்து பூசிப்பது பரார்த்தலிங்க பூசையாம்.

பூசிக்கத்தக்க லிங்கங்கள் க்ஷணிகலிங்கம், பொன் முதலிய லோகங்களாலாகிய லிங்கம், இரத்தினங்களாலாகிய லிங்கம், சைலலிங்கம் வாணலிங்கம் முதலியனவாம்.

க்ஷணிகலிங்கமானது மண், அரிசி, * அன்னம், ஆற்றுமண், கோமயம், வெண்ணெய், உருத்திராக்ஷம், சந்தனம், கூர்ச்சம், புஷ்பமாலை, சருக்கரை, மா எனப் பன்னிரு வகைப்படும். புற்று மண்ணால் இலிங்கமமைத்துப் பூசித்தவர் மோட்சத்தையும், அரிசியால் அமைத்துப் பூசித்தவர் செல்வத்தையும், அன்னத்தினல் அமைத்துப் பூசித்தவர் அன்னதிபதியாதலையும், நதி மண்ணால் அமைத்துப் பூசித்தவர் பூமி லாபத்தையும், கோமயத்தினல் அமைத்துப் பூசித்தவர் ரோகசாந்தியையும் வெண்ணெயாலமைத்துப் பூசித்தவர் மனதில் விரும்பிய பலனையும், உருத்திராக்ஷத்திற் பூசித்தவர் ஞானவிருத்தியையும், சந்தனத்தால் அமைத்துப் பூசித்தவர் போகத்தையும் கூர்ச்சத்திற் பூசித்தவர் புத்தி விருத்தியையும் புஷ்பமாலையிற் பூசித்தவர் ஆயுள் விருத்தியையும், சருக்கரையால் அமைத்துப் பூசித்தவர் மனதில் விரும்பிய சித்தியையும், மாவால் அமைத்துப் பூசித்தவர் சரீர புஷ்டியையும் அடைவார்களென்று க்ஷணிக லிங்க பூஜாபலன் அம்சுமான் ஆகமத்திற் கூறப்பட்டது. இவ்விலிங்கங்களிற் சிவபெருமான் பூசை முடியும்வரையும் வியாபகமாய் நின்று அனுக்கிரகிப்பர். நாடோறும் பூசாந்தத்தில் க்ஷணிக லிங்கத்தைக் கங்கையில் விடுதல் வேண்டும். அல்லது குறித்த ஒரு தினத்தில் விடுவதுமுண்டு. உருத்திராக்ஷம் கழுவுதலாற் சுத்தியாகும்.

* அன்னத்தை நீக்கி விபூதியைக் கொள்வது முண்டு. (காரணாகமம்)



பொன், தாமிரம், வெள்ளி, வெண்கலம், பித்தளை, இரும்பு என்னும் லோகங்களாலாகிய லிங்கம் லோகசலிங்கமெனப்படும்.

பொன்னாலமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் போகமோக்ஷத்தையும், தாமிரத்தால் அமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் புத்திர விருத்தியையும், வெள்ளியாலமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் செல்வத்தையும், வெண்கலத்தினல் அமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் சுகத்தையும், பித்தளையினல் அமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் ரோகநிவாரணத்தையும், இரும்பினல் அமைக்கப்பட்ட இலிங்கத்தைப் பூசித்தவர் சத்துரு சயத்தையும், அடைவாரென்று லோகசலிங்கா பூசாபலன் சிந்திய விசுவாகமத்திற் கூறப்பட்டது. மற்றைய மூன்று லோகங்களாலாகிய இலிங்கத்தைப் பூசித்தவர் அபமிருத்துவை அடைவர்.

மரகதம், பதுமராகம், வைடூரியம், படிகம், புஷ்பராகம், பவளம், வச்சிரம், மாணிக்கம், இந்திரநீலம், என்பவைகளாலாகிய இலிங்கம் இரத்தினலிங்கம் எனப்படும்.

மரகதலிங்கத்தைப் பூசித்தவர் புஷ்டியையும், பத்மராகலிங்கத்தைப் பூசித்தவர் செல்வத்தையும், வைடூரியலிங்கத்தைப் பூசித்தவர் ஆயுள் விருத்தியையும், படிகலிங்கத்தைப் பூசித்தவர் புத்திரவிருத்தியையும், புஷ்பராகலிங்கத்தைப் பூசித்தவர் சத்துருத்தம்பனத்தையும், பவளலிங்கத்தைப் பூசித்தவர் இராசவசியத்தையும், வச்சிரலிங்கத்தைப் பூசித்தவர் ஆகர்ஷணத்தையும், மாணிக்கலிங்கத்தைப் பூசித்தவர் சகல சித்தியையும், இந்திரநீலலிங்கத்தைப் பூசித்தவர் மோக்ஷத்தையும் அடைவார்களென்று இரத்தினலிங்க பூஜாபலன் சிந்திய விசுவாகமத்திற் கூறப்பட்டது.

சிவபெருமான் மற்றலிங்கங்களிற் போலவாணலிங்கத்தில் ஆவாகனுதிகள் வேண்டாது அனவரதமும் நீங்காதிருப்பதால் ஏனைய இலிங்க பூசையினும் வாணலிங்கபூசை விசேஷமுடையதாம்.

### சைவசமயநெறி

**நீங்காதே வாணலிங்கந் தன்னிலுறு நின்மலன்றுன்பாங்காகப் பூசையினைப் பண்.**

சுதையாலாகிய லிங்கத்தைப் பூசித்தவர் சுகத்தையடைவர். பித்திசித்திரத்தைப் பூசித்தவர் சௌந்தரியத்தைப் பெறுவர். படசித்திரத்திற் பூசித்தவர் செல்வத்தைப் பெறுவர். பத்மமண்டலத்திலும் லிங்கமண்டலத்திலும் பூசித்தவர் முறையே திருவையும் சர்வகாமத்தையு மடைவரென்று அம்சுமான் தந்திரம் செப்பும். இரசலிங்க தரிசனமாத்திரத்திலே சகல பாவங்களும் நீங்கும். இந்த லிங்கத்திற் செய்த ஒரு நாட்பூசை இஷ்டகாமியத்தைக் கொடுக்கும். இந்த லிங்கத்தை இரண்டு அல்லது மூன்று நாட்பூசை செய்த மாத்திரத்திற் சகல ஐசுவரியங்களு மெய்தும் என்று வாதுளாகமத்திற் கூறப்பட்டது.



சிவலிங்கமானது அசலலிங்கமெனவும், சலனலிங்கமெனவும். சலாசலலிங்கமெனவும் அசலசலலிங்க மெனவும் நான்கு வகைப்படும். கோபுர முதலாயின அசலலிங்கமாம். தனக்கு வேண்டியதொரு நிறத்திலே இருதயத்திற் கற்பித்துப் பூசிக்கப்படும் சிவலிங்கம் சலனலிங்கமாம். வாணலிங்கமும் இரத்தினலிங்க முதலியனவும் சலாசலலிங்கமாம். வேதிகையிலே மண்டலமிட்டுப் பூசிக்கின் அது அசலசலலிங்கமாம். வாணலிங்க முதலாயின இட்டலிங்கமாகவும் பரார்த்தத்திலே சிவசன்னிதியில் அங்கலிங்கமாகவும் பூசிக்கப்படின் சலமெனவும், பரார்த்தமாகத் தாபிக்கப்படின் அசலமெனவும் நிற்றலால் சலாசலமெனப்பட்டன. அநந்தவிசய முதலிய மண்டலங்களுள் யாதொன்று தீக்ஷைக்குச் சொல்லியபடி வேதிகையிட்டுப் பூசிக்கப்படின் அசலமெனவும் இட்டலிங்கமாக நாடோறுமிட்டுப் பூசிக்கப்படிற் சலமெனவும் நிற்றலால் அசலசலபெனப் பெயர் பெற்றன.

இட்டலிங்க பூசையானது, சுத்தம் மிச்சிரம் கேவலம் என மூவகைப்படும். சிவலிங்கமொன்றை மாத்திரம் பூசித்தல் சுத்தபூசை எனவும், சிவலிங்கத்தையும் உமாதேவியாரையும் பூசித்தல் கேவல பூசை எனவும், சௌராதி சண்டாந்தம் விரித்துப் பூசித்தல் மிச்சிரபூசை எனவும் சூட்சுமாகமம் செப்புகிறது. துறவிக்குச் சுத்தபூசையும், இல்வாழ்வானுக்கு கேவலபூசையும் மிச்சிரபூசையும், ஆசாரியனுக்கு இம்மூன்று பூசைகளுமுரியனவேயாம்.

### சைவசமயநெறி

சுத்தமுங் கேவலமு மிச்சிரமுந் தொண்டரவர்
பத்தியினு லர்ச்சிக்கும் பாங்கு.

சுத்தஞ் சிவலிங்க மொன்றுமே சுந்தரியு
மொத்துறைதல் கேவலமென் றோர்.

அருக்கன் கரிமுகவ னுதிசண் டாந்தம்
விரித்தருச்சிக் கைமிச் சிரம்.

இஷ்டலிங்கபூசையானது கேவலம் சகஜம் மிச்சிரமெனத் திரிவிதமாமெனவும், இலிங்கமொன்றையே பூசித்தல் கேவலமெனவும், கணேசர் ஸ்கந்தர் இடபதேவர் என்னும் மூவரையும் சிவன் சத்தியுடன் கூட்டி ஐவராகப் பூசித்தல் சகசம் எனவும் இந்த ஐவரோடு நிருத்தமூர்த்தி மகேசுரமூர்த்திகளைப் பூசித்தல் மிச்சிர பூசையெனவும் இங்ஙனம் வேறுபிரகாரமாக அம்சுமான் ஆகமத்திற் சொல்லப்பட்டது.

உத்தமம் முதலிய பேதங்களால் ஆத்மார்த்த பூசையானது மூன்று விதமென்று சொல்லப்படுகிறது. துவாராதி சண்டேசுராந்தமான பூசையானது உத்தமமாம். துவாராதி நைவேத்தியாந்தமான பூசை மத்திமமாம். ஸ்நானமும் நைவேத்தியமும் மாத்திரம் செய்யும் பூசை அதமமாம் என அறிக.

போகமோக்ஷங்களையடைய இச்சிக்கின்ற அடியவர்கள் சிவாகம நெறிபற்றியே ஆன்மார்த்த பூசையும் ஆலயபரார்த்த பூசை முதலியனவும் செய்தல் வேண்டும். இவைகள் வேறெந்த நூலிலும் விதிக்கப்பட்டில.



### பெரியபுராணம்

பொங்கு மாமறைப் புற்றிடங் கொண்டவர்
எங்குமாகி யிருந்தவர் பூசனைக்
கங்கண் வேண்டு நிபந்தமா ராய்ந்துளான்
துங்க வாகமஞ் சொன்ன முறைமையால்.

எண்ணி லாகம மியம்பிய விறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள்
அண்ண லார்தமை யருச்சனை புரியவாதரித்தாள்
பெண்ணி னல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

### கந்தபுராணம்

அவ்வக் காலையி லாறுமா முகனுடை யடிகள்
தெய்வக் கம்மியற் கொண்டொரு சினகர மியற்றிச்
சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை
எவ்வெக் காலமு நிலைத்ததோ ருருவுசெய் திட்டான்.

### சிவஞானசுவாமிகள்

இருண்மலந்து மிக்குஞ் சிவாகம முறையினிரு பாதமுமனுட்டித்
திருண்பெறு மாதிசைவர்களாதி யவாந்தரசை வரீருறேர்
மருவி வாழ்மாட மாளிகைப்பத்திமருங்கு டுத்துயர் வனப்பினதாற்
றெருட்டு மனுதி சைவர் வீற்றிருக்குந் திவளெ ளிப் புரிசைகம்பம்

ஆன்மார்த்த பூசையின் பொருட்டு முதலிற் பூசாக்கிருகத்தை அமைத்துக் கொள்ளுதல் வேண்டும். பூசா மண்டபமானது சிவாலயம் திருமடம் பூந்தோட்டம், புண்ணியநதீதீரம் சுத்தமான வீடு முதலிய இடங்களில் அமைக்கத்தக்கது. வீட்டிலாயின் ஈசானதிக்கில் நிருமிக்க வேண்டும். நதிதீரம் முதலியவற்றிலாயின் இஷ்டமான திக்கிலமைத்துக் கொள்ளத்தக்கதாம். அம்சுமான்

சூட்சுமம் காலோத்தர முதலிய ஆகமங்களிவ்வாறு கூறுமென அறிக. பூஜாமண்டபம் நிருமித்தற்குச் சத்தியற்றவர் சிவாலய முதலியவற்றில் சுவாமிக்குத் தென்பாகத்தில் பூசைக்கு இடத்தை அமைத்துக் கொள்ளலாமென்று காலோத்தராகமம் செப்புமென அறிக.

ஆன்மார்த்தபூசை செய்யாது பரார்த்தபூசை செய்தவர்கள் பூசையின் பயனை இழப்பதுமன்றி நரகத் துன்பத்தையுமடைவார்கள். பிரமவிட்டுணு வாதிதேவர்களும் ஆன்மார்த்த பூசை செய்தே தங்கள் தங்கள் அதிகார கிருத்தியங்களைச் செய்வர் என்று சிவதருமம் முதலியவை கூறுகின்றன. *

சைவசமய நெறி

**சிவபூசை செய்யுமுன் மற்றென்றுஞ் செய்யேல்**
**சிவபூசை செய்தபின் செய்.**

குருவுக்குச் சம்மதி கொடுத்து அவரிடத்திலேற்றுப் பூசித்த இலிங்கத்தை நன்கு பூசியாது இடையில் விடுத்த பாவிகள் நற்கதியையிழந்து குட்ட முதலிய ரோகங்களாற் பீடிக்கப்பட்டு இறந்தபின் நரகத் துன்பத்தை அனுபவித்துப் பிறவியாகிய சமுத்திரத்துட் புகுவார்கள் என்று சிவாகமம் செப்பும்.

---

* வண்டுளருந் தண்டுளாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பு
மண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்

என்பது திருவிளையாடற் புராணம்.



## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

**திருநாம மஞ்செழுத்துஞ் செப்பா ராகிற்**
**றீவண்ணர் திறமொருகாற் பேசா ராகி**
**லொருகாலுந் திருக்கோயில் சூழா ராகி**
**லுண்பதன் முன் மலர்பறித்திட் டுண்ணா ராகி**
**லருநோய்கள் கெடவெண்ணீ றணியா ராகி**
**லளியற்றார் பிறந்தவா றேதோ வென்னிற்**
**பெருநோய்கள் மிகநலியப் பெயர்த்துஞ் செத்துப்**
**பிறப்பதற்கே தொழிலாகி யிறக்கின்றாரே.**

### தனித்திருக்குறுந்தொகை

**பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்**
**நாக்கைக் கொண்டரன் நாம நவில்கிலார்**
**ஆக்கைக் கேயிரை தேடியலமந்து**
**காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே.**

சிவபூசை செய்யாதுண்டவனுடைய உணவானது புழுவுமாம்; பிணமுமாம்; புலையனுடைய மலமுமாம்; பெரும் பாவமுமாம். பானஞ் செய்யுநீரானது மூத்திரமுஞ் சுக்கிலமுமாம். அவன் சிவார்ச்சனையினின்று நீங்கிய முப்புரத்தவுணர் போலவும் தக்கனைப் போலவுந் தண்டிக்கப்படுவன். அவன் மேற்குலத்திற் பிறந்தானேனும் சிவபூசை செய்யும் அன்பர்கள் அவனைத் தீண்டினும் மனதால் நினைக்கினும் கண்களாற் காண்கினும் அவனுடைய குணங்களை வாயினாற் சொல்லினும் பாவமாம் என்று சிவதருமம், ஸ்காந்தம் முதலியவை செப்புகின்றன.

சைவசமய நெறி

**அலரினைச்சூட் டாதமலன் றுளி னருந்தன்ன
மலமாம் பிணமுமா மாசு.**

ஆசௌசதீபிகை

புண்ணியநற் சிவபூசை புரியாமற் புசித்தோன்
புழுப்புசித்தோ னேமந்தான் செய்யாது புசித்தோன்
மண்ணினிடை மலம்புசித்தோ னைந்தெழுத்து முதலா
மந்திரங்கள் செபியாமன் மறந்தேனுங் குடித்தோன்
தண்ணியலா மூத்திரமுஞ் சுக்கிலமுங் குடித்தோன்
றுனுவ னவன்றனக்குத் தந்திடுவோன் பின்னர்
நண்ணியதீ விடம்புசிப்போ னதலினு நியம
நழுவாமற் செய்திடுவ னுபத்து வரினும்.

திருவாசகம்

வாளுலா மெரியு மஞ்சேன் வரைபுரண் டிடினு மஞ்சேன்
தோளுலா நீற்ற னேற்றன் சொற்பதங் கடந்த அப்பன்
தாளதா மரைக ளேந்தித் தடமலர் புனைந்து நையும்
ஆளலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.

சிவபூசை செய்யாது அன்னபானுதிகளை மறந்தேனும் உட்கொள்ளவொண்ணுது. உட்கொள்ளுகின் அவைகளை உவாந்தித்து நீரில் ஸ்நானஞ் செய்து இருமுறை சிவபூசை செய்து அத்தினம் முழுதும் உபவசியாயிருந்து ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைப் பதினுயிரமுருச் செபித்து மற்றை நாளிற் சிவனுக்கு விசேஷ பூசை செய்து சிவாலயங்களுக்கும் சிவனடியாருக்கும் பொருள்களைத் தானஞ் செய்து சிவபூசை செய்யாது புசித்த கொடுவினை கெட விளங்கல்வேண்டும்.



வாயுசங்கிதை

*** ஆக்கையினு ளான்மாவிங் குறைவளவும்
பூசையினை யாற்றி யல்லால்
ஏக்கறவா லருந்தவொண்ணு தருந்திலவை
யெதிரெடுத்தங் கெறிநீர் மூழ்கிப்
பூக்கமழுங் குழலுமையோ டிறைமுதலை
யிருமுறைதான் பூசை செய்து
நாக்குநசை யாலற்றை நாண்முழுது
மொன்றுமருந் தாது நண்ணி.**

**ஐஞ்செழுத்தை யோர்பதினு யிரமுருத்தா
னேதிப்பின் னடுத்த நாளின்
மஞ்சுறழுங் கருங்கூந்தல் பாகனுக்கு
மாபூசை வகுத்து வாரி
நஞ்சுபொதி மிடற்றிறைக்கு மவனடியார்
தமக்குமுறு பொருள்க ணல்கி
விஞ்சியவெம் பசியினு லருந்தியவெவ்
வினைகள்கெட விளங்க வேண்டும்.**

சனனமரணு சௌசங்களில் சிவபூசையை விடவொண்ணுது. சிவமந்திரமுச்சரித்து ஸ்நானம் செய்வதனுல் சுத்தராவர். ஸ்நானம் செய்தமை முதற் பூசாந்

---

* சிவபெருமானுக்கு அழிவில்லாத அநேக திருமேனிகளுண்டு. என்று இருக்குவேதங் கூறுகின்றது. சிவபிரானை வழிபடுமடியார்கள் அன்னத்தைப் புசிப்பர் என்று அதுவே கூறுகின்றது. அஃதங்ஙனம் கூறுமுகத்தானே நாடோறுமுணற்கு முன்னச் சிவபூசை செயற்பாற்று என்னும் விதிக்கு மூலமாதலறிக எனச் சதுர்வேத தாற்பரிய சங்கிரகம் கூறும்.

தம் வரையும் தாமரையிலையில் நீர்போல அவரை ஆசௌசம் சாராது. உடையவர் பூசை செய்வோர் தம்முடைய ஆசாரியனைக்கொண்டேயாதல் தம்மூட னொத்தவரைக் கொண்டேயாதல் பூசை செய்வித்துப் பூசாந்தத்திலே தாம்புறமண்டபத்தினின்று புஷ்பாஞ் சலித்திரயஞ்செய்து நமஸ்காரம் பண்ணக்கடவர் என்று அம்சுமான் மதங்கம் முதலிய ஆகமங்கள் செப்புகின் றன.

வியாதியினாலே தம் கை கால்கள் தம் வசமாகா திருப்பின் தம்முடைய ஆசாரியரைக் கொண்டேனும் தம்மோடொத்தவரைக் கொண்டேனும் தம்முடைய பூசையைச் செய்வித்துத் தாம் அந்தர்யாகஞ் செய்யக் கடவர்.

சைவசமய நெறி

செய்விக்க தன்னோடொத் தாராற் சிவபூசை
கைகால் செயலற்றக் கால்.

இராச பயத்தினாலும், சோரபயத்தினாலும் பெரிய நோயினாலும், சிவபூசையும் அநுட்டானங்களுந் தவ றின் பாவம் வருமென்று அஞ்சற்க. பின்பு ஆசாரிய னைக் கொண்டு ஒரு கால பூசை தவறின் அதற்கேற்ற பிராயச்சித்தம் செய்விக்க.

சைவசமய நெறி

அரசர்பயத் தாற்சோர ராலருநோ யாலு
மொருவிற் சிவபூசை யும்.
ஆகுமே பாவமென் றஞ்சேல்பின் றேசிகனு
லாகுமுறை யாற்பூசை யாக்கு.



தான் கைக்கொண்ட சிவலிங்கங் காணாவிடத்து அந்தர்யாகபூசை செய்து, இளநீர், பால், பழம் முதலி யவற்றை யுண்டு நாற்பது நாளிருக்கவேண்டும். இலிங் கம் வந்ததாயின், இலிங்கசுத்தி செய்து முன்போற் பூசிக்கவேண்டும். இலிங்கம் வராதொழியின், வேறொ ரிலிங்கத்தைக் குருவானவர் தரப் பெற்றுக்கொண்டு முன்போற் பூசை செய்யவேண்டும். அதன்பின் முன் பெற்றுக் கொண்ட லிங்கம் வந்ததாயின், இரண்டை யும் கிரமமாகப் பூசிக்கவேண்டும். ஆகையினால் எல் லாப் பிரயத்தினத்தாலும் மரணாந்தம் சிவபூசை செய் தல் வேண்டுமென்று அம்சுமான் தந்திரம் நவிலுகின் றது.

யாவராயினும் தாம் தீக்ஷை பெறுவதற்கு முன் குரு வையும் சிவலிங்கத்தையும் குணகுற்றங்களைப் பெரி யோர் பலருடனே சந்தேக விபரீதமற ஆராய்ந்து கொண்டே அதன்பின்பு சற்குரு என்று துணியப்பட்ட வனிடத்திலே தீக்ஷை பெற்று நல்லிலக்கணமென்று துணியப்பட்ட உடையவரை எழுந்தருளப் பண்ணிக் கொள்ளவேண்டும். தன்னுடைய ஆசாரியன் சிவநிந்தை முதலிய பெரும் பாவங்களைச் செய்து கெடுவானாயின் அவனையிகழாது மனநொந்து கைவிட்டு வேறோர் குரு வையடைந்து வழிபட்டுய்யவேண்டும்.

ஆசாரியனிடத்திலே தான் ஏற்றுக்கொண்ட இலிங் கத்தை அழகற்றதென விடுத்து வேறொரு லிங்கத்தைப் பூசிப்பவன் ஊர்த்துவ கதியை அடையமாட்டான். அழ கிய வேறு இலிங்கத்தை விரும்பியவன் முதலிலேதான் ஏற்றுக்கொண்ட இலிங்கத்தை விடாது அதனோடு தான் விரும்பிய இலிங்கத்தையும் இன்னுமோரிலிங்கத்தையும் கூட்டி மூன்று லிங்கமாகப் பூசிப்பானாயின் போகத்தை யும் மோக்ஷத்தையும் அடைவான்.

### சைவசமய நெறி

கைக்கொண்ட லிங்கத்தைக் கைத்தழகு கூரிலிங்கங்
கைக்கொள்ளேல் வேண்டிற் கதி.

மற்றையொரு லிங்கத்தின் வாஞ்சையுநின் முன்னிலிங்கப்
பற்றொழியேன் மூன்றிலிங்கம் பாங்கு.

சிவபூசைக்கு ஓரிலிங்கமும் மூன்றிலிங்கமும் ஐந்திலிங்கமும் உரித்தாம். நான்கிலிங்கமும் இரண்டிலிங்கமும் எப்போதும் வியாதிக்குக் காரணமாம்.

ஒன்றுமூன் றைந்து முரித்தர்ச் சனைக்குநான்
கென்றுமிரண் டும்பிணிக்கு மேது.

சிவபூசையின் பெருமையை உலகத்தாருக்கறிவிக்க நினைந்த பேரருளாலே உலக மாதாவாகிய உமாதேவியாரும், விநாயகக் கடவுளும் சுப்பிரமணியக் கடவுளும் பூவுலகத்தையடைந்து காஞ்சீபுரம், திருச்செங்காடு, செருத்தணி முதலிய சிவஸ்தலங்களிற் கர்மசாதாக்கியத் திருவுருவைப் பூசித்து விளங்கினார்கள்.

### காஞ்சிப்புராணம்

அகிற்புகை தீபமெல்லா மினிதளித் தாக்கு நன்னீர்
மகிழ்ச்சியிற் சுழற்றிப் பல்கால் வலஞ்செய்து வணங்கிப் போற்றி
யிகப்பிலஞ் செழுத்து மெண்ணி யின்னன பிறவு மாற்றி
முகிழ்த்தபே ரன்பி னூன்ற பூசனை முற்றச் செய்தாள்.

### கந்தபுராணம்

மீண்டுசெங் காட்டி லோர்சார் மேவிமெய்ஞ் ஞானத் தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித் தேத்திப்
பூண்டபே ரன்பிற் பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகு மனைய தானங் கணபதிச் சரம தென்பார்.



இவ்வரை யொருசார் தன்னி லிருநுதோ ளுடைய வெந்தை
மைவிழி யணங்குந் தானும் மாலய னுணரா வள்ள
லைவகை யுருவி லொன்றை யாகம விதியா னுய்த்து
மெய்வழி பாடு செய்து வேண்டியாங் கருளும் பெற்றான்.

திருநந்தி தேவர், கோடிருத்திரர், விட்டுணு, பிரமா, காளி, இலக்குமி, சரஸ்வதி, மார்க்கண்டேயர், அகத்தியர், வசிட்டர், பதஞ்சலி, வியாக்கிரபாதர், திக்குப் பாலகர்கள், நவக்கிரகங்கள், துருவன், தக்கன், வாணாசுரன், வசுக்கள், சைவசமயாசாரியர்களாகிய நாயன்மார்களுள் அநேகர், பட்டினத்தடிகள் சேந்தனார் முதலிய பலருஞ் சிவார்ச்சனைப் பெருமையினாலன்றோ தாந்தாம் விரும்பியவைகளைப் பெற்றின்புற்றனர். உயர்ந்த பிறப்பினரன்றிக் கீழ்ப்பிறவிகளாகிய நாகம், சிலந்தி யானை, நாரை, கரிக்குருவி முதலியனவுஞ் சிவார்ச்சனை செய்து முத்தியடைந்தன.

## சுந்தரமூர்த்தி நாயனார்

### பண் — தக்கேசி

இயக்கர் கின்னரர் யமனொடு வருண
    ரியங்கு தீவளி ஞாயிறு திங்கள்
மயக்க மில்புலி வானர நாகம்
    வசுக்கள் வானவர் தானவரெல்லாம்
அயர்ப்பொன் றின்றிநின் றிருவடி யதனை
    யர்ச்சித்தார் பெறு மாரருள் கண்டு
திகைப்பொன் றின்றிநின் றிருவடி யடைந்தேன்
    செழும்பொழிற்றிருப் புன்கூ ருளானே.

## திருநாவுக்கரசு நாயனர்

### திருக்குறுந்தொகை

**வேட்களத்துறை வேதிய னெம்மிறை**
**ஆக்களேறுவ ரானஞ்சு மாடுவர்**
**பூக்கள் கொண்டவன் பொன்னடி போற்றிஞற்**
**காப்பர் நம்மைக் கறைமிடற் றண்ணலே.**

### சூதசங்கிதை

**வானவ ரியக்கர் சித்தர் கருடர் கின்னரர் மாநாகர்**
**தானவர் நிருதர் விச்சாதரர் முனிவரர் கண்மற்றை**
**மானவ ரிவருள் யாரேமதி முடிப்பெரு மான்பாதத்**
**தானவர்ச் சனைசெயா தாரச் சிறப்பு ரைப்பினீளும்.**

சிவபூசையை மூன்று காலஞ் செய்ய; அல்லது இரண்டு காலமாவது சத்தியற்றவர்கள் ஒரு காலமாவது தவருது செய்யவேண்டுமென்று அஜிதாகமத்திலும் காரணத்திலும் சுவாயம்புவத்திலும் காலநியமம் பிரதிபாதிக்கப்பட்டது.

**திரிகாலத் தும்பூசை செய்கவிட்ட லிங்கத்**
**தொருகா லிருகாலத் தும்.**

ஆன்மார்த்த பூசையை மனவுறுதியுடன் செய்தவர்கள் பிரமகத்தி முதலிய பாவங்களையும் பகைகளையும் நீங்குவார்கள். மூவுலகு ஐசுவரியங்களையும் பலவிதமான தானங்களாலும் யாசங்களாலும் எய்தற்பாலனவாகிய பலன்களையும் வெற்றியையும் செல்வத்தையும் ஆரோக்கியத்தையும் கீர்த்தியையும் அடைவார்கள். ஆணவமலத்தை வென்று மோக்ஷத்தை அடைபவர்களாயும் விளங்குவார்கள் என்று ஆத்மார்த்தபூஜா



மகாத்மியம், சூக்ஷமம் முதலிய சிவாகமங்களிலும் புராணங்களிலும் இதிகாசங்களிலும் விஸ்தரித்துச் சொல்லப்பட்டிருக்கிறது.

சிவார்ச்சனைக்கு அன்பிஞலே தொண்டு செய்தவர்களும் பூசையைத் தரிசித்தவர்களும் பிறவித்துன்பத்தை நீக்கும் மெய்யறிவு பெற்றுச் சிவலோகத்தை அடைவார்கள். சிவார்ச்சனையின் பெருமையைக் கேட்டவர்களும், கேட்போருள்ளம் மகிழ அதனைச் சொன்னவர்களும், நமக்கும் இவ்விதம் சிவபூசனை செய்யும் பேறு கிடைக்குமோ என்று விரும்பினவர்களும், சிவபூசைக்கு உபகரணங்களைக் கொடுத்தவர்களுமாகிய இவர்கள் சிவபுரத்தை அடைந்து அங்கேயுள்ள போகங்களை அனுபவிப்பார்கள். சிவலோகத்திலுள்ள போகங்களை விரும்பாதவர்கள் அங்கேயிருந்து பரிபக்குவராய்ப் பரகதி அடைவார்கள்.

### சூதசங்கிதை

**இத்தகைய சிவபூசை யியற்றுனரைப் பணிவோரு மேத்துவோருஞ்**
**சித்தமுற நினைவோரு மேலாய சிவலோகஞ் சேர்ந்து வாழ்வர்**
**அத்தனுரைத் தருளியநல் லாரணமாகம மிவ்வாறறையா நிற்கும்**
**உத்தமமா முனிவீர் காளிதனுலுண்டாகாத தொன்றுமின்றே.**

## திருநாவுக்கரசு நாயனர்

### தனித்திருக்குறுந்தொகை

**வாழ்த்த வாயு நினைக்க மடநெஞ்சும்**
**தாழ்த்தச் சென்னியுந் தந்த தலைவனைச்**
**சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே**
**வீழ்த்த வாவினையே னெடுங் காலமே.**

## மாணிக்கவாசக சுவாமிகள்

சித்தமே புகுந்தெம்மை யாட்கொண்டு தீவினை கெடுத்துய்யலாம்
பத்தி தந்துதன் பொற்கழற்கணே பன்மலர் கொய்து சேர்த்தலு
முத்திதந் திந்த மூவுலகுக்கு மப்புறத் தெமை வைத்திடு
மத்தன் மாமலர்ச் சேவடிக் கணஞ்சென்னி மன்னி மலருமே.

முத்தனே முதல்வா முக்கணா முனிவா
மொட்டறு மலர் பறித் திறைஞ்சிப்
பத்தியாய் நினைந்து பரவுவார்தமக்குப்
பரகதி கொடுத்தருள் செய்யுஞ்
சித்தனே செல்வத் திருப்பெருந் துறையிற்
செழுமலர்க் குருந்தமே வியசீர்
அத்தனே யடியே னுதரித் தழைத்தால்
அதெந்து வேயென்ற ருளாயே.

பகிர் முகமாகிய கிரியா பூசையைப் பிரதானமாய் அந்தர்யாகத்தில் சிறிது தரிசனமுங் கூடி அந்தர் யாகமென்றும் பகிர்யாகமென்றும் பூசிப்பது கிரியா பூசையாம். பகிர்முகமாகிய கிரியா பூசையினும் தரிசனம் விட்டு நீங்காதிருத்தலால் இந்த இருவகைப்பட்ட பூசைகளும் ஒரே தன்மையினவாய் அறிந்து செய்தல் ஞான பூசையாம்.

### சதாசிவரூபம்

இந்த நிலையிற் றரிசன மென்று
நந்தா திருப்பது ஞான பூசை
அந்த ரியாகமு மாம்புற யாகமும்
இந்த நெறிபிறி வில்லா தாதலிற்
புந்தியில் ஞான பூசையென் றதுவே.



# சூரிய பூசை

அஸ்திர மந்திரமயமான விமானத்தின் மத்தியை யடைந்தவனுய்ப் பிருதிவியாதி மாயாந்தமான முப்பத்தொரு தத்துவங்களையும் சோபானக்கிரமமாக மனசாற் கடந்து, சுத்த வித்தியாமயமான பூசாத்தானத்தை அடைந்ததாகப் பாவித்துப் புஷ்பாதி பூசோபகரணங்களைச் சேகரித்துக்கொண்டு கிழக்கு முகமாக ஆசனத்திலிருந்து சூரிய பூசை செய்க.

### ஆசன பலன்

பூசை, செபம் முதலியவைகளைச் செய்யும்பொழுது விதிக்கப்பட்ட ஆசனங்களின் மீதிருந்து செய்தல்வேண்டும். தருப்பாசனத் திருப்பின் கீர்த்தியையும், யாகத்துக்குரிய மரப்பலகைகளில் இருந்தால் சம்பத்தையும் வஸ்திராசனத்திருந்தால் வியாதி நீக்கத்தையும், கம்பளத்திருந்தாற் சௌக்கியத்தையும், புலித்தோலில் இருந்தாற் சம்பத்தையும் மோக்ஷத்தையும், மான்றோலில் இருந்தால் ஞானத்தையும், கூர்மாசனத் திருந்தாற் போகமோக்ஷத்தையும் அடைவர்.

நிலத்திலிருந்து செய்தவர்கள் துக்கத்தையும், கல்லிலிருந்து செய்தவர்கள் ரோகங்களையும், இலையின் மீதிருந்து செய்தவர்கள் மனச் சஞ்சலத்தையும், மூங்கிற் பாயிலிருந்து செய்தவர்கள் கஷ்டத்தையும் தரித்திரத்தையும் அடைவார்கள். இவ்வாறு ஆசன நியமம் சூட்சுமம், அம்சுமான் முதலியவைகளிற் கூறப்பட்டது.

## சூரியசகளீகரணம்

ஓம் ரஃ அஸ்திராயபட் என்று வலக்கரத்தால் இடக் கரத்தையும் இடக்கையினுல் வலக்கையையும் உள்ளும் புறமும் சோதித்து, ஓம் ஹ்ரும் ஹ்றீம் ஸஃ சிவசூரி யாய வௌஷட் என்று சேர்த்துப், பெருவிரல்களில் சுட்டுவிரல்களினுல் ஓம் அம் இருதயாய நமஃ என் றும், சிறுவிரல் மோதிரவிரல் நடுவிரல்களில் பெருவிரல் களால் ஓம் அம் அர்க்காயசிரசே நமஃ, ஓம் அம் பூர்ப்புவஸ்வரோம் சுவாலிநீ சிகாயை நமஃ, ஓம் அம்ஹ்றூம் கவசாயநமஃ என்று நியசித்து, உள்ளங் கைகளில் நடுவிரல் சுட்டுவிரல்களால் ஓம் பாம் பாநு நேத்திராப்யாம் நமஃ என்றும், சுட்டுவிரல்களில் பெரு விரல்களால் ஓம் ரஃ அஸ்திராயபட் என்றும் நியசித் துக் ஓம் ஹ்றூம் கவ்சாய நமஃ என்று அவகுண்டனஞ் செய்து, ஓம் சிவசூர்யாய வௌஷட் என்று கைகளைக் கூட்டிக் குவித்து நியசிக்க.

வலக்கைப் பெருவிரல் அணிவிரல்களினுல் இருத யத்தில் இருதய மந்திரத்தையும், சிரசிற் சிரோமந்திரத் தையும், சிகையிற் சிகாமந்திரத்தையும், தர்ச்சனிகளாற் கண்டத்தைச் சுற்றித் தனமத்தியாந்தமாகக் கவசத்தை யும், நியசித்து, நடுவிரல் சுட்டுவிரல்களினுலே நேத்தி ரங்களில் நேத்திரத்தை நியசித்து, †அத்ததலங்க ளில் அநாமிகைகளினுல் அஸ்திரத்தை நியசித்து, அஸ் திரத்தினுல் தாளத்திரயமும் சோடிகா முத்திரையினுல் பத்துத் திக்குகளிலும் அஸ்திரமுச்சரித்துத் திக்குபந்த னமும் கவசத்தால் அவகுண்டனமும் பண்ணிச், சர் வாங்கமும் சூரிய மூலத்தினுல் மகாமுத்திரை தரிசிப் பித்துத் தன்னைச் சூரிய சொரூபமாகப் பாவித்தல் வேண்டும்.

---

† அத்ததலம் — உள்ளங்கை.



## தர்சனுர்க்கியம்

பின்பு தாமிர பாத்திரத்தில் இரத்த புஷ்ப *முதலிய வற்ரேடு ஜலத்தைப் பூரித்து எழுந்து பூமியில் முழந் தாள்களை யூன்றிக்கொண்டு இரண்டு கைகளாலும் எடுத் துச் சிரம்வரையுங் கொண்டுபோய் ஓம் ஹ்ரும் ஹ்றீம் சஃ சிவசூர்யாய நமஃ என்று தர்சனுர்க்கியங் கொடுத்து இயன்றவரை சூரிய மூலமந்திரத்தைச் செபிக்க என்று சிந்தியாகமம் கூறுகின்றது.

## அர்க்கியம்

பின்பு, அஸ்திரமந்திரத்தால் அருக்கிய பாத்திரத் தைக் சுத்திசெய்து ஜலம் நிறைந்த அபிஷேக கல சத்தை இருகரங்களினுலும் புருவ நடுவரை உயர்த் திக்கொண்டுபோய், அங்கேயுள்ள அருணபிந்து தாரையை எடுத்ததாகப் பாவித்து, அதை இறக்கிக் கொண்டுவந்து, ஓம் கம் கலோல்காய நம; என்று அருக்கியபாத்திரத்திலே பூரித்துச், செந்நிறப் புஷ்பம் அக்ஷதை, முதலியவற்றை இட்டு சூரிய ஷடங்கங்களா லும் மூலமந்திரத்தாலும் பூசித்து, அஸ்திரத்தால் திக்குபந்தனமும், கவசத்தால் அவகுண்டனமும் வௌஷட் என்பதை இறுதியாகவுடைய மூலத்தால் தேநுமுத்திரையுங் கொடுத்து, அந்தச் சலத்தினுல் பூசாத்திரவியங்களையும் தன்னையும் பூசாத்தானத்தை யும் அஸ்திரத்தாற் புரோக்ஷிக்க. அஸ்திரத்தால் புஷ் பத்தை மேலே சிதறுதலினுல் விக்கினங்களைப் போக்கி, வேதிகையில் எழுதப்பட்ட அட்டதள பத்மத்திலாதல் தாமிராதி லோகங்களினுற் செய்யப்பட்ட பத்மத்திலா தல் சூரியனைப் பூசிக்க.

---

* முதலிய என்றதனுல் செஞ்சந்தன முதலியவை கொள்ளப்படும்.

"சூரியனை பிரதிமையிலாவது சக்கரத்திலாவது பதுமத்திலாவது பூஜிக்க" என்று அம்சுமான் தந்திரம் செப்புகின்றது.

## துவாரபூசை

மேற்குத் துவாரத்தின் தென்புறத்தில் சென்னிறமும், †பெருத்தவயிறும் தூங்கிய தாடியும், வலக்கரத்தில் எழுது கோலும், இடக்கரத்தில் மசிபாத்திரமுமுடையவரும், ஆன்மாக்கள் செய்கின்ற கன்மங்களை எழுதிக்கொண்டிருப்பவருமாகத் தண்டி என்பவரைத் தியானிக்க.

துவாரத்தின் வடபாகத்தில் சிவப்பு நிறமும், வலக்கைச் சுட்டுவிரலை நீட்டி அச்சுறுத்துதலும், சர்வபூஷணலங்காரமும், இடக்கையில் தண்டமுமுடையவருமாகிய பிங்கலர் என்பவரைத் தியானிக்க.

ஈசானதிக்கிலே செந்தாமரை ஆசனத்தில் இருப்பவரும், தந்தம் பாசம் அங்குசம் மாம்பழம் ஆகிய இவைகளைத் தரித்தவரும், யானைமுகத்தை யுடையவருமாகிய கணபதியைத் தியானிக்க.

அக்கினிமூலையில் விபூதியை உத்தூளனமாகப் பூசியதால் வெண்ணிறச் சரீரத்தையும், சடாமகுடத்தையும், யோகபட்டத்தையும், *நாபிக்குமேல் பொருந்திய பூணூலையும், யோகமுத்திரையையும், சாந்தகுணத்தையுமுடையவராகிய குருவைத் தியானிக்க.

---

† தூலதேகமும் என்றும் கூறுதலுமாம்.

* நாபிக்குமேற் பொருந்திய சிந்முத்திரையையும் என்பதுமாம்.



## ஆசனபூசை

பதுமத்தின் நடுவில் ஓம் அம் பிரபூதாசனயநம: என்று சுவேத பீடத்தை அருச்சிக்க; அக்கினி முதலிய நான்கு கோணங்களிலும் வெண்மை நிறமுள்ள விமலன், செம்மை நிறமுள்ள சாரன், பொன்மை நிறமுள்ள ஆராத்தியன், பச்சை நிறமுள்ள பரமசுகன் என்னும் நான்கு சிங்கங்களைப் பூசிக்ச, அதற்குமேல் பத்மாசனத்தைக் கர்ணிகையோடு கூடியதாக அருச்சித்துக், கிழக்கு முதலாக எட்டுக் கேசரங்களினும் தீபச்சுவாலைபோன்றவர்களாகத் தியானிக்க. அல்லது ஒருகரத்தில் சாமரையையும் ஒருகரத்தில் தாமரைப் புஷ்பத்தையும் தரித்தவர்களும், சிவப்பு நிறமும் ஆபரணங்களை அணிந்தவர்களுமாகிய தீப்தை சூட்சுமை ருசை பத்திரை விபூதி விமலை அமோகை வித்யுதை கர்ணிகையின் ஈசானத்தில் சர்வதோமுகி என்னும் நவசக்திகளைப் பூசித்து, தேவசாந்நித்தியமாக விஸ்புரமுத்திரை கொடுத்துச் சூரியனுக்கு ஆசனத்தைக் கற்பித்து மூர்த்தியைப் பூசிக்க.

## சூரியதியானுதி

வெண்டாமரைப் பூவின்மேல் விளங்குகின்ற பேரொளி பொருந்திய சிவந்த விருத்த மண்டலத்தின் நடுவிலிருப்பவரும், மாதுளம்பூப்போன்ற பிரகாசத்தையுடையவரும், இருதோள்களிலும் சார நாளத்தோடு கூடிய இருவெண்டாமரைப் புஷ்பங்களையேந்திய இரண்டு கைகளையுடையவரும், ஒரு திருமுகமும் இரண்டு கண்களுமுடையவரும், சிவப்பு வஸ்திரத்தைத் தரித்தவருமாகிய சூரிய மூர்த்தியைத் தியானித்து மூலமந்திரத்தால் ஆசனத்தில் மூர்த்தியை நியாசஞ் செய்து நேத்திர முத்திரை கொடுத்துப் புஷ்பாஞ்சலியை யுடையவனாய், லலாடத்தில் விளங்குகின்ற அருணபிந்து அஞ்சலிக்குள் வந்ததாகத் தியானித்து மூல

மந்திரத்தை உச்சரித்து ஆவாகனம், ஸ்தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம் பண்ணி, பிம்பமுத்திரை தரிசிப்பிக்க.

இருதயாதி அங்கங்களில் இருதயாதி மந்திரங்களை நியசித்து, மூலமந்திரத்தால் ஒன்ருக்கி, இரட்சை அவகுண்டனம் அமிர்தீகரணஞ் செய்து, மகாமுத்திரையும் காண்பித்துப், பாத்தியாதி கொடுத்து, வௌஷடந்தமான மூலத்தினுல் புஷ்பம் அறுகு அக்ஷதாதிசாத்திப், பாவனுபிஷேகம் செய்து, சிவப்பு வஸ்திரம் கந்தம் முதலியவற்ருல் அலங்கரித்துப், புஷ்பாஞ்சலித்திரயும் சமர்ப்பித்து, அருக்கியங் கொடுத்துப், பத்மமுத்திரையும் பிம்பமுத்திரையுங் காண்பித்துச் சிவசூரியனைப் பூசிக்க. அந்த அந்த அங்கங்களில் லயாங்க பூசை செய்க.

### போகாங்கம்

அக்கினி ஈசானம் நிருதி வாயு என்னுந் திசைகளிலுள்ள தளங்களில் இருதயாதி அங்கங்களைப் பூசிக்க. முன் தளத்தில் நேத்திரத்தையும், கிழக்கு முதல் நான்கு தளங்களிலும் அஸ்திரத்தையும் பூசிக்க. இருதயாதிகளுக்குத் தேனு முத்திரையையும், நேத்திரத்துக்குக் கோவிஷாண முத்திரையையும், அஸ்திரத்துக்குத் திராசனீ முத்திரையையும் காண்பித்து அர்க்கியங் கொடுக்க.

### சோமாதி ஆவரணம்

பின்பு கிழக்கு முதலிய தளாக்கிரங்களில் சோமன், புதன், பிரகஸ்பதி, பார்க்கவன் என்னும் இவர்களையும், அக்கினி முதலிய தளாக்கிரங்களில் அங்காரகன், சனி, ராகு, கேது என்னுமிவர்களையும் பூசித்து, நமஸ்கார முத்திரை கொடுக்க. சூரியனுக்கு வலப்பாகத்திலும் இடப்பாகத்திலும் உஷாதேவியையும் பிரத்தியுஷா தேவியையும் பூசிக்க.



### தூபதீபாதி

தூபதீப நைவேத்தியாதி கொடுத்து அர்ச்சித்து, மூலமந்திரத்தையும் அங்கமந்திரத்தையும் இயன்றளவு செபித்து, பூஜாசமர்ப்பணஞ் செய்து தோத்திரம் பண்ணிப் பராமுகார்க்கியங் கொடுத்து, அஸ்திராய ஹூம் பட் என்று நாராசமுத்திரையினுல் அங்காதி மந்திரங்களை எழுப்பித் திவ்விய முத்திரையினுல் சூரியனிடத்தில் யோசித்து, மூலத்தால் இருதயகமல மத்தியனை சிவசூரியனிடத்தில் யோசிக்க.

### சண்டபூசை

ஈசானத்தில் தேசச் சண்டேசுரனைப் பூசித்துச் சூரிய நிர்மாலியங்களை யொப்பித்து விசர்ச்சனஞ் செய்க. சிவபூசை செய்ததின்மேல் இச்சண்டேசுர பூசை செய்து விசர்ச்சனம் செய்தலுமாம்.

### விளக்கம்

மேகசூரோத்தரத்தில் சூர்யபூசை, அந்தர்யாகம், சிவலிங்கபூசை, அக்கிநிகாரியம், குருபூசை, ஆகம புஸ்தகபூசை என்னும் ஆருதார சிவார்ச்சனையும் நித்தியமும் செய்யத்தக்கது" எனக் கூறப்படுதலால், சூரிய பூசையை நித்தியமுஞ் செய்யவேண்டுமென்பது துணியப்படும். ஆதித்தியன் சிவம் என்றும், சிவமே ஆதித்தியன் என்றும் இருவருக்கும் பேதமின்று என்றும் வாதுளாகமம் செப்பும்.

சிவபெருமான் தாம் எப்பொருள்களினும் வியாபித்துள்ளவர் என்பதை ஆன்மாக்களுக்கு உணர்த்துங் காரணமாக அஷ்டமூர்த்தங் கொண்டமையால், சிவ பூசைக்கு அங்கமாகச் செய்யப்படும் சூரிய பூசையிலும் பலப்பிரமதனி என்னுஞ் சத்தியை அதிட்டித்து

உருத்திர மூர்த்தியாகிக் கன்மவினையால் வந்த குட்டம் முதலிய ரோகங்களை நீக்கிச் சிவபதவி அடையச் செய்வரென்பதே இக்கிரியையின் பாவனையாகும்.

அருக்கன் பாதம் வணங்குவ ரந்தியில்
அருக்க னாவா னரனுரு வல்லனோ
இருக்கு நான்மறை யீசனை யேதொழுங்
கருத்தினை நினை யார்கன் மனவரே.

எனவருந் திருநாவுக்கரசு சுவாமிகள் திருக்குறுந் தொகைத் தேவாரமும்,

"விரிந்தபல் கதிருடையதோர் வெய்யவ னடுவட்
பொருந்தி வைகிய கண்ணுதற் பரமனே போன்றான்"
"மாறிலா வருக்க னுப்பண் வைகிய பரம னேபோல்
ஆறுமா முகத்து வள்ள லலங்குளைப் புரவி மான்றே ரேறினான்"

எனக் கந்தபுராணமும் கூறுவது காண்க.

சூரியனுக்குச் சகளத் தன்மை இருத்தலினால் முதலிற் சூரியபூசை பண்ணவேண்டும் என்பது நூற்றுணிபு. அம்சுமதியில் சூரியன் சகளம்; நிஷ்களர் சிவபெருமான்; புத்திமானானவன் சூரியனை முதலிற் பூசித்துப் பின்பு சிவனைப் பூசிக்கவேண்டும் என்று கூறப்பட்டது.

சௌரபூசையை முத்திகாமிகளுஞ் செய்யவேண்டுமோ எனில்; புத்திகாமிகளும் முத்திகாமிகளுமாகிய இருபாலாரும் நித்தியமும் அவசியஞ் செய்யவேண்டுமென ஷட்சகஸ்ரிகையிற் கூறப்படுவதால் முமுட்சுக்களாலும் சூரியபூஜை செய்யத்தக்கது என்பதாம்.

சூரியனது துவாரபாலகர்களாகிய தண்டியையும் பிங்களரையும் நந்தியும் மகாகாளருமாகவும், அருக்கனைச் சிவனாகவும், சந்திராதி எட்டுக் கிரகங்களையும் அஷ்டவித்தியேசுரராகவும் கொள்ளுக என்று ஞானரத்தினாவளி கூறுகின்றது.



சூரியபூசையும் சித்திப்பொருட்டுச் செய்வதும் முத்திப் பொருட்டுச் செய்வதுமென இருவகையினதாம். சித்தியை விரும்பியவர்கள் சத்தி சமேதராகவும், முத்தியை விரும்பியவர்கள் சத்தியின்றியும் பூசிக்க என்று வாதுளாகமம் செப்புகின்றது. சோமன் முதலிய கிரகங்களை முறைப்படி பூர்வாதி தளாக்கிரங்களிலும், ஆக்கினேயாதி தளாக்கிரங்களில் அங்காரகன் முதலிய கிரகங்களையுந் தியானபூர்வமாகப் பூசிக்கவேண்டும் என்று கிரணாகமம் புகலுகின்றது.

சூரியனது சண்டர் தேசசண்டர் எனப்படுவர். அது, "சூரியனுக்குத்தேசகண்டர்; விநாயகருக்குக்கும்பசண்டர்; சுப்பிரமணியருக்குச் சுமித்திரசண்டர்; உமைக்கு யமனீசண்டர்; சிவனுக்குத் துவனிசண்டர்; இங்ஙனம் பஞ்சசண்டர்கள் சொல்லப்படுகிறார்கள்" எனச் சிவாகமம் செப்புவதால் அறியத்தக்கது.

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### கோளறுதிருப்பதிகம்

பண் — பியந்தைக் காந்தாரம்

வேயுறு தோளிபங்கன் விடமுண்ட கண்டன்
மிகநல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை முடிமேலணிந்தெ
னுளமே புகுந்த வதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி
சனி பாம்பிரண்டு முடனே
ஆசறு நல்ல நல்லவை நல்ல நல்ல
வடியார வர்க்கு மிகவே.

உ

# சிவபூசை

## ஆசமனம்

பின்பு வடக்குமுகமாக ஆசனத்தின் மீதிருந்து ஆசமனஞ் செய்து விபூதி தரித்துச் சகளீகரணம் பண்ணுக.

## ஆசமனம்

ஓம் ஹாம் ஆத்மதத்வாய ஸ்வதா என்று ஆசமித்தலால், அத்தத்துவாதிபராகிய பிரமா பிரசன்னராகி ஆன்மதத்துவம் இருபத்து நான்கையுஞ் சுத்தி செய்வர். பின்பு திருவருட்சத்தி ஆன்மதத்துவம் இருபத்து நான்கினுங் கட்டப்பட்ட வினைகளை நீக்க, அவ்வினை காரணமாகவுள்ள ஆன்மதத்துவத் தொடர்பு நீங்கும். பின்பு ஆன்மா அத்தத்துவங்களிலுள்ள தநு கரண புவன போகங்களைச் சென்றடைய மாட்டாதென அறிக. இதனால் இருக்கு வேதம் பிரீதியடையும்.

ஓம் ஹீம் வித்தியாதத்துவாய ஸ்வதா என்று ஆசமித்தலால், அதற்கு அதிபராகிய விட்டுணு பிரசன்னராகி வித்தியாதத்துவம் ஏழையுஞ் சுத்தி செய்வர். பின்பு திருவருட்சத்தி வித்தியாதத்துவம் ஏழினுங் கட்டப்பட்டிருக்கும் வினைகளை நீக்க. அவ்வினை காரணமாகவுள்ள வித்தியாதத்துவத் தொடர்பு நீங்கும். பின்பு ஆன்மா அத்தத்துவத்திலுள்ள தநுகரண புவன போகங்களைச் சென்றடைய மாட்டாதென அறிக. இதனால் யசுர்வேதம் பிரீதியடையும்.

ஓம் ஹூம் சிவதத்வாயஸ்வதா என்று ஆசமிப்பதால் அதற்கு அதிபராகிய உருத்திரர் பிரசன்னராகிச் சிவதத்துவத்லமைந்தனுள் சுத்தவித்தை ஈசுவரம் சாதாக்கியம் என்னும் மூன்று தத்துவங்களைச் சுத்திசெய்வர்.



பின்பு திருவருட் சத்தி இத்தத்துவங்களிற் கட்டப்பட்ட வினைகளை நீக்கிச் சிவகதி அடையச் செய்யும். இதனாற் சாமவேதம் பிரீதியடையும். உதடுகள் இரண்டையுந் துடைத்தலால் அதர்வண வேதமும் அதோமுகமாகத் துடைத்தலால் விநாயகரும் பிரீதியடைவர்.

## நியதிப்பயன்

"தருசுத்த வாச மனஞ்செய்த தாற்பயன் சாற்றிடுவன்
கருவுற்ற தத்வ மிருபத்து நாலுங் கழன்றிடுமே"

"வித்தியா தத்துவ மேழு மருஞ்சுத்தி மேவுமல்லாற்
சுத்த சிவதத் துவமைந்தின் மூன்றுமச் சுத்தியுறும்
மைத்திடுஞ் சத்தி சிவத்துக்குஞ் சுத்தி மருவலின்று
மொத்திடுஞ் சத்தி மனாலயத் தானமென் றோதிடுமே."

## சைவசமயநெறி

செய்பிரம தீர்த்தத்தா †லாசமனஞ் செப்பியே
*உய்யவந்த தத்துவமூன் றும்.

## தொடுமிடம்

பெருவிரலில் ஈசுவரனும் அணிவிரலில் அமிர்தகலையும் அதிபர்களாகப் பராக்கியை கூறுதலின் பெருவிரலோடு கூடிய அணிவிரலால் முகமுதலிய தானங்களில் தொடுதல் வேண்டும். இவ்வாறு செய்வதனால், சிவதேஜசின் சேர்க்கையோடு கூடிய அணிவிரலினின்று உண்டான அமிர்த தாரையினால் திருப்தி அடைந்த அதிதேவர்கள் அவ்வத் தானங்களைச் சுத்திசெய்து கிரியைக்கு யோக்கியத்தை உண்டுபண்ணுவார்கள்.

---

† பிரமதீர்த்தமாவது தர்ச்சனி அங்குட்டங்களினடு.

* உய்யவந்த தத்துவ மூன்றும் என்பதற்கு—தோன்றிய மூவித தத்துவங்களும் சுத்தியாதற்பொருட்டு என்பது பொருள்.

முகத்திற் கங்கையும், மூக்கிற் பிராணனும், கண்களில் சூரிய சந்திரர்களும், செவிகளில் லோகபாலர்களும், உந்தியிற் பிரமனும், மார்பில் உருத்திரர்களும், புயங்களில் அசுவினி தேவர்களும் சிரசிற் சிவமும் அதிபர்களாவார்.

மேற்கூறப்பட்ட தானங்களிலே தொடுதல், அத்தானங்கள் சுத்தியாதற் பொருட்டும் அதிபர்கள் பிரீதிப்படுதற் பொருட்டுமாம்.

## விபூதி மகிமை

சிவனடியார்கள் தரிக்கும் சிவசின்னங்கள் விபூதி உருத்திராக்ஷம் என்னும் இரண்டுமாம். திருவெண்ணீறு; ஆன்மாக்களை இரட்சித்தலால் இரட்சை எனவும், ஆன்மாக்களின் தீவினைகள் அனைத்தையும் நீறுபடுத்தலால் திருநீறு எனவும், அழியாத செல்வத்தைக் கொடுத்தலால் விபூதி எனவும், ஆன்மாக்கடோறுங் கலந்துள்ள மலமாசைக் கழுவுதலால் ‡க்ஷாரம் எனவும், அறியாமை அழியும்படி ஞானமாகிய சோதியைத் தருதலின் பசிதம் எனவும், இடர் அச்சம் பழிபாவங்கள் முதலியவற்றை அகற்றிக் காப்புச் செய்தலிற் காப்பு எனவும் பெயர் பெறும் என்று அசிந்திய விசுவசாதாக்கியம் முதலியவற்றில் கூறப்பட்டது.

### பேரூர்ப்புராணம்

நீட லுறுந்தீ வினையனைத்து நீற்றி விடலா னீறென்றும்
வீடில் வெறுக்கை தருதலினல் விபூதியென்று முயிர்தோறுங்
கூடு மலமா சினைக்கழுவுங் குணத்தாற் சாரமென்றுமட
மோட வளர்சோ தியைத்தரலாற் பசிதமென்று முரைப்பாரால்.

‡ க்ஷாரமென்பது சாரமென்றாயிற்று.



அலகை பூதம் வேதாள மடர்மந்திரத்தா லலைப்புறுத்தும்
பலதெய் வதங்க ளிடரச்சம் பழிபா வங்கண் மடமென்னுங்
கலதி முழுது மெளிதகற்றிக் காப்புக் கொளலாற் காப்புமா
நிலவைப் பிடத்தின தன்பெருமை நிகழ்த்த லரிதா மடமாதே.

விபூதியானது கற்பகம் எனவும், அநுகற்பம் எனவும் உபகற்பம் எனவும் மூவிதப்படும்.

கன்றீன்று பத்துநாட்களுக்குட்பட்டு ஆசௌசம் நீங்காததும், இரண்டு கன்றுகள் ஈன்றதும், முதிர்ந்த கன்றுடையதும், நோய் பொருந்தியதும், மலட்டுத் தன்மையுள்ளதும், கிழத்தன்மையுள்ளதும், கருப்பமுள்ளதும், கன்றிறந்ததும், வால் காது கொம்பறுந்ததும், மலந்தின்பதுமாகிய இவ்வகைப் பசுக்கள் ஆகாவாம். மற்றைய பசுக்களிலே செம்மை வெண்மை முதலிய நிறங்களும் அழகும் குணமும் அமைந்தனவாய்ச் சரீர மெலிவின்றிப் பங்குனி மாதத்து நெற்றாள்களை மேய்ந்தன நல்லன.

அவைகளிடும் சாணத்தை அட்டமி சதுர்த்தசி பூரணை அமாவாசை என்னும் இத்திதிகளில் ஒன்றிலே தாமரையிலையில் சத்தியோசாத மந்திரத்தைச் சொல்லி நிலத்தில் விழுமுன் ஏந்தி, மேலிருக்கும் வழும்பை நீக்கி, வாமதேவமந்திரம் சொல்லிப் பஞ்சகவ்வியம் வார்த்து, அகோரமந்திரம் சொல்லிப் பிசைந்து, தற்புருஷமந்திரஞ் சொல்லிக் கையால் உருட்டி உலர்த்தி ஓமாக்கினியில் நெற்பதருடன் வைத்து, நல்லபாகங் கண்டு, ஈசானமந்திரஞ்சொல்லி எடுப்பது கற்பமாம். அவ்விதம் எடுத்த விபூதியைக் கோடிவஸ்திரத்தில் வடிகட்டிப் புதுப்பாண்டத்தில் நிரப்பிக் காயத்திரி மந்திரஞ்சொல்லி ஓர் ஆசனத்தில் வைத்து மலர்சாத்திப் பாத்திரத்தின் வாயை வெள்ளை வஸ்திரத்தாற் கட்டுதல் வேண்டும்.

சித்திரைமாதத்தில் காட்டிலே சென்று அங்கு உலர்ந்திருக்கும் சாணத்தை எடுத்து இடித்துக் கோசலம் வார்த்து உருட்டி முன்போல மந்திரஞ்சொல்லி விளைவித்துவைப்பது அநுகற்பமாம்.

பெரியகாட்டில் இயற்கையாகத் தீப்பற்றிக்கொள்ளுதலால் உண்டாகும் பொடியிற் பஞ்சகவ்வியம் வார்த்துருட்டி முன்போல மந்திரம் சொல்லி ஓமாக்கினியில் விளைவித்து வைப்பது உபகற்பமாம்.

மந்திரபூர்வமின்றிச் செய்யப்படுவது அகற்பம் எனப்படும். அதனை மூலமந்திரம் கலாமந்திரங்களினுலே சுத்திசெய்து தரிக்கலாம். இங்ஙனம் விபூதிவகை சுவாயம்புவம் சிந்திய விசுவசாதாக்கியம் தணிகைப்புராணம் கடம்பவனபுராணம் சைவசமயநெறி முதலியவற்றிற் கூறப்பட்டது.

தரிப்பதற்கு வெண்ணிற விபூதியே தகுந்தது. கருநிற விபூதி வியாதியை யுண்டாக்கும்; செந்நிற விபூதி கீர்த்தியையும் புகைநிற விபூதி ஆயுளையும் பொன்னிற விபூதி செல்வத்தையும் கெடுக்கும்; வெண்ணிற விபூதி போகமோக்ஷங்களைக் கொடுக்கும்.

ஸ்ரீபஞ்சாக்ஷரப் பொருளைத் தன்னுள் அடக்கியிருத்தலால் "மந்திரமாவது நீறு" எனவும், வேதத்திற் கூறிய உண்மைப்பொருளாதலின் "வேதத்திலுள்ளது நீறு" எனவும், ஞானத்தைக் கொடுப்பதால் "போதந் தருவது நீறு" எனவும், எவர்களாலுந் துதிக்கப்படும் பெருமையுடையதாதலால் "பரவவினியது நீறு" எனவும், மெய்யன்போடு நினைப்பவர்களுக்குப் பத்தியை வளரச் செய்தலால் "கருதவினியது நீறு" எனவும், "பத்திதருவது நீறு" எனவும், இம்மையின்பத்தையும் மறுமையின்பத்தையும் கொடுப்பதால் "இருமைக்குமுள்ளது நீறு" எனவும், ஆணவமலத்தாலுண்டாகும் ஆசையைக் கெடுப்பதால் "பெருந்தவத்தோர்களுக்கெல்லாம் ஆசைகொடுப்பது நீறு" எனவும், ஆன்மாவுக்கு உட்பகையாகவிருக்கிற மயக்கத்தை நீக்குவதால் "துயிலைத்தடுப்பது நீறு" எனவும், பாவத்தையறுப்பதால் "பாவமறுப்பது நீறு" எனவும், தருமத்தைத் தன்மாட்டு அடக்கியிருத்தலால் "புண்ணியமாவது நீறு" எனவும், புண்ணியவான்களுக்கு அருளென்னும் குழவியை யெய்தச் செய்தலால் "பாக்கியமாவது நீறு" எனவும், அழியாப்பொருளைக் கொடுக்க வல்லது ஆதலின் "அருத்தமதாவது நீறு" எனவும், இன்பத்தைக் கொடுப்பதால் "ஏயவுடம்பிடர் தீர்க்கு மின்பந்தருவது நீறு" எனவும், மோக்ஷத்தைக் கொடுப்பதால் "முத்தி தருவது நீறு" எனவும், திருஞானசம்பந்தசுவாமிகள் திருநீற்றுப் பதிகத்தில் விபூதியைச் சிவபெருமானெனப் பாவித்துத் துதித்திருக்கின்றனர்.



விபூதி ஸ்ரீபஞ்சாக்ஷரசெபம், சிவார்ச்சனை, சிவாலயம், சிவசாஸ்திரம் என்பனவற்றின் விசிட்டம் "விபூதியில்லாத நெற்றிபாழ்; சிவாலயமில்லாத கிராமம் பாழ்; சிவபெருமானைப் பூசியாத சென்மம் பாழ்; சிவபெருமானைப்பற்றிக்கூறுத சாஸ்திரம் பாழ்" எனவரும் பிருகத்ஜாபாலோபநிடத்தானும், "பஞ்சாக்ஷரசெபத்தையும், பஸ்மஸ்நானத்தையும், சிவார்ச்சனையையும், ஒருகாலத்தும் விடலாகாது; சக்திக்கியன்றவாறு செய்தல் வேண்டும்" என நாரதஸ்மிருதியானும் நன்கு தெளியப்படும்.

## திருநாவுக்கரசுநாயனுர்

### தனித்திருநேரிசை

சந்திரற் சடையில் வைத்த சங்கரன் சாமவேதி
யந்தரத் தமரர் பெம்மானுனல் வெள்ளூர்தியான்றன்
மந்திர நமச்சிவாய வாகநீறணியப் பெற்ருல்
வெந்தறும் வினையுநோயும் வெவ்வழல் விறகிட்டன்றே.

## திருவிருத்தம்

கருவாய்க் கிடந்துன் கழலேநினையுங் கருத்துடையேன்
உருவாய்த் தெரிந்துன்றனுமம் பயின்றே னுனதருளாற்
றிருவாய்ப் பொலியச் சிவாயநமவென்று நீறணிந்தேன்
தருவாய் சிவகதிநீ பாதிரிப் புலியூரரனே.

## மயூரகிரிப்புராணம்

சாவுறு முடலின்மீது சாரினு மதனில் வாழ்ந்த
வாவியோர் புரியட்டத்தி லமர்ந்து துன்புறினுஞ் செய்த
பாவம தொழிந்து நல்ல கதியுறு மினைய பண்பார்
திவ்ய பூதிசாத்திச் சிறந்த கண்டிகையும் பூண்டு.

இத்துணைப் பெருமை வாய்ந்த விபூதிதாரணமானது உத்தூளனம் திரிபுண்டரம் என இருவகைப் படும். ஈண்டுச் சூரியபூசை முடிவிலே தரிக்கப்படுவது உத்தூளனமாம் சந்தியா காலங்களில் தரிக்கப்படுவது திரிபுண்டரமாம்.

சிவபூசை முதலிய கிரியைகளைச் செய்யும்போது விபூதிருத்திராக்ஷந் தரித்துக்கொண்டே செய்தல்வேண்டும். தரியாமற் செய்தவர் சாம்பரில் அவியை ஓமஞ் செய்தவர் பலனை நீங்குதல்போலக் கிரியையின் பலனை இழப்பர். உருத்திர - அக்ஷம் = உருத்திராக்ஷம். உருத்திரனுடைய கண்களிலிருந்து தோற்றியதெனப் பொருள் படும்.

## கடம்பவனபுராணம்

பூசை மந்திரந் தியானநூல் புரிதவம் வணக்கம்
பேசு நீறின்றிப் பிறங்குமெக் கிரியையுஞ் செய்யார்
மாசி லந்தணர் மகத்தினுக் கனைத்தும்வந் துறினுந்
தேசு றும்விதீத் தியின்றி முடியுமோ முடியா

## சைவசமயநெறி

பூணுமற் கண்டிசிவ பூசைபுரி வார்பலத்தைக்
காணார்பூ ணாய்கண்டி கை.



## சகளீகரணம்

சகளீகரணமாவது சிவபெருமானைப் பூசித்தற்காகக் கரங்களையும் தேகத்தையும் சிவசொரூபமாக்குதலாம். சகளம் - உருவம்; கரணம் - செய்தல்.

## கரநியாசம்

* வலக்கையில் அக்கினியும் இடக்கையில் கங்கையும் இருப்பதாகச் சிந்தித்து, அஸ்திர மந்திரமுச்சரித்து, வலக்கையினாலே இடக்கையையும் இடக்கையினாலே வலக்கையையும் உள்ளும் புறம்புஞ் சோதித்து அக் கரங்களில் உள்ள அசுத்தங்களை அக்கினி ரூபமான அஸ்திரத்தினால் மணிக்கட்டுவரையுந் தகித்ததாகப் பாவித்து, சக்தயே வௌஷட் என்று இரு கரங்களையுஞ் சேர்த்து இரண்டு பெருவிரல்களையும் அமிர்தரூபமான சத்திமண்டலமாகப் பாவித்து, அவைகளிலிருந்து பெருகும் அமிர்தத்தினாலே அக்கினியின் உஷ்ணம் தணியும்படி நனைத்ததாகப் பாவிக்க.

இரு கரங்களையும் கூட்டிப் பெருவிரல் இரண்டையும் நடுவிற் பொருந்தக் கர்ணிகைபோல மடக்கி, எட்டு விரல்களையும் எட்டு இதழாகப் பாவித்துத் தாமரை மலர்போன்ற அந்தக் கரங்களில் சிவனுக்குரிய மந்திர சிங்காசனம் இட்டதாகப் பாவித்துச் சிவாசனத்தைப் பூசித்துச் சிவமூர்த்தியை அவ்வாசனத்தின்மேல் எழுந்தருளி இருப்பதாகப் பாவித்துச் சிவமூர்த்தி மந்திரத்தையும் நியசிக்க.

* சிவனுக்குரிய சிரசு முதலிய அவயவங்கள் அமைவதற்காகத் தர்ச்சனி விரல்களால் அங்குட்டங்களில் ஈசான மந்திரத்தையும், தர்ச்சனி முதற் கனிட்டிகையீறாகிய நான்கு விரல்களில் அங்குட்டங்களினால் தத்புருஷ முதலிய நான்கு மந்திரங்களையும் முறைப்படி நியசிக்க.

---

* சிந்திய விசுவசாதாக்கியம் * வீராகமம் காமிகாகமம்

சிவனுக்குரிய வித்தியாதேகம் அமைதற்பொருட்டு வித்தியாதேக மந்திரமுச்சரித்து, பெருவிரல்களினுலே கைகளின் நடுவில் நியசிக்கவேண்டும்.

சிவனுடைய ஞானசத்தி கிரியாசத்தி இச்சாசத்தி என்னும் நேத்திரங்களை அமைத்தல் என்னும் பாவனை யாக நேத்திர மந்திரமுச்சரித்து, நடுவிரல் மூன்றினு லும் உள்ளங்கைகளில் நியசிக்க.

பெருவிரல்களினுல் மூலத்தைச் சொல்லி நியசித்தல் அம்மூர்த்தியிலே சிவனை ஆவாகித்தல் என்னும் பாவனை யாம்.

நேத்திரம் தவிர்ந்த இருதயாதி மந்திரங்களைக் கனிட்டிகை முதல் அங்குட்டாந்தமான விரல்களிலே நியசிப்பது, இருதயம் முதலிய அங்கங்களை அமைத்தல் என்னும் பாவனையாம்.

கவச மந்திரத்தினுல் அவகுண்டனஞ் செய்தல் அத னைச் சூழ மதில் உண்டாக்குவது என்னும் பாவனையாம்.

இரு கரங்களையும் கூட்டி மூலமந்திரம் சொல்லிப் பரமீகரணஞ் செய்தல், முன்னே நியசித்த மந்திரங்கள் எல்லாவற்றையும் ஏகீபாவஞ் செய்தல் என்னும் பாவனை யாம்.

## அங்க நியாசம்

* வலப்பெருவிரல் அணிவிரல் இரண்டையுஞ் சேர்த் துச் சிவாசன மந்திர முச்சரித்து இருதயத்தில் நிய சிப்பது இருதய கமலமாகிய ஆசனத்தை அதில் உண் டாக்குதல் என்னும் பாவனையாகும். மூர்த்தி மந்திரத்தை நியசிப்பது அவ்வாசனத்தில் சிவமூர்த்தி எழுந்தருளி இருப்பது என்னும் பாவனையாம்.

* காலோத்தரம் காமிகாகமம் காண்க.



ஈசானமந்திரத்தைப் பொத்திய வலக்கைப் பெரு விரலால், உச்சியிலே நியசித்து, தத்புருஷமுதலிய நான்கு மந்திரங்களை உச்சரித்துப் பெருவிரலோடு கூடிய சுட்டுவிரல் முதலிய நான்கு விரல்களாலும் முறையே முகம், இருதயம், குய்யம், பாதமாகிய இடங் களில் நியசித்தல் சிவபெருமானுக்குரிய அவயவங்கள் உண்டாயின என்னும் பாவனையாம்.

பெருவிரல் அணிவிரல்களினுலே வித்தியாதேகமந் திரஞ் சொல்லி இருதயத்தில் நியசித்தல், இருதயத்தில் இருக்கிற சிவபெருமானுக்கு வித்தியாதேகம் வந்து பொருந்துதல் என்னும் பாவனையாம்.

வலக்கை நடுவிரல் மூன்றினுலும் நேத்திரமந்தி ரத்தை உச்சரித்து நேத்திரங்களில் நியசித்தல், சிவனுக் குரிய நேத்திரங்களை அங்கே அமைத்தல் என்னும் பாவனையாம். மூலமந்திரத்தை உச்சரித்து இருதயத்தில் நியசிப்பது இருதயத்திற் சிவனை ஆவாகித்தல் என்னும் பாவனையாகும்.

பெருவிரலோடு கூடிய கனிட்டிகை, அநாமிகை, மத்திமை என்னும் விரல்களினுல் இருதயம் சிரசு சிகை என்னும் மந்திரங்களைச் சொல்லி இருதயத்திலும், சிரசிலும், சிகையிலும் நியாசஞ் செய்வது சிவனுக் குரிய இருதயம் சிரசு சிகை என்னும் அவயவங்கள் அவ்வவ்விடங்களில் உண்டானதென்னும் பாவனையாம்.

கவசமந்திரமுச்சரித்துச் சுட்டுவிரல்களினுற் கழுத்தை நெஞ்சளவாகச் சுற்றுதல் அம்மந்திரவடி வாகிய கவசம் உண்டானதென்னும் பாவனையாம்.

அஸ்திரமந்திரமுச்சரித்து இடக்கை அணிவிரலால் வல உள்ளங்கையிலும், வலக்கை அணிவிரலால் இடவுள் ளங்கையிலும் நியாசம் செய்வது சிவனுடைய அஸ்தி ரத்தை அதில் அமைத்தல் என்னும் பாவனையாம்.

பின்பு அசுரரைத் துரத்தும் பொருட்டு அஸ்திரமந்திரத்தால் தாளத்திரயத்தையும், திக்குகளில் அக்கினிப் பிரகாச முண்டாக்கிக் காவல் செய்தற் பொருட்டுத் திக்குபந்தனத்தையும் மதில் உண்டாக்குதற் பொருட்டுக் கவசமந்திரத்தினுல் அவகுண்டனத்தையுஞ் செய்க.

வௌஷட் என்பதை இறுதியாகவுடைய மூலமந்திரத்தினுல் மகாமுத்திரை காட்டுதல் நியசிக்கப்பட்ட மந்திரங்களை ஏகீபாவஞ் செய்தல் என்னும் பாவனையாம். ஏகீபாவம்—ஒற்றுமைப்படுதல்.

சிவசொரூபமாக்குதலாகிய இந்தச் சிவமந்திர நியாசத்தை எப்பொழுதும் செய்ய வேண்டுமென்று சர்வஞ்ஞானோத்தரத்திற் சொல்லப்பட்டது. சிவசொரூபத்தையடைந்தாலன்றிச் சிவவழிபாடு செய்யுமுரிமையுண்டாகமாட்டாதென அறிக.

## பிராணுயாமம்

சுழுமுனைமுதலிய நாடிகளின் உற்பத்திக்கிடமாகிய கிழங்கு நாபிக்குக்கீழ் உண்டாயிருக்கும். அதினின்றும் எழுபத்தீராயிரம் நாடிகள் தோற்றித் தேகத்திலே கந்தத்தானத்துக்குக் கீழும் மேலுமாய்ச் சஞ்சரிக்கும். கந்தத்தின் வலப்புறத்திற் பிங்கலை என்னும் நாடியும் இடப்புறத்தில் இடையென்னும் நாடியுந் தோற்றிப் பிராணவாயுவுடன் கலந்து பிரமரந்திர பரியந்தம் வியாபித்து வெளியில் நாசித்துவாரம் இரண்டையும் ஆச்சியரயித்து உச்சுவாச நிச்சுவாச ரூபமாகப் போக்குவரவு செய்துகொண்டிருக்கும்.

சுழுமுனைநாடியானது கீழிருந்து கந்தத் தானம் வரையில் இருகிளையாகவும், அதன் மேற் பிரமரந்திரம் வரையும் ஒருரூபமாகவும், மூலாதாரம் சுவாதிட்டானம் மணிபூரகம் அநாகதம் விசுத்தி ஆஞ்ஞை என்னும் ஆறுதாரசக்கரங்களையும் அதற்குமேல் துவாதசாந்தம் வரையும் நான்கு சக்கரங்களையும் வியாபித்துப் பிரமரந்திரம் வரையிலும் சகளரூபமாகவும் அதற்குமேல் நிஷ்களரூபமாகவும் இருக்கும்.



சூரியமார்க்கமானதும், பிரமாவை அதிபராகவுடையதுமாகிய பிங்கலை நாடியினுல் உள்ளேயுள்ள அசுத்த வாயுவை வெளியில் விடுத்துச், சந்திரசகிதமானதும் விண்டுவை அதிபராக வுடையது மாகிய இடைநாடியினுல் வெளியேயுள்ள சுத்தவாயுவை உள்ளே பூரித்து நிரப்பி, அக்கினிசகிதமானதும் உருத்திரரை அதிபராகவுடையதுமாகிய சுழுமுனைநாடியினுல் மேலெழுப்பிச் சிவத்தியானஞ் செய்து தன்சத்திக்குத் தக்கபடி நாற்பத்தெட்டு மாத்திரை அல்லது இருபத்து நான்கு மாத்திரை அல்லது பன்னிரண்டு மாத்திரை அளவினதாகக் கும்பித்துப் பிங்கலையினுற் கும்பித்தவாயுவை இரேசகஞ் செய்க.

மூக்குநுதியில் அக்கினியும் வலக்காதிற் கங்கையுமிருப்பதால் பிராணுயாம முடிவில் எல்லாப்பாவங்களும் நீங்கும் பொருட்டு மூக்கு நுதியிலும் காதிலுந் தொடுதல் வேண்டும் எனக் காரணுகமம் கூறும். இவ்வாறு பிராணுயாமத்திரஞ் செய்க. பிராணுயாமம் - பிராணவாயுவை அடக்கிச் சுத்தி செய்தல்,

பிராணுயாமம் சகற்பப்பிராணுயாமமென்றும் அகற்பப்பிராணுயாமம் என்றும் இருவகையாம். அவற்றுட் சகற்பமாவது வாக்கினுல் மந்திரத்தை யுச்சரித்து சிவபெருமானைத் தியானஞ் செய்து பிராணுயாமம் செய்வதாம். செபமுந் தியானமுமில்லாமற் செய்வது அகற்பப் பிராணுயாமமெனப்படும். மிகுந்த பலத்தையடையக் கருதும் வாஞ்சையை யுடையவருக்கு அகற்பப்பிராணுயாமத்தைப் பார்க்கிலும் சகற்பப்பிராணுயாமமே மிக்க பலனைக் கொடுக்கும். இந்திரிய விருத்தியெல்லாம் பிராணவாயு இயக்கவே இயங்கும். இந்திரியங்களைச்

செயிக்க எண்ணுகிறவர் பிராணவாயுவைத் தம்வசம் விருத்தி செய்க. பஞ்சேந்திரியங்களைச் செயித்தவரே சமாதியடைபவராவர் என சிவதருமோத்தராகமம் செப்புகின்றது.

### திருமந்திரம்

ஏற்றி யிறக்கி யிருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே.

### சாமானியார்க்கியம்.

சாமாந்நியார்க்கிய பாத்திரத்தை அஸ்திரத்தினுல் சோதனைபண்ணி, வௌஷட் என்பதை இறுதியாக வுடைய இருதயத்தால் தீர்த்தத்தை அமிர்தம் விந்துவினின்றும் வந்ததாகப் பாவித்துப் பூரித்து, பிரணவத்தாலேழு தர மருச்சித்து, ஏழுமுறை அபிமந்திரித்து, "ஓம் ஹ: அஸ்திராயபட்" என்று இரட்சையும், "ஓம் ஹைம் கவசாயவௌ ஷட்" என்று அவகுண்டனமும் செய்து, "ஓம் ஹாம் சிவாய வௌஷட்" என்று தேனு முத்திரை கொடுத்து, மேற்குத் துவாரத்தை அஸ்திர மந்திரத்தாற் புரோட்சிக்க. [இவ்வாறு சிந்திய விசுவ சாதாக்கிய முதலியவற்றில் செப்பப்பட்டது.]

### துவாரபூசை

துவாரத்தின் மேற்படியின் தென்புறத்தில் பருத்த வயிறும், பச்சை நிறமும், இடம் வலம் ஆகிய மேற் கரங்களில் மழுவும் செபமாலையும், அவ்வாறே கீழ்க் கரங்களில் மோதகமும், தந்தமு முடையவராகக் கணபதியைத் தியானித்துப் பூசிக்க.



அவருக்கு வடக்கே வெண்மை நிறமுள்ளவரும், வெள்ளை வஸ்திரந் தரித்தவரும், வலக்கரத்தில் உருத்திராக்கமாலையும் இடக்கரத்தில் புத்தகமுந் தரித்தவரும், பிரசன்னம் உடையவருமாகிய சரஸ்வதியைத் தியானித்துப் பூசிக்க.

கணபதிக்கும் சரஸ்வதிக்கும் நடுவில் இடக்கரத்தில் வில்வப்பழமும் வலக்கரத்தில் தாமரைப் பூவும் பொன்னிறமும் உடையவராகவும், இரு பக்கங்களிலும் இரண்டு யானைகள் பொற்குடத்தாற் கங்காசலங் கொண்டு அபிஷேகிக்கப்படுபவராகவும் மகாலக்குமியைத் தியானித்துப் பூசிக்க.

கணபதிக்குத் தக்ஷிண சாகையில் செந்நிற முடையவரும், மூன்று கண்களுடையவரும், சடையும், வலக்கரத்தில் செபமாலையும், இடக்கரத்தில் திரிசூலமும் உடையவருமாகிய நந்திதேவரைத் தியானித்துப் பூசிக்க.

கணபதிக்கும் நந்திக்கும் நடுவில் மகராசனியும், வலக்கரத்தில் நீலோற்பலமும் இடக்கரத்தில் பூரணகும்பமும் தரித்தவரும், வெண்மை நிறமுடையவருமாகிய கங்காதேவியைத் தியானித்துப் பூசிக்க.

சரஸ்வதிக்கு வடக்கே கறுப்பு நிறமும், மூன்று கண்ணும், வலக்கரத்திற் கபாலமும் இடக்கரத்திற் சூலமும் உக்கிரமுகமும் உடையவராகிய மகாகாளரைத் தியானித்துப் பூசிக்க.

சரஸ்வதிக்கும் மகாகாளருக்கும் நடுவில் பச்சை நிறமுடையவரும், ஆமையின் மேல் இருப்பவரும், இடக்கரத்தில் பூரணகும்பத்தையும் வலக்கரத்தில் நீலோத்பலத்தையும் தரித்தவருமாகிய யமுனையை தியானித்துப் பூசிக்க.

"தாங்கள் பூசைக்கு விக்கினம் வராமல் இரட்சித்துக் கொள்ளுக" என்று இவர்களை விஞ்ஞாபிக்க.

## துவாரநிர்ணயம்

சூட்சுமாகமம் ஆத்மார்த்த பூஜாவிதிபடலம் "துவாரம் மேற்கு முகமாயிருப்பினும் நைவேத்தியத்தைக் கிழக்கு முகத்தில் சமர்ப்பிக்கவேண்டும்" என்று கூறுகின்றது. அவ்வாகமத்திற்றானே "பச்சிமத் துவாரத்தை அஸ்திரத்தினாற் புரோக்ஷிக்க" என்று தொடங்கி, கணபதி முதலிய துவாரபாலகர்களைப் பூசிக்கும் முறையும் கூறப்பட்டுள்ளது. அம்சுமான் ஆகமம் "கேடகத்தின் மேற்குப்பாகத்தில் துவார பாலகர்களை அர்ச்சிக்க" என்றும், "பச்சிமத் துவாரத்தில் துவாரபாலகர்களை ஆவாகித்துப் பூசிப்பதால் சர்வ சித்திகளுமெய்துமெ"ன்றும் செப்புகின்றது. இந்த ஆகமவாக்கியங்களை ஆமோதித்து ஆத்மார்த்த பூஜாபத்ததிகாரரும் பச்சிமத்தில் துவாரபூசை பண்ணுவது சிரேட்டமெனவும் ஆன்மார்த்தத்தில் அங்ஙனம் செய்வதே காரியமெனவும் நிச்சயித்துள்ளார்.

## சைவ சமய நெறி

பண்ணிடுக பூசனையைப் பச்சிமத்து வாரத்து
நண்ணினர்க் கெல்லா நயந்து.

சூரியன் முதலிய அறுவித ஆதாரங்களில் ஒன்றாகிய சௌர பூசையைக் கூறி இப்பொழுது சிவபூசைக் கங்கமாக துவாரபூசை கூறப்பட்டது. ஒவ்வொரு துவார பாலகருக்கும் தனித்தனி பூசை செய்யமுடியவில்லையாயின், "சர்வேப்பியோ துவாரபாலேப்பியோ நமஃ" என்று ஒரு சேரப் பூசிக்கலாமென்று அம்சுமானாகமம் கூறுகின்றது.



## விக்கினோச்சாடனம்

மூலமந்திரம் நியசிக்கப்பட்ட கண்களினால் ஊர்த்துவ திருட்டியாக நிரீக்ஷணம் பண்ணிச், சுவர்க்கத்திலுள்ள விக்கினங்களை நீக்கி, ஓம் ஹஃ அஸ்திராயபட் என்று நாராசமுத்திரையினாற் புஷ்பத்தை மேலே எறிந்து ஆகாயத்திலுள்ள விக்கினங்களைப் போக்கிப் பாசுபதாஸ்திர மந்திரத்தை உச்சரித்து வலப்புற வடியினாற் பூமியில் மூன்று முறை தாடனம் செய்து பூமியிலுண்டான விக்கினங்களைப் போக்கி, இவ்விதம் சுவர்க்க ஆகாச பூமிகளிலுள்ள மூவித விக்கினங்களையும் திருக்கோயிலினின்றும் போக்குக.

## சிவதாமப்பிரவேசாதி

திருக்கோயிலினுள்ளே சிறிது வாமசாகையையடைந்து வலக்கால் முன்னாகப் புகுந்து, கீழ்ப்படியில் ஓம் ஹஃ அஸ்திர துவாரபாலாய நமஃ என்று அஸ்திர துவாரபாலகரைத் *தியானித்துப் பூசித்துச் சுவாகாந்தமாக அர்க்கியங் கொடுக்க. பிரதக்ஷிணமாகப் புகுந்து நிருதி திக்கில் அன்ன வாகனத்திலிருப்பவரும், பருத்த

---

* அக்கினி வர்ணமுடையவரும், நான்கு முகங்களும், சத்திசூலம், அபயம், வரதம் என்னும் இவற்றுடன் கூடிய நான்கு கரங்களுடையவரும், சடாமகுடத்தால் அலங்கரிக்கப்பட்டவரும், சந்திரனைச் சிரோபூஷணமாகவுடையவரும். எல்லா விக்கினங்களையும் நீக்குகின்றவருமாக அஸ்திரத்தைத் தியானித்துப் பூசிக்க வேண்டுமென்று சிந்திய விசுவசாதாக்கியத்திற் கூறப்பட்டது. பஞ்சாவரணஸ்வத்தில் 'சுவர்க்கம் ஆகாசம் பூமிகளிலுள்ள விக்கினக் கூட்டங்களை நிவாரணஞ் செய்வதற்காகப் பூசிக்க வேண்டும்" என்று சொல்லப்பட்டது.

வயிற்றையுடையவரும், பொன்வண்ணரும், தாடி மீசை யுடையவரும், நான்கு முகங்களோடு கூடியவரும், வலமிடங்களில் தண்டு உருத்திராக்ஷமாலை, சுருக்கு கமண்டலம் என்பவைகளைத் தரித்தவருமாகிய வாஸ்து அதிபராகும் பிரமாவைத் தியானித்துப் பூசிக்க.

## பூசோபகரணங்களை அமைத்தல்

*திருமஞ்சன பாத்திரத்தை நிரீக்ஷணாதி நான்கு சுத்திபண்ணி, வடிகட்டும் வஸ்திரத்தை அஸ்திரத்தாற் சுத்திசெய்து, பாத்திரத்தை மூடி இருதயமந்திரத்தால் வஸ்திரத்தினின்று பெருகிய அமிர்தப் பிரவாகத்தால் நிறைத்து, வடித்த அந்தநீரையும் புஷ்பம் முதலிய பூசோபகரணங்களையும் பக்கத்தே வைத்துக்கொள்க.

ஸ்நானதோயத்தில் பாதிரி நீலோத்பலம் பத்மம் அலரி முதலியவைகளையும் நறுமணத்திரவியங்களையுஞ் சேர்க்கவேண்டுமென்று சுப்பிரபேதம் முதலிய ஆகமங்கள் கூறும்.

## பூதசுத்தி

சுவாமிக்குத் தென்பாகத்திலே தருப்பாசன முதலியவற்றில் வடதிசையை நோக்கிச் சுகாசனமாகவிருந்து, பூசாத்தானத்தை இரட்சாவகுண்டனம் பண்ணிக் காவல் செய்து, சிவமயமாக்குதலைச் செய்து பூசை செய்க. சுவாமிக்குத் தக்ஷிணதிக்பாகத்தில் சுகாசனமாக வடக்கு முகமாயிருந்து பூசிக்க வேண்டும் என்று சூட்சுமம் அம்சுமான் முதலியவற்றில் கூறப்பட்டது.

---

* மூலத்தால் நிரீக்ஷணமும், அஸ்திரத்தாற் புரோக்ஷணமும், அஸ்திரத்தால் தாடனமும், கவசத்தால் அப்பியுக்ஷணமும் செய்தல் வேண்டுமென்று ஸ்ரீமத் காமிகாகமம் கூறும்.



## சுழுமுனாத்தியானம்

முன்போலக் கரநியாசம் செய்து இரண்டு காற் பெருவிரல்களிலிருந்து தொடங்கி மூலாதாரம் வரையும் இரண்டு வடிவாகவும், மூலாதாரத்திலிருந்து பிரமரந்திரம் வரையும் ஒருவடிவாயும், இருதயம் - கழுத்து - நாவடி - புருவநடு - பிரமரந்திரம் என்னுமிடங்களில் இடை பிங்கலை நாடிகளோடு கூடியதாகவும், இத்தானங்களிலே கீழ்முகமாயிருக்கிற ஐந்து தாமரை முகுளங்களோடு கூடியதாகவும், உட்டுளைகளோடு கூடியதாகவும் இருக்கிற சுழுமுனை நாடியைச் சிந்தித்து, அந்தச் சுழுமுனை நாடியின் உள்ளும் புறமும் அமிர்ததாரையைச் சொரிகின்ற பரமவியோமலி ரூபியான குண்டலினி சத்தியைப் பாவனைபண்ணி, அந்தச் சத்தியின் நடுவில் ஹூங்காரத்தைத் தீபச்சுவாலை போலப் பிரகாசிப்பதாகச் சிந்தித்து, வாயுவைப் பூரக கும்பகஞ் செய்து, அந்த ஹூம்காரத்தில் மனசை நிறுத்தி முன்நிறுத்திய வாயுவை மேலே துவாதசாந்தம் வரையும் ஏற்றி ஹூம்பட் என்று இடையீடின்றி ஐந்து முறை உச்சரித்து சோடிகா முத்திரையினால் கீழ்நோக்கிய தாமரை அரும்புகள் ஐந்தும் மேனோக்கி அலர்ந்தனவாகத் தியானஞ்செய்து அவ்வாயுவைத் திருப்பி வலநாசியால் விடுக.

## ஆத்மயோசனை

பின்பும் வாயுவைப் பூரித்து அதனால் இருதயகமலத்தை அடைந்திருப்பதும் நக்ஷத்திரம் போலப் பிரகாசிப்பதும் ஹம்கார பீஜமயமாயும் ஹாம் என்னும் பீசத்தால் இருபக்கங்களிலும் சம்புடிதமாயுமிருக்கின்ற ஆத்மாவை ஹூம் காரத்தின் உச்சியில் வைத்து, ஹம் என்னும் ஆத்தும பீசத்தாலாகிய தேகத்தையுடையதும் ஹூம்காரசிகையின் முடிவில் இருப்

பதும் புரியட்டகதேகத்தாற் பிரிக்கப்பட்டதுமாகிய ஆன்மாவை பரமானு சொரூபனும், பிந்துமயனும், ஒருவனும், நிராமயனுமாகத் தியானித்துக் கும் பகஞ்செய்து வாயுவை மேல் நோக்கிஎழுப்பி சங் காரமுத்திரையினல் எடுத்து இருதயம் கண்டம் நாவடி புருவநடு பிரமந்திரம் என்னும் தானங் களிலிருக்கும் பிரமா விஷ்ணு உருத்திரன் மகேசுரன் சதாசிவன் என்னும் காரணேசுரர்களுடைய தியாகக் கிரமத்தால் ஒரு உற்காதத்தோடு ஓம் ஹூம் ஹாம் ஹம் ஹாம் ஹூம் ஆத்மநே நம: என்று புசிக்கத்தக்க கருமங்களின் பொசிப்பின்பொருட்டுத் துவாதசாந்தத் தில் இருக்கும் பரமசிவனிடத்தில் யோசித்து, பீசாட்சர விருத்தியால் அவரிடத்தில் லயித்ததாகப் பாவிக்க.

இவ்வாறு செய்தலால் சீவன் தூலசூக்கும ரூபமான அசுத்ததேக உபாதியினின்றும் விடுபட்டவனய் சிவசா யுச்சியத்தால் அடையப்பட்ட நின்மலமான ஞானக் கிரியாசக்திகளுடன் கூடிச் சுத்தனுகின்றுன்.

## தத்துவசுத்தி

இப்படி பீஜாட்சர விருத்தியினல் ஆன்மா பரம சிவத்தில் லயமடைந்தபின் சரீரசுத்தியின் பொருட்டு சங்காரக்கிரமமாக அதன் அதன் காரணங்களில் தத்து வங்களை பிந்து பரியந்தம் ஒடுக்குதல் வேண்டும்.

அது எங்ஙனமெனில்; கந்ததத்துவத்தில் பிருதுவி தத்துவத்தையும், இரசத்தில் அப்புவையும், ரூபத்தில் அக்கினி தத்துவத்தையும், பரிசத்தில் வாயுதத்துவத்தை யும், சத்ததத்துவத்தில் ஆகாச தத்துவத்தையும், இந்தக் கந்தாதி தன்மாத்திரைகளைத் தாமசாகங்காரத்திலும், வாக்கு பாதம் பாணி பாயு உபத்தம் என்னும் தத்து வங்களை இராசசாகங்காரத்திலும், சுரோத்திரம், துவக்கு சட்சு, சிருவை, ஆக்கிராணம், மனம் என்னும் தத்து வங்களைச்



சாத்துவிகாகங்காரத்திலும் அந்த அகங்காரதத்துவத் தைப் புத்திதத்துவத்திலும் புத்திதத்துவத்தைக் குண தத்துவத்திலும், குணதத்துவத்தைப் பிரகிருதி தத்து வத்திலும், பிரகிருதி ராகம் வித்தை என்னும் தத்து வங்களைக் கலாதத்துவத்திலும், புருடன் காலம் நியதி கலை என்னும் தத்துவங்களை மாயாதத்துவத்திலும் இல யித்தன என்று சிந்தித்து,

சுத்தவித்தியாதத்துவம் ஈசுவரதத்துவத்திலும், அது சதாசிவதத்துவத்திலும், அது சத்தி தத்துவத்திலும், சத்திதத்துவம் சிவதத்துவத்திலும், சிவதத்துவம் பர விந்துவிலும் ஒடுங்கியனவாகப் பாவிக்கவேண்டும்.

அல்லது சத்தமும் பரிசமும் பிரமாவினிடத்திலும், ரசம்விஷ்ணுவினிடத்திலும், ரூபமும் கந்தமும் உருத் திரனிடத்திலும், புத்தியும் அகங்காரமும் மகேசுர னிடத்திலும், மனமும் விந்துவும் சதாசிவனிடத்திலும் ஒடுங்கினதாகப் பாவிக்க வேண்டும்.

## தூலதேகசுத்தி

பின்பு தூலதேகத்தைச் சுத்திசெய்க. பிருதுவிமண் டலத்தைப் பொன்னிறமாய், கடினமாய், நாற்கோண யாய், வச்சிர அடையாளம் பெற்றதாய், ஹ்லாம் என் னும் பீசத்தோடு கூடியதாய், அதிபதியாகும் சத்தி யோசாதர், காரணராகும் பிரமா என்னுமிவரோடு கூடினதாய், நிவிர்த்திகலையினது ரூபமாய், பாதம் தொடங்கி சிரோபரியந்தம் சிந்தித்து, ஓம் ஹ்லாம்* நிவிர்த்திகலாயை ஹ: ஹூம்பட் என்று பூரித்து சுழுமு நாநாடிமார்க்கமாக துவாதசாந்தம் வரையும் பிரணவாயுவைச் செலுத்தி, வலநாடியால் விடுக. பின்பு இப்படி ஐந்து உற்காதத்தால் கந்தரசரூப பரிச சத்த குணங்களைப் போக்கி, பிருதுவியை அதற்கு விருத்தமான வாயுவினல் ஆக்கிரமிக்கப்

* ஓம் ஹ்லாம் என்று ஐந்து தரம் சொல்லுக.

பட்டதாய் அந்த வாயுவினுருவமுடையதாகச் சிந்திக்க வேண்டும்.

பின்பு அப்புமண்டலத்தை அர்த்தசந்திரன் போன்ற வுருவாய், நெகிழ்வாய், மனோகரமாய், வெண்மையாய் தாமரையடையாள முள்ளதாய், ஹ்வீம் பீஜத்தோடு கூடியதாய், அதிபதி வாமதேவர் காரணராகும் விஷ்ணு என்னுமிவரோடு கூடினதாய், பிரதிட்டாகலா வடிவாய்ப் பாதமுதற் சிரமட்டும் பாவித்து, முன் சொல்லப் பட்டதுபோல் ஓம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் ஹ்வீம் பிரதிஷ்டா கலாயை ஹஃ ஹூம்பட் என்று பூரித்து, சுழுமுனை நாடிமார்க்கமாகத் துவாதசாந்தம் வரையும் பிராணவாயுவைக் கொண்டு போய்த்திருப்பிப் பிங்கலை நாடியால் இரேசஞ் செய்க. இப்படி நான்கு உற்காதத் தால் ரச ரூப பரிச சத்தமாகிய நான்கு குணங்களைப் போக்கி, அதன் விருத்தமான அக்கினியினால் ஆக்கி ரமிக்கப்பட்டதாகவும் அந்த அக்கினியினுடைய ஆகா ரமாகவும் பாவிக்கவேண்டும்.

பின்பு அக்கினி மண்டலத்தை முக்கோணமாய்ச் சிவப்பு நிறமாய், சுவஸ்திகக் குறியுடையதாய், ஹ்ரூம் என்னும் பீஜத்தோடு கூடியதாய், அதிபதியாகும் அகோரரோடும் காரணே சுரராகும் உருத்திரரோடும் இயைந்ததாய், வித்தியாகலை வடிவாய் அடிதொட்டுச் சிரசுவரையும் வியாபித்ததாய்ப் பாவித்து, ஓம் ஹ்ரூம் ஹ்ரூம் ஹ்ரூம் வித்தியாகலாயை ஹூம்பட் என்று இடையினாற் பூரகம் செய்து, பிராணவாயுவைச் சுழுமுனை நாடிமார்க்கமாகத் துவாதசாந்தம் வரையும் கொண்டு போய்த் திருப்பிப் பிங்கலை நாடியால் இரேசிக்க. இப்படி மூன்று உற்காதத்தால் ரூப பரிச சத்த குணங் களைப்போக்கி, அதற்கு விருத்தமான ஜலத்தினால் ஆக்கிரமிக்கப்பட்டதாகவும் சலத்தினுடைய ஆகாரமா கவும் பாவிக்க.



பின்பு வாயுமண்டலத்தை அறுகோணமாய், ஆறு விந்துளதாய், கறுப்பு நிறமாய், ஹ்யைம் என்னும் பீசத்தோடு கூடியதாய், அதிபதியாகும் தற்புருஷரோடும் காரணேசுரராகும் ஈசுவரரோடும் கூடியதாய், சாந்தி கலை வடிவாய்த் தனது சர்வாங்கமும் வியாபித்ததா கப் பாவித்து ஹ்யைம் ஹ்யைம் சாந்திகலாயை ஹ: ஹூம்பட் என்று வாயுவைப் பூரித்துச் சுழுமுனைநாடி மார்க்கமாய்த் துவாதசாந்தம் வரையும் கொண்டு போய்த் திருப்பி இரேசிக்க.

இப்படி இரண்டு உற்காதத்தால் பரிச சப்த குணங் களைப் போக்கி அதற்கு விருத்தமான பிருதிவியினால் ஆக்கிரமிக்கப்பட்டு அதன் வடிவமாகச் சிந்திக்க.

பின்பு உருவற்ற ஆகாசத்தை நிர்மலமானபடிகத் துக்கு ஒத்ததாய், சூனியமாய், விந்துசத்தியால் பூஷிக் கப்பட்டதாய், ஹளம் என்னும் பீசத்தோடு கூடியதாய், அதிபதியாகும் ஈசானர் காரணேசராகிய சதாசிவர் என்னும் இவர்களோடு கூடியதாய், சாந்தியதீதாகலா மயமாய் பாதமுதற்சிரசுவரையும் வியாபித்திருப்பதாகச் சிந்தித்து ஹளம் சாந்தியதீத கலாயை ஹஃ ஹூம் பட் என்று வாயுவைப்பூரித்துச் சுழுமுனைநாடி மார்க்க மாகத் துவாதசாந்தம் வரையும் கொண்டுபோய் வாயுவைத் திருப்பிப் பிங்கலைநாடியால் இரேசகம் செய்க.

இப்படி ஒருமுறை யுச்சரித்துச் சப்தகுணத்தைப் போக்கி அநித்தியத்துவம் அவ்வியாபகத்துவம் அசுத் தத்துவமாதி சொரூபமாயிருக்கிற பூதாகாசத்தைக் கெடுத்து நித்தியத்துவம் வியாபகத்துவம் சுத்தத்துவ மாதி யுக்தமாயிருக்கிற பரமாகாசத்தால் ஆக்கிரமிக்கப் பட்ட வடிவுடையதாகப் பாவிக்க.

## திருநாவுக்கரசுநாயனார்

### திருத்தாண்டகம்

மண்ணதனிலைந்தை மாநீரினான்கை
வயங்கெரியின் மூன்றை மாருதத்திரண்டை
விண்ணதனிலொன்றை விரிகதிரைத்
தண்மதியைத் தாரகை கடம்மின்மிக்க
எண்ணதனிலெழுத்தை யேழிசையைக் காம
னெழிலழிய வெரியுமிழ்ந்த இமையாநெற்றிக்
கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக்
கற்பகத்தைக் கண்ணாரக்கண்டேனானே.

## மாணிக்கவாசகசுவாமிகள்

### போற்றித்திருவகவல்.

பாரிடையைந்தாய்ப் பரந்தாய் போற்றி
நீரிடைநான்காய் நிகழ்ந்தாய் போற்றி
தீயிடைமூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி
வளியிடையிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி
வெளியிடையொன்றாய் விளைந்தாய் போற்றி

சிவார்ச்சனாசந்திரிகையில் "உத்காதமென்பது இதனால் நீக்கப்படுகிறது என்னும் பொருள் குறிப்பது. அது இவ்விடத்தில் பூதகுணங்களையும் அவற்றின் அசுத்தியையும் நீக்குங் கருவியைக் குறித்தது. அஃதாவது அந்தந்த கலாமந்திரங்களின் உச்சாரணத்தை முன்னிட்டுப் பூரகத்தைச் செய்து சுழுமுனாநாடி வழியாகப் பிராணவாயுவைத் துவாதசாந்தம்வரை உயரச் சேர்க்கும் ரூபமானகிரியை" எனச் சொல்லப்பட்டது.



### மானதஸ்நாநம்

அஸ்திரமந்திரத்தை உச்சரித்து வலக்காற் பெருவிரலினின்றுந் தோன்றுகின்ற காலாக்கினியைச் சொலிப்பித்துத் தேகத்தை அடைந்திருக்கின்ற பஞ்சபூத தோஷங்களைத் தகனம் பண்ணி மூலமந்திரத்தை நாதாந்தமாகவுச்சரித்து, குடிலாசத்தியை யெழுப்பி அங்கிருந்து பெருகாநின்ற அமிர்தப் பிரவாகத்தினாலே தன்தேகத்தை உள்ளும் புறம்பும் அபிஷேகம் செய்வதாகப் பாவிப்பது மானஸ்நாநம் எனப்படும்.

### வடதருரூபம்

பிரகாராந்தரத்தால் வடதருரூபம் கூறப்படுகின்றது.

தன்னுடைய தேகத்தைப் பிருதுவிமுதலிய பஞ்சபூதங்களை வித்தாகவுடையதாயும், பிரமவிஷ்ணுக்களால் உண்டாக்கப்பட்ட முளைகளையுடையதாயும், இராகம் துவேஷம் தர்மம் அதர்மம் மோகம் என்பவற்றை வேராகவுடையதாயும், வித்தை வித்தியேசுரர்களாற் பரிபாலனம் பண்ணப்பட்டதாயும், கலை முதலிய தத்துவங்களைச் சாரமாக உடையதாயும், கந்தாதி தன்மாத்திரைகளையும் சுரோத்திராதி இந்திரியங்களையும் பெருஞ்சாகை சிறுசாகைகளாக உடையதாயும், சத்தாதி விஷயங்கள் இலையாயும், புத்தியின் குணங்களாகிய தன்மாதிகளின் விரிவுகள் பூவாகவுடையதாயும், புத்திதத்துவத்தால் நிச்சயித்துவரும் சுகதுக்கங்களைப் பழமாகவுடையதாயும், ஆன்மாவாகிய பக்ஷியாற் புசிக்கப்படுவதாயும், புசிக்கப்படுந் தன்மையை இச்சிப்பதாயும் மேனோக்கின வேரையுடையதாயும், கீழ்நோக்கின கொம்பர்களையுடையதாயுமிருக்கின்ற ஆலமரசொரூபமாகச் சிந்திக்க.

உலகத்திலேயுள்ள மரங்கள் கீழே வேரும் மேலே கிளையுமாகவிருக்கச் சரீரமாகிய வட விருக்ஷம் மேலே வேரும் கீழே கிளையுமாகவிருத்தல் எங்ஙன மெனில்;

மேலே இருக்கும் மாயை வேராகவும் கீழேயிருக்குந் தத்துவங்கள் கிளையாகவும் பாவிக்கப்படுதலானென்க. மரமானது வித்திலுதித்து வளர்ந்து அழிவதுபோற் சரீரமானது மாயையிலுதித்து வளர்ந்தழிகின்றமையால் மரத்தை உவமித்தனரென்க.

பிருதுவியாதிகளின் ஐந்து குணங்களும் அழியும் பொருட்டுப் பீஜாட்சரத்தை உச்சரித்துச் சரீர விருக்ஷத்தின் பத்திரபுஷ்பாதிகள் நீங்கினதாகச் சிந்திக்குமுறை வருமாறு :-

பூரகத்தின் முற்பாதியால் பிருதிவியின் பஞ்சகுணங்கள் அழியும் பொருட்டு நிவிர்த்திகலா பீசத்தை ஐந்து முறையுச்சரித்து பத்திரம் புஷ்பம் பழங்கள் நீங்கின தாகச் சிந்தித்து, பூரகத்தின் பிற்பாதியால் சலத்தின் நான்கு குணம் அழியும் பொருட்டு பிரதிட்டா கலா பீசத்தை நான்குமுறை யுச்சரித்தலால் நனைந்து இலை முதலியவற்றேடு கூடினதாகச் சிந்திக்க.

கும்பகத்தின் முற்பாதி பிற்பாதிகளால் அக்கினியின் மூன்று குணம் அழியும் பொருட்டு வித்தியாகலா பீசத்தை மூன்று முறையுச்சரித்து வலக்காற் பெருவிரலினின்று உண்டான காலாக்கினியால் வறந்ததாயும் பத்திரம் முதலானவற்றேடு கூடாமல் உதிர்ந்ததாயும், தகிக்கப்பட்டதாயும் சிந்திக்க.

இரேசகத்தின் முற்பாதியால் வாயுவின் குணமிரண்டும் அழியும் பொருட்டு, சாந்தி கலாபீசத்தை இரண்டு முறையுச்சரித்துப் பஸ்மமாய், பத்துத் திக்கிலும் பறந்து போனதாகப் பாவித்து, ரேசகத்தின் பிற்பாதியால் ஆகாசத்தின் குணம் ஒன்று அழியும் பொருட்டு, சாந்தியதீதகலாபீசத்தை யொருமுறை யுச்சரித்தலால், நின்மலஸ்படிக வடிவான ஆகாச ரூபமாகப் பாவிக்க.



பின்பு சமஸ்த பந்தங்களும் நீங்கி சர்வசூன்னியம் என்று பாவித்து, வௌஷடந்தமான மூலத்தால், துவாதசாந்தத்தில் இருக்கிற கீழ்நோக்கின பத்மத்தினின்றும் பெருகிச் சகல நாடிகளிலும் பிரவேசித்த மிகுந்த அமிர்த தாரைகளால், சரீரத்தை உள்ளும் புறம்பும் அபிஷேகம் செய்யப்பட்டதாகச் சிந்தித்து, இருதயத்தில் நாளம் தளம் கர்ணிகை வடிவாகிய தாமரைப் புஷ்பத்தை அகாரமுதலான மூன்று மாத்திரைகளோடு கூடிய பிரணவத்தால் உண்டான சுத்த வித்தியா மயமான பீடமாக நியசித்து, அந்தப் பத்மத்தின் கர்ணிகையிலே புரியட்டகத்தை நாற்கலைப் பிரணவத்தால் வந்ததாகப் பாவித்து, அந்தப் புரியட்டகத்தில் துவாதசாந்தத்தில் இருக்கிறவனுய் ஹகார சொரூபனுய் சிவமயனுய் தேஜோமயனுய் இருக்கிற ஆத்துமாவை பஞ்சகலைப் பிரணவத்தோடுகூட ஆத்தும மந்திரத்தால் பூரகத்தினலே சிருட்டிக்கிரமமாகக் கொண்டு வந்து, சோதிரூபத்தை வைத்து, வௌஷடந்தசத்தி மந்திரத்தை உச்சரித்தலால் கலக்கப்பட்ட விந்துசத்தியினின்றும் பெருகாநின்ற அமிர்தப் பெருக்கால் அபிஷேகம் செய்க.

பின்பு முன்போல அங்கந்நியாசம் செய்க. பிருதுவி முதலிய தத்துவங்கள் தாமாகக் காரியப்படமாட்டா எனக் கண்டு அவைகளினின்றும் நீங்கும் பாவனையே பூத சுத்தியாம். பூதரூப தேகாபிமானத்தை விடுதல் பூதசுத்தியாம் என்று கிரியாதீபிகையிற் கூறப்பட்டது.

## தத்துவப் பிரகாசம்

### பாங்குபடத் தத்துவங்கணீங்கல் பூதசுத்தி

### ஞானபூசைத் திருவிருத்தம்

அஞ்சலி செய்திருந் துடனுனல்லேன் ஞான மண்ணலதி யானென
தென்றிடவமைந்த
புஞ்சமலி தனுகரண புவனபோகம் பொய்யென மெய்யுணர்த்தியவப்
போதமேநற்
றஞ்சவுடலிந்தவுட லெடுத்த வீடு தானழியு மளவுமதிற்
றங்குவார்போல்
வஞ்சமுடனமர்துமெனு மிதுமேல் கொள்ளும் வாய்மையது
பூதசுத்திப் பான்மையன்றே.

## அந்தர்யாகம்

அந்தர் யாகத்தை முதலிற் செய்து பின்னர் புறப் பூசையைச் செய்யவேண்டும். இருதயத்திலிருக்கும் சோதிலிங்கமே வெளியிற் பூசிக்கப்படுவதால் அந்தர் யாகம் முதலிற் செய்யப்படத்தக்கதாம். என்று சித் தாந்தம் என்னும் ஆகமம் கூறுகின்றது. அந்தர்யாக மின்றிப் பூசை செய்தவனது செயல் வீணுகும். இது சாஸ்திர சமூகங்களால் நிச்சயிக்கப்பட்டது. அந்தர் யாகமின்றிப் பூசை செய்தவன், பாற்சாதமானது உள் ளங் கையில் இருக்கக்கண்டு முண்ணுது புறங்கையை நக்குபவன் போலும் என்று சிவதருமோத்தரம் செப்பு கின்றது. அவன் பூசாபலத்தை விட்டவனுவன்.

## சைவசமய நெறி.

அர்ச்சித்தானந்தரியாகம் யுரியாதே பலத்தை
வர்ச்சித்தானென்றே மதி.



## சிவதருமோத்தரம்.

சிறந் தகத்துளான் மாவிலுறை சிவனைப் பூசையினைச் செய்யாறுகி
மறந்து புறத்தினிற் பூசைவருந்தியே யியற்றுபவன் வயங்குமாவின்
கறந்தபாலடி சிலங்கையுளே யிருப்பதுந்தான் கண்டுணுது
புறங்கையினை நக்குமவன் போலுமால் யாமறியப் புகலுங்காலே.

தத்துவங்களெல்லாம் சடமெனக் கண்டு அதுவும் திருவருளாலன்றி ஆன்மபோதத்தால் அறியப்படா தெனக் காணும் பாவனையே ஆன்மசுத்தியாம்.

ஓங்குடலந் திருக்கோயி லுள்ளிடமுள்ளிடமா முட்டொழிலும்
புறத்தொழிலு முரியவரே புரிவார்
தீங்கிலுயிர் சிவலிங்கஞ் சிவன்சீவன் யாதுஞ்செய வேண்டா
பசுஞானஞ் சிவஞானஞ் சிறந்த
பாங்கதுநம் மன்வளவி லுபகரண பூசைப்பரிசது நற்றெரிசன
மெய்ப்பணி முழுதுமடங்கத்
தூங்கிடனம் மின்புருவச் சுடராய்நிற்குந்
தொன்மைய தந்தரியாகத் துறையதன்றே.

இருதயம் நாபி புருவநடு என்னும் ஸ்தானங்களைப் பூசை ஹோமம் சமாதி என்பவைகளுக்கு இடங்களாகக் கற்பித்துக் கொள்க.

நாபிக்குக் கீழ்ப்பிருதிவி தத்துவம் கிழங்காகவும் அப்புமுதலிய இருபத்துநான்கு தத்துவங்களும் எட்டங் குலப் பிரமாணமுள்ளதும் ஒன்பது துவாரங்களோடு கூடியதும் நான்கு பக்கங்களும் முட்களையுடையது மாகிய நாளவடிவாகவும், அசுத்தமாயையாகிய முடிச் சைக்கொண்டு வித்தியாதத்துவங்கள் ஏழுடன் சுத்த வித்தையுஞ்சேர்த்து எட்டுப் புறவிதழ்களாகவும் வித்தி யேசுவரர்கள் எட்டு அகவிதழ்களாவும் முறையே அமைந் திருப்ப இக்கமலத்தின்மேல் ஈசுரம் சாதாக்கியம் என்னு மிருதத்துவங்களும் அறுபத்துநான்கு கேசரங்களாகவும்

அவற்றின் மத்தியில் சத்திதத்துவம் பொகுட்டாகவுமமை யச், சிவதத்துவம் அப்பொருட்டினுட் காணப்படும் ஐம்பத்தொரு அக்ஷரமாகிய பீசமுமாக அமைந்திருப் பது இருதயகமல சிவாசனமாம்.

### சிவஞானசித்தியார்

நாட்டுமிதயந்தானு நாபியினிலடியாய்
ஞாலமுதறத் துவத்தாவென் விரனுளத்தாய்
மூட்டுமோகினி சுத்தவித்தை மலரெட்டாய்
முழுவிதழெட்டக் கரங்கண் முறைமையி னுடைத்தாயக்
காட்டு கமலாசனமே லீசர்சதாசிவமுங்
கலாமூர்த்த மாமிவற்றின் கண்ணுருஞ்சத்தி
வீட்டையருள் சிவன்மூர்த்தி மானுகிச்சத்தி
மேலாகிநிற் பணிந்தவிளை வறிந்துபோற்றே

### சிவஞானபோதம்

மண்முதனு ளமலர்வித்தை கலாரூபா
மெண்ணிய வீசர்சதாசிவமு — நண்ணிற்
கலையுருவா நாதமாஞ் சத்தியதன் கண்ணு
நிலையதி லாமச்சிவன் ருனோர்.

இவ்விதம் ஆதாரசத்தியாதி குடிலை பரியந்தம் தாபிக்கப்பட்ட சிவாசனத்தின் மீதாக மின்னல்போன்ற ஒளியுள்ளவரும் நாதசொரூபியு மாகிய சிவபெருமான் இருப்பதாகத் தியானித்து ஆவாகனுதிகள் செய்து மானதமாகப் புஷ்பாதிகள் கொண்டு பூசிக்க.

"தேகமாகிய சிவாலயத்தின் கண்ணே ஆன்மா வைச் சிவலிங்கவடிவாகக் கொண்டு சிந்திக்க வேண் டும்" என்று வாதுளாகமங் கூறுகின்றது. "சனங்தளி டத்து அந்தர்யாமியாய் நிற்கும் பரனுகிய அந்தச் சிவ பெருமானைச் சத்தியோடு கூட அகத்திற் பற்றுகின்ற வர்களே அன்னத்தை நாவினுற் கிரகிக்கின்ருர்கள்"



என்று அந்தரியாக பூசையை இருக்குவேதம் விசேஷித் துக் கூறுகின்றது. "எட்டு நாண்மலர் கொண்டவன்" எனப்படும் சிவபெருமானை அகத்தே ஆன்மலிங்கத்திலே தமது அறிவைக் கொல்லாமை ஐம்பொறியடக்கல் பொறை அருள் அறிவு வாய்மை தவம் அன்பு என் னும் அஷ்டபுஷ்பமாக்கிப் பூசை செய்தவரின் கிரகண காலத்தில் சூரியன் புலப்படுமாறு போலவும், கண் ணுடியை விளக்குந்தோறும் பிரகாசம் மேற்படுதல் போலவும், பாசிபடர்ந்த நீரின்கண்ணே கல்லுவிட்டெ றிந்தபோது பாசிநீங்க நீர்தோன்றுமாறு போலவும் சிவபெருமான் ஆன்மாவின்கண்ணே வெளிப்பட்டு இன்பம் அளித்திடுவார்.

தனது தேகமாகிய ஆலயத்தின்கண்ணே சிவபெரு மானை மானசமாகத் தாபனஞ் செய்து, இருதய கமலத் தின்கண்ணே கந்தம் மலர் தூபம் தீபம் திருமஞ்சனம் முதலியவற்றை மனதினுற் கருதிக்கொண்டு தியான யாகம் வாயிலாகப் பூசிக்க என்று சிவதருமோத்தராக மம் கூறிற்று.

### சிவஞான்சித்தியார்

அந்தரியா கந்தன்னை முத்திசா தனமா
அறைந்திடுவரதுதானு மான்மசுத்தி யாகுங்
கந்தமலர் புகையொளிமஞ் சனமமுது முதலாக்
கண்டனவெ லாமனத்தாற் கருதிக் கொண்டு
சிந்தைதனி லர்ச்சிக்கச் சிவனைஞா னத்தாற்
சிந்திக்கச் சிந்திக்கத் தர்ப்பணத்தை விளக்க
வந்திடுமவ் வொளிபோன் மருவியர னுளத்தே
வரவரவந் திடுவன்பின் மலமான தறுமே

## திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்

### பண் - காந்தார பஞ்சமம்

ஊனிலுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞானவிளக்கினை யேற்றி நன்புலத்
தேனைவழிதிறந் தேத்துவார்க் கிடர்
ஆனகெடுப்பன வஞ்செழுத்துமே

## திருநாவுக்கரசுசுவாமிகள்

### திருநேரிசை

காயமே கோயிலாகக் கடிமனமடி மையாக
வாய்மையே தூய்மையாக மனமணியி லிங்கமாக
நேயமே நெய்யும்பாலா நிறையநீரமைய வாட்டிப்
பூசனையீசனார்க்குப் போற்றவிக் காட்டினோமே

உடம்பெனு மனையகத்து வுள்ளமே தகளியாக
மடம்படுமுணர நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
இடம்படுஞானத் தீயாலெரிகொள விருந்துநோக்கில்
கடம்பமர் காளைதாதை கழலடி காணலாமே

## சேக்கிழார் சுவாமிகள்

மறவாமை யானமைத்த மனக்கோயி லுள்ளிருத்தி
யுறவாதி தனையுணரு மொளிவிளக்குச் சுடரேற்றி
யிறவாத வானந்த மெனுந்திருமஞ் சனமாட்டி
யறவாணர்க் கன்பென்னு மமுதமைத்தர்ச் சனைசெய்வார்

## சைவ சமய நெறி

தம்முள்ளத் துற்ற சலனசிவ லிங்கத்துந்
தம்மன்பா லர்ச்சிக்க தாம்.

## வருத்தமறவுய்யும் வழி

உள்ளேவல் செய்வாக் காந்தன் மிகவுகப்ப
னுள்ளேசெய் பூசை யுகந்து.



## அகத்து அக்கினிகாரியம்

நாபிகுண்டத்தில் இயற்கையாக விருக்கின்ற அக்கினியை அஸ்திரமந்திரத்தினாலே சுவாலிக்கச் செய்து அதிற் சிறிது பாகத்தை இராக்ஷசாம்சமாகப் பாவித்து நிருதிகோணத்திற் போட்டு நிரீக்ஷணாதி நான்கு சுத்தி பண்ணி, அந்த அக்கினியைச் சிவாக்கினியாகப் பாவிப்பதற்கு இரேசகவாயுவினால் அதனைச் சைதன்ய வடிவினதாக இருதயத்தை அடையுமாறு செய்து, ஆங்கிருக்கும் ஞானாக்கினியுடன் சேர்த்துச் சுழுமுனாநாடி வழியாகத் துவாதசாந்தத்தை அடையும்படி செய்து, ஆங்கு எழுந்தருளியிருக்கும் பரமசிவனுடன் சேர்த்து அவருடைய தேஜஸ் கூட்டத்தால் பொன்வண்ணமாகவும் எண்ணிறந்த சூரியர்களுக்கு ஒப்பான பிரபையுடையதாகவும் பாவித்து ஞானாக்கினி ரூபமாகிய அதனைத்திருப்பி நாபிகுண்டத்தில் ஸ்தாபிக்க.

அங்கே சிவாக்கினியைச் சிவந்த வண்ணமுடையதாகவும், பத்துக் கரங்களையுடையதாகவும், சதாசிவனுக்குச் சமமான ஆயுதங்களையுடையதாகவும், தியானித்து அந்த அக்கினியின் இருதய கமலத்தில் ஆசனமூர்த்தி வித்தியாதேகங்களை நியசித்து, சிவனை ஆவாகனஞ் செய்து இடையாகிய சுருவத்தால் விந்துஸ்தானத்தினின்றும் பெருகாநின்ற அமிர்ததாரையாகிய ஆஜ்யத்தை மூலமந்திரத்தால் நூற்றெட்டு ஆகுதி செய்து, அதிற் பத்திலொன்றாகச் சங்கிதையாலும் ஓமஞ்செய்து சுழுமுனையாகிய சுருக்கினாலே பூரணாகுதி செய்ததாகப் பாவித்து உள்ளே பூஜிக்கப்பட்ட பகவானிடத்தில் ஓமபலத்தை யொப்பித்து, அஷ்ட புஷ்பத்தால் அர்ச்சித்து நிறைவேற்றுக.

சிந்தியவிசுவசாதாக்கியத்தில் :— இருதயகமலத்தினின்றும் அயுதசூரியனுக்குச் சமானமாகிய காந்தியை

யுடையதாகும். அக்கினியைச் சுழுமுனுமார்க்கத்தினுலே கூட்டி அந்தத் துவாதசாந்தத்தில் சோதிசமூகத்தோடு விளங்குகின்ற ஞானுக்கினியை அந்தநாபி அக்கினியில் நியசிக்க; அங்ஙனம் நியசிக்கப்பெற்ற மாத்திரத்தினுலே சமஸ்தகிரியைகளுக்கும் யோக்கியனுக்கின்ருன்" என்று கூறப்பட்டது.

பின்பு விந்துஸ்தானத்தில் சர்வவிஷயஞானகிரியாயுக்தமாயும் விளங்காநின்ற தாரகையினது வடிவுடையதாயுமுள்ள நிஷ்கள சிவத்தைத் தியானித்துச் சமாதி கூடுக.

"தியானயாகமாகிய அந்தரியாகத்தினுல் உபசாரங்களோடு சங்கரனை எவன் பூசிக்கின்ருனே அவன் மேலாகிய கதியையடைவானென்று சிந்திய விசுவசாதாக்கியம் கூறிற்று.

## வாயுசங்கிதை

நாபியழறனிலோமஞ் செய்ததற்பின் புருவ நடுவதனினன் காத்
தீபசிகை போலுறையுஞ் சிவன்றன்னை நினைந்தகத்துட் பூசைதன்னை
மாபவந்தீர்ந்திடமுடித்த பினிலிங்கந்தனிற் றழலில் வயங்குமண்ணிற்
றூபமுதலிய வேந்திச் சிவபூசை தனையியற்றத் தொடுக்கவேண்டும்.

## திருஞானசம்பந்த மூர்த்திநாயனுர்

பண் — நட்டராகம்

கோங்கு சண்பகங் குருந்தொடுபாதி ரிகுரவிடை மலருந்தி
ஓங்கிநீர் வருகா விரிவடகரை மாந்துறை யுறைவானைப்
பாங்கி னலிடுந் தூபமுந் தீபமும் பாட்ட விமலர் சேர்த்தித்
தாங்குவாரவர் நாமங்கனு வினிற் றலைப்படுந்தவத்தோரே.

பின்பு பகிர்பூசை பண்ணப்போகின்றே னென்று பிரார்த்தித்து அனுமதி பெற்றுக்கொள்க.

இவ்வாறு பூதசுத்தி அந்தர்யாக பூசை ஓமம்சமாதி என்பவற்றுல் ஆத்துமசுத்தி உண்டாகின்றது.



## தானசுத்தி

அஸ்திரமந்திரமுச்சரித்துத் தாளத்திரயம் செய்து, இடையூறுகளைப் போக்கி, சோடிகாமுத்திரை கொண்டு பத்துத் திக்குகளிலும் அஸ்திரத்தால் திக்குபந்தனம் செய்தலினுலே அசுரர் முதலியோர் உட்பிரவேசியாமைக்காக நாற்புறமும் சுவாலிக்கின்ற அக்கினிவடிவாகிய மதிலையும் கவசத்தையுச்சரித்து மூன்றுதரம் சுட்டு விரலைச் சுற்றுவதினுல் மூன்றகழையும் பாவித்துக் கொண்டு, சத்திமந்திரத்தைச் சொல்லி, தேநு முத்திரைகொடுப்பதால் திருவருட்சத்தியாகிய வலை மேற்பாகத்தும் கீழ்ப்பாகத்தும் உண்டானதாகவும் பாவித்துக்கொள்க.□

இதனுண்மைப்பொருள் "பகர்சிவதத்துவமாக்கல் தலசுத்தி" எனத்தத்துவப் பிரகாசம் செப்புவதாலு முணரப்படும்.

## *சிவார்க்கியம்

பின்பு, பொன்முதலியவற்றுல் அமைக்கப்பட்ட விசேஷார்க்கிய பாத்திரத்தை அஸ்திரத்தினுல் அலம்பி விந்துஸ்தானத்திலிருந்து பெருகுகின்ற அமிர்ததாரையாகச் சலத்தைப் பாவித்து, வௌஷடந்த இருதயத்தை உச்சரித்துப் பூரித்து சிவாசனமந்திரத்தைச் சொல்லிப் பூசித்துச் சிவனுக்கு ஆசனமும் மூர்த்தி மந்திரத்தைச் சொல்லிப்பூசித்து மூர்த்தியும் அமைந்ததாகப் பாவிக்க.

சிவனுக்குரிய ஐந்து திருமுகங்களும் அமைவதற்காக ஈசானுதி மந்திரங்களாற் பூசித்து அவருக்குரிய

□இவ்வாறு காலோத்தராகமத்திற் கூறப்பட்டது.
*இதனைக் காமிகா கமத்துக் காண்க.

வித்தியாதேகமும் நேத்திரமும் அமைவதற்காக வித்தியா தேக நேத்திரமந்திரங்களையுஞ் சொல்லிப் பூசித்துப் பாவிக்க.

மூலமந்திரத்தால் அருச்சிப்பது சிவனையதில் ஆவாகித்தல் என்னும் பாவனையாகும். இருதயாதிமந்திரங்களாற் பூசிப்பது சிவனுக்குரிய சுத்தகுணங்களாறும் அமைந்ததென்னும் பாவனையாகும். மூலமந்திரத்தாலும் சம்ஹிதையாலும் அபிமந்திரிப்பது சிவனுக்குரிய ஐசுவரிய சத்திகள் பதிதலென்னும் பாவனையாம். அஸ்திரத்தால் இரக்ஷையும் கவசத்தால் அவகுண்டனமுஞ் செய்து தேனு முத்திரை காட்டல் வேண்டும்.

அருக்கிய நீரிற் சிவசத்தி பதிதற்காகவே இக்கிரியை செய்யப்படுவதாம்.

## பாத்தியாதிபாத்திரம்

பாத்தியாதிகளுக்குச் சுவர்ணபாத்திரம் சிரேஷ்டமென்றும் வெள்ளிமத்திம மென்றும் தாமிரபாத்திரம் அதமமென்றும், அவை கிடையாதிருப்பின் மண்பாத்திரம் கொள்ளலாமென்றும் அங்ஙனம் கொள்ளுமிடத்து அவை புதியனவாயிருக்க வேண்டுமென்றும் சிவதருமம் கூறுமென அறிக. பாத்தியாதிகளுக்கு வேறுவேறு பாத்திரம் கிடையாவிடின் பாத்தியம் ஆசமனம் அருக்கியம் என்னும் மூன்றையும் ஒரே பாத்திரத்திற் கொள்ளலாமென்று சூட்சுமாகமம் செப்பும்.

## பாத்தியாதிகளுக்குத் திரவியம்

சந்தனம், இலாமிச்சை, அறுகு, வெண்கடுகு என்னும் இந்நான்கையும் சுத்தசலத்துடன் கூட்டுவது பாத்தியம் எனப்படும்.

## சைவசமயநெறி

ஆரமிலா மிச்சை யறுகோடு வெண்கடுகுஞ்
சீருறவே பாத்தியத்திற் சேர்.



இலவங்கம் கர்ப்பூரம் சாதிக்காய் சிற்றேலம் வசுவாசி, பேரேலம் ஆகிய ஆறுதிரவியங்களின் பொடிகளைச் சுத்தசலத்துடன் கூட்டுவது ஆசமனமெனப்படும்.

## சைவசமயநெறி

இலவங்கங் கர்ப்பூரஞ் சாதிசிற் றேல
நல் வசுவா சேலமு நன்று.
ஆசமன மாகு மறலினொடு கூட்டுதலும்
பாசத்தைப் பாற்றும் பதிக்கு.

பால் சலம் எள்ளு அரிசி தருப்பை நுனி பூ வெண்கடுகு நெல் என்னும் இவ்வெட்டும் அருக்கியத் திரவியமாகும்.

* அருக்கியம்பா னீரெள் ளரிசிகுசை யந்த
நிரைத்தமலர் வெண்கடுகு நெல்

## பாத்தியாதிகளுக்கு முத்திரை

பாத்திரத்தை இடக்கையில் வைத்துக்கொண்டு வலக்கையின் பெருவிரலும் நடுவிரலும் ஆழிவிரலுமாகிய மூன்றையுங் கூட்டிப் பிடிக்கும் மிருகீ முத்திரையினாலே பாத்தியாதிகளைக் கொடுத்தல் வேண்டும். பெருவிரலாலும் சுட்டுவிரலாலும் கொடுக்கின் அந்த நீர் இரத்தத்திற்குச் சமானமாகும்.

அங்குட்ட மத்திமைய நாமிகையி னாற்கொடுக்க
தங்கையாற் பாத்தியமுந் தான்
அங்குட்டாந் தச்சனியி னாற்கொடே லர்க்கியமு
மங்குதிர மாங்கொடுக்கி னப்பு.

## திரவிய சுத்தி

பின்பு அர்க்கிய சலத்தினால் தன்னுடைய சிரசிலும் புஷ்பம் முதலிய பூசாத்திரவியங்களிலும் அஸ்திரத்தாற் புரோக்ஷித்து, கவசத்தால் அப்பியுக்ஷணம் செய்து, இருதயத்தால் அபிமந்திரித்து கவசத்தால் அவகுண்ட

* இவற்றைக் காமிகம் சுப்பிரபேத முதலியவற்றானுமறிக.

னம் பண்ணித் தேநுமுத்திரையினுல் அமிர்தீகரணம் செய்து, அர்க்கியசலத்துளியை அபிஷேகசலபாத்திரத்தில் புஷ்பத்தோடு இட்டுத் தேநுமுத்திரை கொடுக்க.

திரவியசுத்தியாவது திரவியங்களெல்லாம் மாயையிலிருந் துண்டானவை யாகையாற் சுத்தராயிருக்கிற சிவபெருமானுக்கு மாயேயமாகிய திரவியங்கள் அங்கீகாரமாகமாட்டா; அஃதன்றியும் பலனையுங் கொடுக்கமாட்டா; ஆகையினுலே நிரீக்ஷணுதிகளால் சிவசத்தியை அவைகளிற் பதியும்படி செய்வதாம். அங்ஙனம் செய்யில் திரவிய சமூகமானது மாயாரூபம் நீங்கப்பெற்று, சுத்தமான சிற்சத்தி ரூபமாய்ச் சுத்தியாகிச் சித்தாகிய சிவனுக்கு ஏற்றதாகும். அஃதெவ்வாறென்னில் விறகானது அக்கினியைச் சேர்ந்தபோதே தற்சொரூபங் கெட்டு அக்கினி சொரூபமாவது போலுமென்க. இவ்வாறு தந்திரசாரத்திற் கூறப்பட்டது.

நேத்திரமாகிய கருவியினுற் பார்த்தறியுஞ் செயல்களெல்லாம் திருவருட் செய லென்பது இதன் பாவனையாகும்.

### ஞானபூசைத் திருவிருத்தம்

நாலிரண்டு திருவுருவ நோக்கி நோக்கால்
நயங்கொடிரவிய சுத்தி நயந்து.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

ஆவாகி யாவினி லைந்து மாகி
யறிவாகி யழலாகிய வியுமாகி
நாவாகி நாவுக்கோ ருரையுமாகி
நாதனுய் வேதத் தினுள்ளோனுகிப்
பூவாகிப் பூவுக்கோர் நாற்றமாகிப்
புக்குளால் வாசமாய் நின்ருனுகித்
தேவாகித் தேவர் முதலுமாகிச்
செழுஞ் சுடராய்ச்சென்ற டிகணின்றவாறே.



## ஆத்துமபூசை

பூசகன் தன்னுடைய ஆசனத்தைச் சிவாசனமாகப் பூசித்து. இருதயத்திற் சிவமூர்த்தியைப் பூசித்து நேத்திரமந்திரஞ் சொல்லி, நெற்றியிலே சந்தனத்தினுல் திலகமிட்டுச் சிரசில் மூலமந்திரத்தை அர்ச்சித்துத் தன்னுடைய தேகத்தைச் சிவரூபமாகப் பாவித்துப் பிராகிருதபாவத்தை விடுத்துச் சிவோகம் பாவனை செய்க *

ஆன்மசுத்தியானது முன்னரே சொல்லப்பெற்றதாயினும் பூசைக்குக் கருத்தாவாக இருத்தலினுலே ஏனைய திரவியங்கள் போலவே ஆன்மாவும் பூசைக்குச் சாதனமாய் விட்டமைபற்றி இவ்விடத்தும் ஆன்மாவிற்குக் கந்தமுதலிய உபசாரம் கூறப்பட்டது எனச் சிவார்ச்சனுசந்திரிகை செப்புகின்றது.

## மந்திர சுத்தி

பூசைக்கு விரோதமில்லாத மௌன நிலையாகவிருந்து கும்பிட்டுக்கொண்டு, சிவமூலமந்திரத்தையும் பஞ்சப்பிரம சடங்கமந்திரங்களையும் குறில், நெடில், அளபெடைக் கிரமமாக மூலாதாரந்தொடங்கித் துவாதசாந்தம் வரையும் ஓங்காராதி நமோந்தமாக உச்சரிக்க.

ஸ்நானகாலத்திலும் ஜபத்திலும் யாகத்திலும் போசனத்திலும் பூசையிலும் தியானத்திலும் விபூதி தரிக்கும் பொழுதும் சந்தியாவந்தனத்திலும் அவசிய கருமத்திலும் எப்பொழுதும் மௌனியாகவிருத்தல் வேண்டும் என்று சிந்திய விசுவசாதாக்கியம். கூறுகின்றது.

---

* இவ்வாறு காமிகம் சர்வஞ்ஞானோத்தரம் முதலிய ஆகமங்கள் செப்புமென அறிக.

பற்கள் அண்ணம் உதடுகள் ஆகிய இவற்றின் தொழிற்பாட்டால் உண்டான மாயாகாரியமாகிய அசுத்தத்தை நீக்குதற்காகவும் ஐசுவரிய ரூபமான அதிகாரமலத்தால் மறைக்கப்பட்ட பலனைக் கொடுக்கக் கூடிய சாமர்த்தியத்தை உடைய மந்திரங்களுக்கு அந்தச் சாமர்த்தியத்தை உண்டு பண்ணுதற்காகவும் மந்திரசுத்தி செய்யவேண்டும் என்று சிந்தியவிசுவீத் திற் கூறப்பட்டது.

ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை ஐந்தெழுத்தாகக் கொள்ளாமல் சிவ்விலே சிவமும், வவ்விலே திருவருட் சத்தியும், யவ்விலே ஆன்மாவும், நவ்விலே திரோதான சத்தியும், மவ்விலே மலமும் ஆகிய ஐந்துமுதலாகக் காணுதலே இதனுண்மையாகும்.

## திருநாவுக்கரசுநாயனார் திருத்தாண்டகம்

பேராயிரம் பரவிவானே ரேத்தும்
பெம்மானைப் பிரிவிலாவடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப்பானை
மந்திரமுந் தந்திரமும ருந்துமாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான் றன்னைத்
திரிபுரங்கட யெழத்திண் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே யாற்றநாள் போக்கினேனே.

## இலிங்கசுத்தி

ஸ்நாந வேதிகையில் பரிவட்டத்தை விரித்து, * சடுத்தாசனம் பூசித்துச் சுவாமியைப் பெட்டகக்

*சலாசனமெனினும் சடுத்தாசனமெனினும் ஒக்கும். அனந்தரும் தன்மம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம் என்னும் நான்கும் பதுமமும் சலாதனமென்றறிக. "சலாதனமனந்தருந்தன் மாதியொரு நான்கு' நலா ரெண்ணுமம் புயமு நாடு" எனச் சைவ சமய நெறி கூறும்.



கோயிலினின்றுமெடுத்து அதில் எழுந்தருளச் செய்து சிவகாயத்திரியால் அர்ச்சித்து, சாமாநியார்க்கிய சலத்தை மூலத்தினாற் சத்தியோஜாதாதியாகக், கொடுத்து, தூபதீபங்கொடுத்து, பூசைக்குமேற் கையைவைத்து சத்தியோஜாதாதி மந்திரங்களை உச்சரித்து, அஸ்திரமந்திரத்தினால் இலிங்கத்தின் மேலிருந்த புஷ்பங்களை எடுத்து, சுத்தபாத்திரத்திற் சண்டேசுரபூசையின் பொருட்டு ஈசானதிக்கில் இருதயத்தினால் வைக்கவேண்டும்.

அஸ்திரத்தினால் இலிங்கத்தையும் பாசுபதாஸ்திரத்தினாற் பிண்டிகையையும் அலம்பி அஸ்திரமந்திரத்தை உச்சரித்து, சாமாந்நியார்க்கியத்தினால் அபிஷேகிக்க.

சலலிங்கமானால் அஷ்டபுஷ்பத்தினாலாதல் ஆசன மூர்த்தி மூலத்தினாலாதல் அருச்சித்து, அருக்கிய தூபாதி கொடுத்து, அஸ்திரத்தினால் நிருமாலியத்தைக் கழிக்க.

இலிங்கத்தை அஸ்திரத்தினாலும் பிண்டிகையைப் பாசுபதாஸ்திரத்தினாலும் அபிஷேகம் பண்ணினால் சகலவிக்கினங்களுந் தீர்ந்து மந்திரங்கள் பிரகாசித்துப் பலனைக் கொடுக்கும் - என ஞானரத்தினாவளி கூறுகின்றது.

சிவபெருமான் பரிபூரணராகையாற் சித்துப் பிரபஞ்சங்களிலும் அசித்துப் பிரபஞ்சங்களிலும் பிரிவறச் சேட்டிப்பித்து நிற்குந் தன்மையையறிந்து இந்த லிங்கத்திலும் உண்டென்று காணுதலே இலிங்க சுத்தியாம்.

## ஞானபூசைத் திருவிருத்தம்

நாதன் — மேலிலங்கு மலரெடுக்கி யுருவநோக்கி
விமலனிறை வுணர்ந்தெவையு மேனியான
சீலமுமங்கருவு திருவுருவமான சிறப்புமுணர்ந்
திலிங்கசுத்தி செய்திடாயே.

### சிவப்பிரகாசம்

மண்முதல் கரணமெல்லாம் மறுவசத் தாக்கிஞானக்
கண்ணினிலூன்றி யந்தக்கருத்தினு லெவையுநோக்கி
எண்ணியஞ் செழுத்துமாறியிறை நிறையுணர்ந்து போற்றல்
புண்ணியன்றனக்கு ஞானபூசையாய்ப் புகலுமன்றே

ஆணவம் கன்மம் மாயை திரோதாயி வயிந்தவம் என்னும் ஐவகைப் பாசங்களை நீக்குதற்பொருட்டே ஆன்மசுத்தி, தானசுத்தி, திரவியசுத்தி, மந்திரசுத்தி இலிங்கசுத்தி என்னும் பஞ்சசுத்திகள் செய்யப்படுகின்றன.

### சைவ சமய நெறி

பஞ்சவித சுத்தியினைப் பண்ணிடுக பாங்காகப்
பஞ்சவித பாசமறுப் பார்.

இவ்வாறு பஞ்சசுத்தி செய்து சிவபெருமானைப் பூசிக்க.

### அபிஷேகம்

அபிஷேககலசத்தை இடக்கையில் ஏந்தி அதன் வாயிலே வலக்கையைவைத்து அக்கலசத்தினின்றும் கீழ்நோக்கி விழுகின்ற திருமஞ்சனத்தைச் சங்க முத்திரையினால் ‡ அபிஷேகஞ் செய்க. நாலங்குலவுயரத்தினின்றும் பசுவினது நுனிக்கொம்பின் பருமைபோலச் சிறுகவிழுஞ் சலத்தைப் பரார்த்தலிங்கத்தில் அபிஷேகஞ் செய்க. ஆன்மார்த்தலிங்கத்திலெனில்; முன்கூறிய திற்பாதி பருமையும் இரண்டங்குலவுயரமும் கொள்க. ஒவ்வொரு திரவியத்துக்குமிடையே தூபாதி கொடுத்து அபிஷேகஞ்செய்க.

---

‡ வலக்கையினது பெருவிரநுனி சுட்டுவிரலினடியைத் தொட்டால் அது சங்கமுத்திரையாம்.



### சைவசமய நெறி

ஏந்தியபபி டேககல சலத்தை யிடக்கரத்தில்
வாய்ந்தவலக் கையதன்மேல் வைத்து.

சங்கென்னு முத்திரையாற் ஞூழ்ந்தொழுகுந் தண்புனலாட்
டெங்களிறை தங்கிலிங்கத் தின்.

ஆன்கோட்டு மாத்திரத்தி னலங் குலவுயரத்
தான்விழநீ ராட்டுகலிங் கத்து

அபிஷேகஞ் செய்து கவசத்தால் திருவொற்றுடை சாத்தி, மூலத்தாற் புஷ்பஞ்சாத்திச் சிவமந்திரமுச்சரித்துப் பத்மாசனத்தில் உடையவரை எழுந்தருளச் செய்க. இதனை அம்சுமானாகமம் முதலியவற்றாலறிக.

### சைவ சமய நெறி

பத்தியினு லாட்டிடுக சங்குளூறும் பாணியினை
வத்திரத்தான் மேலீர மாற்று.

எழுந்தருளப் பண்ணிடுக பீடத் திலிங்கம்
விழைந்துகம லாதனத்தின் மீது.

வடித்தெடுத்தநீர் கங்காசலத்துக்குச் சமானமாகையால் நீரை வடித்தெடுத்து, அதில் வாசனைத்திரவியங்களையும் புஷ்பங்களையுமிட்டு "அருளெனும் புனலினையாட்டி" எனக் காசிகாண்டத்திற் கூறியபடி திருவருளாகிய ஞானமே நீரெனப்பாவித்து, அபிஷேகஞ் செய்யின் மலநிவாரணமாகும்.

### சதாசிவ ரூபம்

நிகழ்மல சுத்தி நிமித்த மாக
மகிழ்வுட னேதிரு மஞ்ச னம்பண்ணி

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

பண் — தக்கராகம்

தடங்கொண்ட தொர்தா மரைப்பொன் முடிதன்மேற்
குடங்கொண் டடியார் குளிர்நீர்சுமந் தாட்டப்
படங்கொண்ட தோர்பாம்பரை யார்த்தபரம
னிடங்கொண் டிருந்தான் றனிடை மருதீதோ.

நல்லெண்ணெய், மாக்காப்பு, நெல்லிமுள்ளி முதலியவை பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு, பழவர்க்கம், இளநீர், சுகந்த சந்தனம், தாராபிஷேகம், சங்காபிஷேகம் என்பவற்றை முறையாகச் செய்யவேண்டும் என்று சித்தாந்தரத்நாகரத்தில் அபிஷேகத் திரவியங்கள் சொல்லப்பட்டன.

எண்ணெய், மாக்காப்பு முதலிய மூன்று பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம், நெய், பால், தயிர், தேன், கருப்பஞ்சாறு, பஞ்சபழம், பஞ்சரசம், இளநீர், அன்னம், விபூதி, சந்தனம், கும்பஜலம், அருக்கியதீர்த்தம் என்னும் இவைகளால் அபிஷேகம் செய்யவேண்டும் என்று சித்தாந்தசேகரத்தில் கூறப்பட்டிருக்கிறது.

கந்ததைலம் பஞ்சகவ்வியம், மா, நெல்லிமுள்ளி, மஞ்சள்மா, பஞ்சாமிர்தம், பால், தயிர், நெய், தேன், கருப்பஞ்சாறு, பழரசம், இளநீர், அன்னாபிஷேகம், சந்தனம், ஸ்நபனம் என அபிஷேகக் கிரமத்தைச் சகலாகமசங்கிரகம் செப்புகின்றது.

### சைவ சமய நெறி

அபிடேக வேதிகையில் வைத்தபிடே கஞ்செய்
யபிடேக மங்கையிலா கா.

ஆட்டிடுக கந்த தயில முதலதன்பி
னுட்டுகவா னைந்தினையு மார்ந்து.



பஞ்சாமிர் தம்பா லதன்பின் றதிநெய்தே
னெஞ்சாக் கரும்பினிர தம்.

கனியுதகந் தெங்கிளநீர் கந்தநீர் கும்பந்
தனில் விதியாற் றுபித்த நீர்.

என்னு மிவையு மினியபத மந்திரத்தைப்
பன்னியுரைத் தாட்டுகபாங் கால்.

### எண்ணெய்க் காப்புவிதி

எள்ளைச் சுத்தமாக்கிக் கைச்செக்கிலாட்டிச் சாத்துக. இங்ஙனமன்றி ஆட்டிய எண்ணெய் மதுவுக்கொப்பாகுமென்று காமிகம் கூறும்.

படிகலிங்கத்துக்கு எண்ணெய் உரித்தன்று; பசு நெய்யே உரித்தென்றறிந்து அபிஷேகம் பண்ணுக. படிகலிங்கத்திலே எண்ணெயைக் கூர்ச்சத்தினாற் புரோக்ஷிக்க வேண்டும்.

### சைவ சமய நெறி

பாங்கல்ல வெண்ணெய் படிகத்தி னுக்கானெய்
பாங்கென்றே யாட்டுகவன் பால்
பரிவுறவெண் ணெய்யைப் புரோக்கிபடி கத்தில்
வரமுறுகூர்ச் சத்தான் மதித்து.

மண்ணிலிங்கத்தினுக்கும் பித்திசித்திரத்துக்கும் கண்ணடியில் அபிஷேகிக்க வேண்டும். லோகசலிங்கத்துக்குக் கூர்ச்சத்தினாற் புரோக்ஷிக்க வேண்டுமெனக் காரணாகமம் செப்பும்.

### பஞ்சகவ்வியவிதி

பஞ்சகவ்வியம் என்னும் மொழியில் ப என்பது பாப நிவாரணமும், ச என்பது ஆன்மசுத்தியும், க என்பது பிறவிநீக்கமும், வியம் என்பது மோக்ஷமுமாம். ஆகவே, மலத்தை நீக்கி ஆன்மாவைச் சுத்தனாக்கிப்

பிறவியை யொழித்து மோக்ஷத்தைக் கொடுக்கையால் பஞ்சகவ்வியமெனப் பெயராயிற்று என உணர்க. பஞ்ச கவ்வியம் இல்லாமற் செய்யும் கிரியைகளில் தேவர்கள் சாந்நித்தியமாகார்கள்.

பஞ்சகவ்வியமாவன விதிப்படி கூட்டி அமைக்கப் பட்ட பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன வாம்.

சிவலோகத்திற் சிவசந்நிதானத்திலிருக்கின்ற இடப தேவரின் பக்கத்திலிருக்கும் சிவப்பு நிறமுள்ள சுமனை, வெண்மை நிறமுள்ள சுரபி, கபிலநிறமுள்ள நந்தை, புகைநிறமுள்ள சுசீலை, கருமைநிறமுள்ள சுபத்திரை என்னும் பசுக்களைச் சிவபெருமான் ஆன்மாக்கள் உய்யும் காரணமாய்ப் பூமியிற் பிறக்கும்படி கட்டளை செய்தருளினர், அவை பாற்கடலினின்றும் சிவபூசை யாகாதி கன்மங்களுக்கு உபயோகமாதற் பொருட்டும் ஆன்மாக்களுடைய துன்பங்களை நீக்கியருளுதற் பொருட்டும். உற்பவித்தன. இவைகளில் பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்னும் பொருள்கள் தோற்றின. *

### பால்

ஒன்பது கோஷ்டம் அமைத்து, நடுக்கோட்டத்தில் சிவதத்துவத்தால் அமைக்கப்பட்ட இடத்தின் மீதாகத் தாபிக்கப்பட்ட சுப்பிரதிஷ்டை என்னும் பாத்திரத்தி னுள்ளாகப் பொருந்திய பாலை (க்ஷீரம்) ஈசான மந்திரங் கொண்டு ஒருமுறை பூசித்து அபிமந்திரிப்பது அதில் ஈசானம் என்னும் திருவருட்குணம் பதிதற்காகும். இத ஞற் சத்துருநிவாரணமாம். இதற்கு அதிபன் சுக்கிரன்.

### தயிர்

கிழக்குக் கோஷ்டத்தில் சதாசிவமென்னும் தத்து வத்தாலமைக்கப்பட்ட இடத்தின் மீதாகத் தாபிக்கப் பட்ட சுசாந்தமென்னும் பாத்திரத்தினுள்ளாகப் பொருந் திய தயிரை (ததி) தத்புருஷத்தா லிருமுறை பூசித்து அபிமந்திரிப்பது தத்புருஷகுணம் பதிதற்காகும். இத ஞற் புத்திரப் பேறுண்டாம். இதற்கு அதிதேவதை சந்திரன்.

* இது சிவதருமோத்தரத்திற் சொல்லப்பட்டது.



### நெய்

தெற்குக் கோட்டத்தில் வித்தியாதத்துவத்தால் அமைக்கப்பட்ட இடத்தின் மீதாகத் தாபித்த தேஜோவத் பாத்திரத்தினுள்ளாகப் பொருந்திய நெய்யை அகோரத் தினல் மும்முறை பூசித்து அபிமந்திரிப்பது அகோர மென்னுங் குணம் பதிதற்காகும். இது யாவராலும் பூசிக்கப்படும் மோக்ஷத்தைக் கொடுக்கும். இதற்கு அதி தேவதை உருத்திரன்.

### கோசலம்

வடதிசையில் புருஷதத்துவத்தினல் அமைக்கப் பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய இரத்திஞேதக பாத்திரத்தினுள்ளாக விருக்கும் கோசலத்தை வாமதே வத்தால் நான்கு முறை பூசித்து அபிமந்திரிப்பது வாம தேவகுணம் பதிதற்காகும். இது செல்வத்தைக் கொடுக் கும். இதற்கும் அதிதேவதை கங்கை.

### கோமயம்

மேற்றிசையில் காலதத்துவத்தால் அமைக்கப்பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய அமிர்தாத்மகபாத்திரத் திலிருக்கும் கோமயத்தைச் சத்தியோஜாதத்தால் ஐந்து முறை அர்ச்சித்து அபிமந்திருப்பது சத்தியோஜாதம் என்னுந் திருவருட்குணம் பதிதற்காகும். இது வியாதியை நீக்கும். இதற்கு அதிதேவதை சூரியன்.

கோமயத்தில் இச்சா ஞானக் கிரியா ரூபமான தளிருடன் வில்வந் தோற்றியது. அவ்வில்வத்தைத் திரு

மகள் விரும்பி அதன் கணிருக்கையால் ஸ்ரீபலம் என்னும் பெயரைப் பெற்றுச் சிவபெருமானுக்கு எக்காலமும் அணியத் தக்கதும் அர்ச்சித்தவர்களுடைய பாவங்களை நீக்குவதுமாகிய பெருமையைப் பொருந்தியிருக்கின்றது. பின்பு நீலோற்பலக் கிழங்கும் தாமரைக் கிழங்கும் தோற்றியன.

## அரிசிமா

அக்கினிதிசையில் பிருதுவிதத்துவத்தால் அமைக்கப் பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய வியக்த பாத்திரத்திலிருக்கும் அரிசிமாவை இருதய மந்திரத்தால் ஒரு முறையருச்சித்து, அபிஷேகஞ் செய்வதாற் பலவித தானியாதிகளுக்கு அதிபராதலையும் மலநிவாரணத்தையும் அடைவர். அதிதேவதை விட்டுணு.

## நெல்லிக் காப்பு

நிருதி திக்கில் அப்புதத்துவத்தாலமைக்கப்பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய சூரியபாத்திரத்திலிருக்கும் நெல்லிக்காப்பை சிரோமந்திரத்தால் அருச்சித்து அபிஷேகம் செய்தோர் செல்வத்தையும் ரோக நீக்கத்தையுமடைவர். அதிதேவதை இலக்குமி.

## மஞ்சட் காப்பு

வாயு திக்கில் மாயாதத்துவத்தா லமைக்கப்பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய சம்யோக பாத்திரத்திலிருக்கும் மஞ்சளை கவசத்தால் ஒரு முறையபிமந்திரித்து அபிஷேகம் செய்தவர் அனேக சம்பத்தையும் இராசவசியத்தையும் அடைவர். இதற்கு அதிதேவதை சந்திரன்.

## குசோதகம்

ஈசான திக்கிற் பிரகிருதி தத்துவத்தாலமைக்கப் பட்ட இடத்தின் மீதாகப் பொருந்திய அவ்வியத்த



மென்னும் பாத்திரத்திலிருக்குங் குசோதகத்தை மூலத்தினலருச்சித்தபிடேகித்தவர்கள் பிரமலோகத்தையடைவர்.

பஞ்சகவ்விய திரவியங்கள் அனைத்தும் கிடையாவிடின், தயிர், பால் என்னும் இவற்றுள் யாதாயினுமொன்றையும், கோமயம், கோசலமென்னுமிவற்றுள் யாதாயினுமொன்றையும் மற்றென்றுக்குப் பிரதிநிதியாக வைத்துக்கொள்ளலாம். பஞ்சகவ்விய திரவியங்களுள் எது இல்லையோ அதற்குப் பதிலாக நெய்யை வைத்துக்கொள்ளலாகும். இங்ஙனம் அம்சுமானகமத்திற் கூறப்பட்டது.

## பஞ்சாமிர்த விதி

பஞ்சாமிர்தமானது ரசபஞ்சாமிர்தமென்றும் பல பஞ்சாமிர்தமென்றும் இருவகைப்படும். பால், தயிர், நெய், தேன், சர்க்கரை என்பவற்றை விதிப்படி சேர்ப்பின் இரசபஞ்சாமிர்தமெனப்படும்.

பால், தயிர், நெய், தேன், சருக்கரை, கருப்பஞ்சாறு என்பவற்றால் பஞ்சாமிர்தங் கற்பித்து, பஞ்சகவ்வியம்போற் பூசிக்கவேண்டும். இதனாற் பஞ்சபாதக நாசமுண்டாம் என்று மகுடாகமங் கூறுகின்றது. இதுவும் ரசபஞ்சாமிர்தமாமென அறிக.

தேன், பால், தயிர், நெய், சர்க்கரை என்பவற்றைக் கிரமமாகக் கோட்டங்களில் வைத்து நாளிகேரோகத்தை ஈசான கோட்டத்தில் தாபித்துப் பூசித்து எஞ்சிய வாழைப்பழத்தை மூலமந்திரத்தாற் பூசித்து அபிஷேகிக்குமாறு சூக்ஷ்மாகமஞ் செப்புகின்றது.

பால், தயிர், நெய், தேன், சர்க்கரை என்பவற்றோடு விதிப்படி அமைக்கப்பட்ட வாழைப்பழம், பலாப்பழம், மாம்பழம் என்பவைகளது தொகுதி பல பஞ்சாமிர்தம் என்று சொல்லப்படும்.

நவகோஷ்டங் கற்பித்து நடுக்கோட்டத்திற் பாலை யும், கிழக்குக் கோட்டத்தில் தயிரையும், தெற்குக் கோட்டத்தில் நெய்யையும், வடக்குக் கோட்டத்தில் தேனையும், மேற்குக் கோட்டத்தில் சர்க்கரையையும், அக்கினி திக்குக் கோட்டத்தில் வாழைப்பழத்தையும், நிருதிதிக்குக் கோட்டத்தில் பலாப்பழத்தையும், வாயு திக்குக் கோட்டத்தில் மாம்பழத்தையும், ஈசான கோட் டத்தில் கந்தோகத்தையுந் தாபிக்கவேண்டும். பஞ்ச கவ்வியத்துக்குக் கூறியவாறு கோஷ்டபூசை முதலிய வற்றைச் செய்து சேர்த்து, அபிஷேகிக்கவேண்டும். கந்தோதகத்தைத் தனித்து அபிஷேகிக்கவேண்டும். இவ்வாறு சிந்திய விசுவத்திற் செப்பப்பட்டது.

வாழைப்பழம், பலாப்பழம், தேங்காய்த் துருவல், மாம்பழம், மாதுளம்பழம் என்னுமிவற்றைச் சேர்ப்பது பலபஞ்காமிர்தமென்று சூட்சுமாகமம் செப்பும்.

பலாப்பழம், மாம்பழம், தேங்காய்த் துருவல், வாழைப்பழம், கருப்பஞ்சாறு என்னும் ஐந்து திர வியங்களைச் சேர்த்துக்கொண்டு அபிஷேகிப்பதால் மகா பாதக நாசமுண்டாமென்றுங் காரணகமம் கூறுகின்றது.

### பஞ்சபலோதகம்

எலுமிச்சம்பழச்சாறு, நாரத்தம்பழச்சாறு, குளஞ் சிப்பழச்சாறு, தமரத்தம்பழச்சாறு, மாதுளம்பழச்சாறு ஆகிய இவைகளை விதிப்படி கூட்டின் பஞ்சபலோதகம் எனப்படும். இவைகளைப் பதமந்திர முச்சரித்து அபி ஷேகிக்க.

### அபிஷேகபலன்

சந்தனாதித் தயிலம் சுகத்தையும், மாக்காப்பு, மல நாசத்தையும், நெல்லிக்காப்பு, (ஆமலகம்) ரோகநாசத் தையும், மஞ்சள்மா, இராசவசியத்தையும், பஞ்சகவ்வி யம் ஆன்மசுத்தியையும், ரசபஞ்சாமிர்தம் வெற்றியை



யும், பவபஞ்சாமிர்தம் செல்வத்தையும், பஞ்சபலோ தகமம் மந்திரசித்தியையும், பால் ஆயுள்விருத்தியை யும், தயிர்பிரஜாவிருத்தியையும், நெய் மோக்ஷத்தையும் தேன் சங்கீதவன்மையையும், கருப்பஞ்சாறு நித்திய சுகத்தையும், சருக்கரை சத்துருநாசத்தையும், வாழைப் பழம் பயிர்விருத்தியையும், பலாப்பழம் லோகவசியத் தையும், மாம்பழம் சகலவெற்றியையும், தமரத்தம் பழம் பூமிலாபத்தையும், மாதுளம்பழம் பகைநீக்கத் தையும், நாரத்தம்பழமும் கிடாரநாரத்தம்பழமும் சற் புத்தியையும், எலுமிச்சம்பழம் மிருத்யு நிவாரணத்தை யும், தேங்காய்த்துருவலும் அன்னமும் அரசுரிமையை யும், இளநீர் சற்புத்திரப்பேற்றையும், அபமிருத்து நாசத்தையும், கோரோசனை தீர்க்காயுளையும், பச்சைக் கற்பூரம் பயநாசத்தையும், கஸ்தூரி வெற்றியையும், பனிநீர் சாலோக்கியத்தையும், சந்தனக்குழம்பு சாயுச் சியத்தையும், சகஸ்ரதாரை ஞானத்தையும், ஸ்நபனம் ஜன்மசாபல்லியத்தையும் சாரூப்பியத்தையும், கொடுக் குமென்று அபிஷேகபலன் வீராகமம் கூறுமென அறிக.

### திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்

பண் — காந்தாரபஞ்சமம்

பாலினுனறு நெய்யாற் பழத்திறற் பயின்ருட்டி
நூலினுன் மணமாலை கொணர்ந் தடியார் புரிந்தேத்தச்
சேலினுர் வயல்புடைசூழ் செங்காட்டங் குடியதனுள்
காலினுற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

பாவநாசத்திருக்குறுந்தொகை

பாவமும் பழிபற்றற வேண்டுவீர்
ஆலிலைஞ் சுகந்தாடு மவன்கழல்
மேவராய் மிகவும் மகிழ்ந் துள்குமின்
காவலாளன் கலந்தருள் செய்யுமே.

## திருநேரிசை

தொண்டனேன் பட்டதென்னே தூயகாவிரி யினன்னீர்
கொண்டிருக் கோதியாட்டிக் குங்குமக்குழம்பு சாந்தி
இண்டைகொண்டேற நோக்கியீசனை யெம்பிரானைக்
கண்டனைக் கண்டிராதே காலத்தைக் கழித்தவாறே

## திருக்குறுந்தொகை

செய்ய மெனியன் றேனேடு பாறயிர்
நெய்ய தாடிய நீலக் குடியரன்
மையலாய் மறவா மனத்தார்க் கெலாம்
கையில் ஆமலகக் கனியொக்குமே.

## திருவொற்றுடை

சிவபெருமானுக்குத் திருவொற்றுடை சாத்தியவர்கள் தங்கள் மரபிலுள்ள கோடி சுற்றத்தினரை நரகத்தினின்றும் நீக்கி அப்பெருமானுடைய திருப்பாத நீழலை அடைவார்கள்.

## கணபதி மகாலக்குமி குரு வந்தனம்

பீடத்தின் வாயுமூலையில் தெற்கு நோக்கிய முகமுடையவராய்க் கணபதியையும், அவருக்குக் கிழக்கே சிவசத்தி ரூபமாகிய மகாலட்சுமியையும் முன்சொல்லப்பட்ட வடிவுடையவராய்ப் பூசித்து ஈசானத்தில் சதாசிவகுரு, அநந்தகுரு, ஸ்ரீகண்டகுரு, அம்பிகாகுரு, ஸ்கந்தகுரு, விஷ்ணுகுரு, பிரமகுரு என்னும் சத்தகுரவர்களையும் தியானித்துப் பூசித்துச் சாமானியார்க்கியங்கொடுத்து, கணபதி இலக்குமி சத்தகுரு இவர்களை யான் சிவனைப் பூசிப்பதற்கு அனுமதிதரல் வேண்டுமென்று பிரார்த்தித்து அனுமதியைப் பெற்றுக் கொண்டு சிவத்தைப்பூசிக்க. சத்தகுருவையுஞ் சிவனைகப் பாவித்துப் பூசிப்பதனுல் ஞானமுண்டாம். பின்பு சிவாசன பூசை செய்க.



## சிவாசன உறுப்பு

### கூர்மாசனம்

1. பிருதிவிதத்துவம் தாமரைக்கிழங்கு; அது ஆதாரசத்தியின் சிரசிலிருக்கும். நிவிர்த்தி கலையால் வியாபிக்கப்படும்.

காலாக்கினி ருத்திரபுவனம்முதல் பத்திரகாளி புவனம் வரையுமுள்ள புவனங்கள் 108

இவை ஆதாரசத்தியின் உறுப்புக்களாக இருக்கும்.

### அநந்தாசனம்

2. சலதத்துவம் கிழங்கை நெகிழ்விக்கும். இதில் அமரேசம் முதலிய புவனங்கள் 8

3. அக்கினிதத்துவம் ஒன்றுபடுத்தி நீரை இழுக்கும். இதில் அரிச்சந்திரம் முதலிய புவனங்கள் 8

4. வாயுதத்துவம் இயக்கிக்கூட்டும். இதில் கெயம் முதலிய புவனங்கள் 8

5. ஆகாசதத்துவம் இடங்கொடுக்கும்; இதில் வஸ்திரபாதம் முதலிய புவனங்கள் 8

6+10. கந்தம், இரசம், ரூபம், பரிசம், சத்தம் என்னுந் தத்துவங்கள் தாமரையின் முளையாகும். இதில் சகலண்டர் முதலிய புவனங்கள் 4

11+20. வாக்கு, பாதம், பாணி, பாயு, உபத்தம், சுரோத்திரம், துவக்கு, சட்சு, சிஹ்வை, ஆக்கிராணம் என்னும் பத்துத்தத்துவங்கள் ஒன்பது துளைகள்

கருமேந்திரிய தத்துவங்களில் காலஞ்சன புவனதிருக்கும் 1

ஞானேந்திரியத்தில் சங்குகர்ண புவனமிருக்கும். 1

21, 22, 23. மனம், அகங்காரம் புத்தி என்னுந் தத்துவங்கள் அகத்தில் நின்று தொழிற்படுத்தும். மனதில் தூலேசுரபுவனம் 1

அகங்காரத்தில் தலேசுவரபுவனம் 1

### சிம்ஹாசனம்

புத்தியின் பாவட்டங்களாகிய தருமம் முதலியவை சிம்ஹவடிவங்களாக விருக்கும்.

புத்திதத்துவத்தில் ஐந்திரமுதலிய புவனம் 8

இந்திரபுவனத்தார் தரும குணமும், சௌமிய புவனத்தார் ஞானகுணமும், பிரசாபத்திய புவனத்தார் வைராச்கிய குணமும், பிரமபுவனத்தார் ஐசுவரியகுணமும், கந்தருவபுவனத்தார். அதர்ம குணமும், இயக்க புவனத்தார் அஞ்ஞான குணமும், இராக்கத புவனத்தார் அவைராக்கிய குணமும் பைசாச புவனத்தார் அனைசுவரிய குணமுமுடையராயிருப்பர்

### யோகாசனம்

24. பிரகிருதிதத்துவம் இதில் அகிர்தம் முதலிய புவனங்கள் 8

இவை பிரதிட்டாகலையால் வியாபிக்கப்பட்டவை.

25. புருடதத்துவம்: இதில் வாமம் முதலிய புவனங்கள் 6

26. அராகதத்துவம்: இதில் பிரசண்டம் முதலிய புவனங்கள் 5

27. வித்தியாதத்துவம்: இதில் குரோதம் சண்டம் என்னும் புவனங்கள் 2

28. கலாதத்துவம்: இதில் தியுதிசம்வர்த்தம் என்னும் புவனங்கள் 2



29. நியதிதத்துவம்: இதில் சூரம் பஞ்சாந்தகம் என்னும் புவனங்கள்

30. காலதத்துவம்: இதில் ஏகவீரம் சிகேதம் என்னும் புவனங்கள் 2

சலதத்துவம் முதலிய இருபத்தொன்பதும் நாளவடிவாகும். அமரேசம் முதலிய புவனங்கள் எழுபத்தைந்தும் நாளத்தின் முட்களாகும்.

31. அசுத்தமாயாதத்துவம் புறவிதழாகும்; இதில் மகாத்யுதி முதலிய புவனங்கள் 8

இத்தத்துவங்கள் வித்தியாகலையால் வியாபிக்கப்பட்டவை.

### பதுமாசனம்

32. சுத்தவித்தியாதத்துவத்தில், அஷ்டவித்தியேசுவர ரூபங்களாகிய எட்டுத் தளங்களிருக்கும். தளாக்கிரங்களில் சூரியமண்டலமிருக்கும்.

### விமலாசனம்

33. ஈசுவரதத்துவம்

34. சதாசிவதத்துவம் 64 கேசரங்கள். அவை கலாசத்திகளின் வடிவங்களாய் அமைந்துள்ளன. இவை சாந்திகலையையுடையன.

கேசராக்கிரத்தில் சோமமண்டலம். கிழக்குமுதல் எட்டெட்டாகவுடைய 64 கேசரங்களிலும் வாமை முதலிய எட்டுச்சத்திகள் இருப்பர். சாதாக்கிய தத்துவத்தில் சாதாக்கிய புவனம் 1

35. சத்திதத்துவம் பொகுட்டு வடிவாகும்; பொகுட்டு நுனியில் அக்கினிமண்டலம். பொகுட்டில்

மனோன்மனியிருக்கும் இதில் நிவிர்த்தி முதலிய புவனங்கள் 5

36. சிவதத்துவம் ஐம்பது பீசவடிவாகும். அவை ஐம்பது வர்ணங்களை அதிதேவதையாகவுள்ளன. இதில் இந்திகை முதலிய புவனங்கள் 10

## சத்திமண்டலம் பிரணவாசனம்

### சிவாசனம்

ஆதாரசத்திமுதல் குடிலாசத்தியந்தமாகவுள்ளதும், முப்பத்தாறு தத்துவங்களையும் இருநூற்றிருபத்து நான்கு புவனங்களையும் உறுப்பாகவுள்ளதும், அநந்தாசனம் சிம்ஹாசனம், யோகாசனம், பதுமாசனம், விமலாசனம் என்னும் ஐந்து பிரிவுகளையுடையதுமாகிய பெருமை வாய்ந்தது. சிவமூர்த்திக்கு ஆசனமாம். ஆதாரசத்திமுதல் குடிலாசத்தியீறாக அடைவிலே அருச்சிப்பது திராசனமாம்.

### சைவ சமய நெறி

ஆதார சத்தி முதற்குடிலா சத்தியந்த
மோதாய் திராசனமென் றோர்ந்து.

### சிவதருமோத்தரம்

பதுமாதனந் தானுற விருப்பர் சதாசிவர்
தத்துவந்த விசினுகந்தே.

### கூர்மாசனம்

காலாக்கினிருத்திர புவனத்துக்குக் கீழுள்ளதாகிய கூர்மத்திற் பால்போன்ற வெண்மையான தேகமுள்ளதாய், சிரசில் வித்தின்முளைபோன்ற வடிவுடையதாய், வரதம் அபயம் பாசம் அங்குசமாகிய ஆயுதங்களைத்



தரித்ததாய், உலகத்துக்கு ஆதாரமாய், அநாகதருடைய மூர்த்திபேதமாயுள்ளதுமாகிய ஆதாரசத்தியிருக்கும். இச்சத்தி பிரமாண்டத்தை வியாபித்துப் பாற்கடலிலிருந்து வெளிப்பட்டுப் பின்னர் அண்டத்தைக் காரியப்படுத்திக் கந்தத்திலுதித்த முளைபோலிருக்கும். இதனை முதலில் இலிங்கபீடத்தின் கீழ்ப்புறத்திலே கூர்மசிலையிற் பூசிக்கவேண்டுமென்று ஸ்ரீமத் சர்வஞானோத்தரத்திற் சொல்லப்பட்டது.

1. பிரமாண்டத்துட் காலாக்கினி ருத்திரபுவனமானது பொன்மயமானதும் கோடி சூரியப்பிரகாசமுள்ளதுமாயிருக்கும். அதனுள் காலாக்கினிருத்திரரானவர் அம்பும் வாளும் வில்லும் பரிசையுந் தரித்தவராய்த் தமது சாரூப்பியத்தையடைந்த அநேக ருத்திரர்களாற் சூழப்பட்டிருப்பர். 2. அப்புவனத்துக்குமேலுள்ள நரகங்களுக்கதிபராகிய கூர்மாண்டருத்திரர் பிரளயகால சூரியனைப் போலவும், அக்கினியைப் போலவும் ஒளியுள்ளவராய், மழுவும் வில்லும் அம்பும் பரிசையுந் தரித்தவராய்த், தம்மைப்போன்ற அநேக ருத்திரராற் சூழப்பட்டிருப்பர். 3. ஏழு பாதாளங்களுக்குமேல் அவ்வப் பாதாளாதிபருக்கெல்லாந் தலைவரான ஆடகேசுவரர் பொன்மயமான ஆலயத்தில் தேவர் முதலியோர் தமது பாதங்களிற்றுதிக்க வீற்றிருப்பர். பொன்மயமான பாதாளங்களுக்கதிபராகையால் ஆடகேசுரரெனப்படுவர், 4. இதற்குமேற் பிரம புவனமும், 5, வைஷ்ணவ புவனமும், 6. உருத்திரபுவனமுமிருக்கும்.

குக்குடாண்டம் போன்றிருக்கின்ற அண்டகடாகப் புறம்பே கிழக்கு முதலிய பத்துத்திக்குகளிலுமிருக்கின்ற நூறு புவனங்களிலும் நூறு ருத்திரரிருப்பர். அவர்கள் பலவிதமான ரூபங்களையுடையவர்களாயும், மிகுந்த சக்தியுள்ளவர்களாயும், பலவிதமான ஆயுதங்களைத்

தரித்தவர்களாயும், அநேக பரிவாரங்களாற் சூழப்பட்டவர்களாயுமிருப்பர்.

இந்திரதிக்கில் கபாலீசர், அசர், புத்தர், வச்சிரதேகர், பிரமர்த்தனர், விபூதி, அவ்வியயர், சாத்தா பிநாகி, திரிதசாதிபர் என்னும் பத்துருத்திரரும் இந்திரனுடைய பலத்தையடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.

அக்கினிதிக்கில் அக்கினி ருத்திரர், உதாசனர், பிங்களர், காதகர், ஹரர், சுவலனர், தகனர், பப்புரு, பஸ்மாந்தகர், க்ஷயாந்தகர், என்னும் பதின்மரும் அக்கினியினுடைய பலத்தையடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.

யமதித்கில் யாமியர், மிருத்யு, ஹரர், தாதா, விதாதா, கர்த்தா, சம்யோக்தா வியோக்தா, தருமர், தருமேசர் என்னும் பத்துருத்திரரும் இயமனுடைய பெலத்தை அடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.

நிருதிதிக்கில் நிருதி, மாரணர், ஹந்தா, குரூராக்ஷர், பயாநகர், ஊர்த்துவசேபர், விரூபாக்ஷர், தூமிரர், லோகிதர், தம்ஷ்டிரி என்னும் பதின்மரும் நிருதியினுடைய பெலத்தை அடக்கி அவனாற்பூசிக்கப்பட்டுத் தலைவராயிருப்பர்.

வருணதிக்கில் பெலர், அதிபெலர், பாசஹஸ்தர், மகாபலர், சுவேதர், ஜயபத்திரர், தீர்க்கபாகு, சலாந்தகர், மேகநாதர், சுநாதர் ஆகிய பத்துருத்திரரும் வருணனுடைய பெலத்தையடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.

வாயுதிக்கில் சீக்கிரர், கரு, வாயுவேலர், சூக்குமர், தீக்ஷணர், க்ஷயாந்தகர், பஞ்சாந்தகர், பஞ்சசிகர், கபர்த்தி, மேகவாகனர் ஆகிய பத்துப்பேரும் வாயுவினுடைய பெலத்தையடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.



குபேரதிக்கில் நிதீசர், ரூபவான், தன்னியர், சௌமியர், சடாதரர், இலட்சுமீதரர், இரத்தினதரர், ஸ்ரீதரர், பிரசாதர், பிரகாமர் ஆகிய பத்துருத்திரரும் குபேரனுடைய பெலத்தையடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்,

ஈசானதிக்கில் வித்தியாதிபர், ஈசானர், சர்வஞ்ஞர், ஞானி, வேதபாரகர், சுரேசர், சர்வர், சியேட்டர், பூதபாலர், பலிப்பிரியர் என்னும் பத்துருத்திரரும் ஈசான நாயகராயிருப்பர்.

அண்டகடாகத்தின் மேலே பிரமதிக்கில் சம்பு, விபு, கணாத்தியக்ஷர், திரியக்ஷர், திரிதசேருவரர், சம்வாஹர், விவாஹர், நபஸ், லிப்ஸ் திரிலோசனர் என்னும் பத்துருத்திரரும் பிரமாவினுடைய பெலத்தை அடக்கி அவனாற் பூசிக்கப்பட்டிருப்பர்.

அண்டகடாக வோட்டுக்குக்கீழ் விட்டுணுதிக்கில் விருஷர், விருஷதரர், அநந்தர், குரோதனர், மாருதாசனர், கிரசனர், உதும்பரீசர், பணீந்திரர், வஜ்ரர், தம்ஷ்டிரி ஆகிய பத்துருத்திரரும் விட்டுணுவினுடைய பெலத்தை அடக்கி அவராற் பூசிக்கப்பட்டிருப்பர்.

### வாயுசங்கிதை

உருத்திரர் சகத்தினை யுறைந்திங் கேவுவார்
சரித்திடு சடைமுடிச் சதவுருத்திரர்
பொருந்திய வண்டங்கண் முழுதும் பொற்புறத்
திருத்திய வாணையே செலுத்தி வைகுவார்.

பிரமாண்டத்துக்குமேல் வீரபத்திர புவனமும் பத்திரகாளிபுவனமுமிருக்கும். ஆகப் பிருதிவிதத்துவ புவனங்கள் நூற்றெட்டு.

## 1. அனந்தாசனம்

பிருதிவிதத்துவம் மாணிக்கரத்தினம் போன்ற கிழங்காகவும், கலாதத்துவம் வரையும் ஒருருவாகிய நாளமாகவும், பாவங்களாகிய முட்களுள்ளதாகவும், அநேக தளங்களோடு கூடியதாகவுமுள்ள கலக்கப் பட்ட மயாதத்துவமாகிய மகாபத்மத்தைத், தியானிக்க வேண்டும்.

அந்தப் பத்மத்தின் நடுவில் இருப்பவரும், அதோ வியாபகத்தோடு கூடியவரும், வெண்மை நிறமுடைய வருமாகிய அநந்தேசரை சிவாசனமாகிய பிரமசிலை யின் நடுவில் தியானிக்க.

முன்சொல்லப்பட்ட தாமரைக்கிழங்கைச் சலதத் துவமானது நனைத்துக் குளிர்வித்து நெகிழச் செய் யும். அமரேசர், பிரபாசர், நைமிசர், புஷ்கரர், ஆஷாடி, டிண்டிமுண்டி, பாரபூதி, இலகுளீசுரர் என்னும் எட்டுப் பேரும் இத்தத்துவத்திலுள்ள போகபூமிகளிலிருக்கும் ஆன்மாக்கள் அனுபவிக்கும் பலன்களை நியமிக்கின்ற வர்களாய்க் * குஹ்யாட்டக கணங்களாயிருப்பர்.

மேற்கூறிய எட்டு ருத்திரர்களுள் இலகுளீசர் வலக் கரங்களில் மழுவும் சூலமும், இடக்கரங்களில் கமண்ட லமும் ஞானமுத்திரையுந் தரித்தவராய், ஆன்மாக்களு டைய ஆணவாதி மலங்களைப் போக்கி நற்கதியனுக் கிரகிக்குமாறு ஆசாரிய மூர்த்தியாய் வீற்றிருப்பர்.

அக்கினி தத்துவமானது உஷ்ணத்தை யுண்டாக்கி நீரையிழுத்து ஒன்றுபடுத்தும். அரிச்சந்திரர், ஸ்ரீசைவர், ஜல்பியேசுரர், ஆம்ராதகேசுவரர், மத்தியமேசுரர், மகா காளர், கேதாரர், பைரவர் என்னும் அதி குஹ்யாட் டக கணர்கள் ஆன்மாக்களுக்குப் போகநியமனஞ் செய்வர்.

* மிருகேந்திராகமம்.



வாயுதத்துவமானது இயக்குவித்துக் கூட்டும். கெயர், குருக்ஷேத்திரர், நாகலர், நகலர், விமலேசுரர், அட்டகாசர் மகேந்திரர், பீமேசுரர் என்னும் குஹ்யத ராஷ்டகர் எண்மரும் வாயுதத்துவத்திலிருப்பர்.

ஆகாச தத்துவமானது இடங்கொடுத்து வெளியாய் நிற்கும். வஸ்திரபாதர், உருத்திரகோடி, அவிமுக்தர், மஹாலயர், கோகர்ணர் பத்திரகர்ணர், சுவர்ணாக்ஷர், தாணு என்னும் பவித்திராஷ்டக கணர்கள் அப்புவனங் களிலுள்ள ஆன்மாக்களுக்குப் போக நியமனஞ் செய்வர்.

தாமதகுணத்தை மிகுதியாகவுடைய பூதாதி அகங் காரத்தினின்றுந் தோன்றிய கந்தம் இரசம் ரூபம் பரி சம் சத்தம் ஆகிய தன்மாத்திரைகளைந்தும் தாமரை யின் பவளம் போன்ற முளையாகும். இராசதகுணத் தைப் பொருந்திய வைகாரியகங்காரத்திலே தோன்றிய வாக்குபாதம் பாணி பாயு உபத்தம் ஆகிய கன்மேந் திரியங்களைந்தும். சாத்துவிக குணத்தைப் பொருந்திய தைசதவகங்காரத்தில் தோன்றிய சுரோத்திரம் துவக்கு சட்சு சிஹ்வை ஆக்கிராணமாகிய ஞானேந்திரியமைந் தும் ஆகப்பத்துத் தத்துவங்களும் ஒன்பது துளைகள். இவைகளுக்குக் கரணமென்று பெயர். ஒன்பது துளை கள் வழியாக இச்சாசத்தி ஞனசத்தி கிரியாசத்திரூப மாகிய சுழுமுனை பிங்கலை இடை என்னும் மூன்று நாடிகள் சஞ்சரிக்கும். ஒவ்வொன்றும் மும்மூன்றாகி ஒன்பது பிரிவுகளாகின்றன.

மனஸ்தத்துவம் அகங்காரதத்துவம் புத்தி தத்துவ மென்னும் மூன்றும் அகத்து நின்று தொழிற்படுத்து மாகையால் அந்தக்கரணமென்று சொல்லப்படும். இவற்றுள் மனத்தத்துவம் சங்கற்பிக்கும். அகங்கார தத்துவம் நடுவிலிருந்து பலவிருத்திகளைக் கொடுக்கும். அது எட்டு வகைப்படும். அவை * தைசதவகங்காரம்,

* தைசதம்—அறிவு

△ வைகாரியகங்காரம், ○ பூதாதியகங்காரம், போகம் புசிக்கைக்கு மாறுபாடான தமம் என்னும கங்காரம், அதிற் பெரியதான மயக்கமாகிய மகாமோகம், இருள் பொருந்திய தமிச்சிரமென்னு மகங்காரம், அதிற்றெரி யாமையென்னும் அந்ததாமிச்சிரம் என்பன. இவை ஆன்மாவின் நற்குணத்தை மறைப்பன. தன் மாத் திரையிலும் இந்திரிய தத்துவங்களிலும் மனத்தத்துவம் அகங்காரதத்துவத்திலுமுள்ள எட்டுப்புவனங்களில் * சகலண்டர் முதலிய தாணுவாஷ்டக கணங்கள் இருப் பர்.

## 2. சிம்ஹாசனம்

அநந்ததேவருடைய பெலரூபங்களும், ஒன்றுக் கொன்று பின்புறஞ் சேர்ந்தவைகளும், கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகமென்னும் நான்கு யுகங்களின் ரூபங்களாகிய கால்களையுடையவைகளும், அக்கினிதிக்கு முதல் ஈசானதிக்கு வரையுமுள்ள கோணங்களில் தருமம் ஞானம் வைராக்கியம் ஐசுவரிய மென்னும் பெயர்களையுடையவைகளும், வெண்மை சிவப்பு பொன்மை கறுப்பு என்னும் நிறங்களையுடைய வைகளும் ஆகிய சிங்கங்களிருக்கின்றன. கிழக்கு முதலிய நான்கு திசைகளிலும் முறையே வெண்கறுப்பு, வெண்சிவப்பு, சிவப்புக் கலந்த பொன்னிறம், பொன்மை கலந்த கறுப்பு என்னும் நிறங்களையுடைய நான்கு காத்திரங்களாகிய அதர்மாதிகள் இருக்கின்றன.

---

△ வைகாரி—தொழில். ○ பூதாதி—உருவம்.

* பஞ்சதன் மாத்திரைகளில் சகலண்டர், துவிரண் டர், மாகோடர், மண்டலேசுரர்-4. கன்மேந்திரியத்தில் காலாஞ்சனர்-1. ஞானேந்திரியத்தில் சங்குகர்ணர்-1. மனத்தத்துவத்தில் தூலேசர்-1. அகங்கார தத்துவத் தில் தலேசுவரர்-1. ஆக-8.



அல்லது உடம்புகள் வெண்மை நிறமானவைகளும் மூன்று கண்களையுடையவைகளும். அசைவற்றகை சிரசு. கழுத்து ஆகிய இவைகளையுடையவைகளும். மனித ரூபமுடையவைகளும், புத்தியின் குணங்களா கிய அதன்மம் முதலியவைகளை அதிட்டிக்கின்றவை களுமாகிய சிங்கங்கள் இருக்கும். எனக்கொள்ளு தலுமாம்.

### புத்திதத்துவம்

இராசதமும் தாமசமுங் குறைந்து சாத்துவிகம் மேலிட்ட தத்துவம் புத்தியாம், அப்புத்தி எட்டுக் குணங் களையுடையது. அவை தருமம், ஞானம், வைராக்கியம், ஐசுவரியம், அதருமம், அஞ்ஞானம், அவைராக்கியம், அனைசுவரியம் என்பன.

புத்தி தத்துவத்தில், பைசாசம், இராக்ஷசம், யக்ஷம், கந்தர்வம், இந்திரம், சௌமியம், பிராசேசம், பிராமம் என்னும் புவனங்கள்.

## 3. யோகாசனம்

### குணதத்துவம்

ஆலம் வித்தில் அங்குரந் தோன்றியது போல அவ் வியத்தத்தில் சாத்துவிகம், இராசதம், தாமதமென மூன் றுய்த் தோன்றும் இக்குணங்கள் வியத்தமாயும் பிரிந்து தோன்றுதும் சமமாய் நின்ற அவதரம் குணதத்துவமாம்.

அவற்றுள் சாத்துவகுணம் பதினைந்து விருத்திகளை யுடையது. அவை சாதிநெறி நிற்றல், பெரியோரைப் பேணல், கற்றறிவுடைமை, இனியவை கூறல், தற்புக ழாமை, உள்ளதே வருமென மகிழ்ந்திருத்தல், நடுவு நிலைமை, சுத்தநியமம் பொறை, கடைப்பிடி, பிறர்க் கிதஞ் செய்தல், இந்திரலோகாதிகளில் வாஞ்சை, பிறர்

தன்னைப் புகழுங்கால் தான் தன்னை யிகழ்தல், அடக்க முடைமை, தன்பா லிரந்தார்க்கு இரங்குதல் என்பன.

இராசதகுணம் ஒன்பது விருத்திகளை யுடையது. அவை சௌரியம், குரூரமுடைமை, ஊக்கமுடைமை, மானமுடைமை, வைராக்கியம், பலம், வன்கண்மை, கோபியாதல், இடம்பத்தனம் என்பன.

தாமதகுணம் ஒன்பது விருத்திகளை யுடையது. அவை அழத் தகாதவற்றிற்கு அழுதல், கல்வியில்லா ராதல், இகழ்ந்தாரைச் சேர்ந்து வாழ்தல், கோளுரை, மமதை, பேருறக்கம், நன்மை செய்தற் கிளைத்தல், குலம் குணம் ஈகை இரக்கங்களாலே தனக்கு ஒருவரும் நிகரில்லை யென்கை, திருடுதல் என்பன. ஆக விருத்திகள் முப்பத்து மூன்ருகும்.

## மூலப்பிரகிருதி

குணதத்துவத்தின் காரணமாகிய மூலப்பிரகிருதி முக்குணவடிவாயிருக்கும். அதில் எட்டுப் புவனங்கள் உள்ளன. அவை அகிர்தம், கிர்தம், பைரவம், பிராமம், வைணவம், கௌமாரம், ஔமம், ஸ்ரீகண்டம் என்பன. இவை யோகீசுவரருடைய தானங்கள்.

## பிராம்மபுவனம்

இவற்றுள் பிராம்மபுவனத்தின் நடுவணுகப் பொருந்திய பொன்மயமான ஆலயத்தில் பிரமாவான வர் அசுத்த தத்துவவாசிகளாகிய ஆன்மாக்களைச் சிருட்டித்துக் கொண்டிருப்பர்.

## வைணவபுவனம்

பிராம புவனத்துக்கு மேல் இந்திரநீலம் போன்றதும் போகங்களையும் அலங்காரத்தையு முடையதுமாகிய வைஷ்ணவ புவனத்தின் நடுவணுகப் பொருந்திய ஆலயத்தில் விஷ்ணுவானவர் ஆன்மாக்களைப் பரிபாலஞ் செய்துகொண்டு, தம்மைப் போன்ற சாரூப்பியத்தைப் பெற்ற அநேக அடியார்களாலே சூழப்பட்டிருப்பார்.



பிருதுவி முதலிய ஐந்தும், மனம், அகங்காரம், புத்தி, பிரகிருதியும் ஆகிய ஒன்பது தத்துவங்களும் விஷ்ணுவினுடைய இருதயத்துள்ளே செறிந்துநின்று அறிவை விளக்கு மெனச் சிவதரு மோத்தரம் கூறுகின்றது.

## கௌமார புவனம்

அதற்குமேல் முத்தின் பிரபை போன்ற கௌமார புவனத்தில் குமாரக் கடவுள் எழுந்தருளியிருப்பர். அவரைத் தியானித்தவர்கள் அப்புவனத்தை யடைந்து விரும்பியபடி அளவிறந்த போகங்களை அனுபவித்திருப்பர்.

## ஔம புவனம்

அதற்குமேல் ஔம புவனத்திலிருக்கும் உமாதேவியாரை உதயகிரியி லுதிக்கும் கோடிசூரியப் பிரகாசம் போலத் தியானஞ் செய்தவர்கள் அப்புவனத்தில் வாழ்வார்கள்.

## ஸ்ரீகண்ட புவனம்

உமா புவனத்துக்கு மேல் கோடி ஆதித்தியப் பிரகாசம் போன்றதும், அளவற்ற வளங்களை யுடையதும், உவமிக்க வொண்ணுததும், உருத்திரர் விஷ்ணு முதலானேர்களாற் சேவிக்கப்படுவதுமாகிய பிரகிருதிச் சிவலோகத்தில் ஸ்ரீகண்டபரமேசுரர் இருப்பர். அநந்தேசுரரால் அதிட்டிக்கப்பட்ட இவ் வுருத்திரர் அவ்வியத்தத்திற்குக் கீழ்ப் பிரமாவை அதிட்டித்துப் படைத்தலையும், விட்டுணுவை அதிட்டித்துக் காத்தலையும் காலாக்கினி ருத்திரரை அதிட்டித்துந் தாமாகவும் சங்கார கிருத்தியத்தையுஞ் செய்வர்.

கிழக்கு முதலிய நான்கு திக்குகளிலும் அவ்வியக் தம் நியதி காலம் கலை என்னுந் தத்துவங்களிருக்கும். மேன்மேகலையின் கீழ்ப்பாகத்தில் சிவப்பு நிறம்பொருந் திய பத்மத்தின் கீழிதழ் அசுத்தமாயா தத்துவம் வரையு மிருக்கும். அதற்கு மேல் வெள்ளை நிறம் பொருந்திய மேலிதழ் சுத்தவித்தியா தத்துவத்தின் கீழ்ப்பாகம் வரையு மிருக்கும். வித்தியாகலை யோகாசனத்தை அதிட் டித்து நிற்கும். யோகாசனம் ஆன்மாக்களுக்கு அறி வைக் கொடுக்கு மிடம்.

நாதரூபமாகிய சிவதத்துவம் அதோமாயையிலே நின்று ஆன்ம தத்துவம் இருபத்துநாலுக்கும் உபதான மாகிய பிரகிருதி மாயையை உண்டாக்கியும், சத்திதத் துவத்தை அதிட்டித்துக் காலம், நியதி, கலை என்னும் தத்துவங்களைத் தோற்றுவித்தும், சுத்த வித்தை வித்தை யைத் தோற்றுவித்தும் ஈசுவரம் அராகத்தைத் தோற்று வித்தும், இங்ஙனம் தோற்றுவிக்கப்பட்ட காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங்களும் கூடிய சங்கத்தில் உண்டான புருட தத்துவத்தை சாதாக்கிய தத்துவம் காரியப்படுத்தியும் வரும்.

இச்சாசக்தி ஈசுவர தத்துவத்தை எழுப்ப, ஈசுவர தத்துவம் அராக தத்துவத்தை எழுப்ப, அராக தத்து வம் பெத்தான்மாக்களுக்கு இச்சையை எழுப்பும், முத் தான்மாக்களுக் குண்டாக்காது.

கிரியாசக்தி சத்திதத்துவத்தை எழுப்ப சத்திதத்து வம் கலாதத்துவத்தை எழுப்ப, கலை ஆணவத்தைச் சிறிதே நீக்கி, அந்தக் கலைவடிவாக ஆன்மாவுக்குச் சிறிதே அறிவை உண்டாக்கும். கலா என்பதற்கு நீக் கலும் நியமித்தலும் அர்த்த மாகையால் அந்தக் கலை யானது கன்ம விருளை நியதி ரூபமான போக நிய மனத்தைச் செய்யும். எங்கும் மூடிக் கொண்டிருக்கும் அந்தகாரத்தில் தீபமானது அந்த இருளை ஒரு பக்கத்



தில் ஒதுக்கி விஷயத்தைக்காட்டுவது போல, எங்கும் மறைத்துக்கொண்டிருக்கும் மலத்தை ஒருபக்கத்தில் தள்ளி ஞானத்தைப் பிரகாசிப்பிக்கும்.

ஞானசத்தி சுத்தவித்தையை எழுப்ப, சுத்தவித்தை வித்தியாதத்துவத்தை எழுப்ப, வித்தை ஆன்மாக் களுக்கு அறிவை உண்டாக்கும்.

கிரியாசத்தி சத்திதத்துவத்தைக்கொண்டு நியதியை எழுப்ப நியதிபொருளை நிச்சயிக்கும். கிரியாசக்தி சத்திதத்துவத்தைக் கொண்டு காலத்தை எழுப்ப, காலம் ஆன்மாவுக்கு முக்காலங்களிலுள்ள புசிப்பைக் கூட்டும்.

புருடதத்துவத்திலுள்ள புவனங்களில் வாமர், பீமர், உக்கிரர், பவர், ஈசானர், ஏகவீரர் என்னுமறுவரும் அதிபராயிருப்பர். அராக தத்துவத்திலுள்ள புவனங் களில் பிரசண்டர், உமாபதி, அஜர், அனந்தர், ஏக சிவர் என்னுமைவருமதிபராயிருப்பர். வித்தியாதத்து வத்திலுள்ள புவனங்களில் குரோதர், சண்டர் என்னு மிருவருமதிபராயிருப்பர். காலதத்துவத்திலுள்ள புவ னங்களில் தியுதி சம்வர்த்தர் என்னுமிருவரும் அதிப ராயிருப்பர். நியதி தத்துவத்திலுள்ள புவனங்களில் சூரர் பஞ்சாந்தகர் என்னுமிருவரும் அதிபராயிருப் பர். காலதத்துவத்திலுள்ள புவனங்களில் ஏகவீரர் சிகேதர் என்னுமிருவருமதிபராயிருப்பர். ஆகப்புவ னங்கள் 19.

சலதத்துவமுதல் இருபத்தொன்பது தத்துவங்கள் பத்மத்தின் இந்திரநீலம் போன்ற நாளவடிவாகும். இத்தத்துவங்களிலுள்ள எழுபத்தைந்து புவனங்கள் நாளத்தினுடைய முட்களாகும். புத்திதத்துவத்தினு டைய காரியங்களும் குணதத்துவத்தினுடைய விருத் திகளும் நாளத்தினுள்ளாகப் பொருந்திய நூலாகும் அசுத்தமாயாதத்துவம் புறவிதழாகும். மாயையிலுள்ள

எட்டுப்புவனங்களுக்கும் மகாத்யுதி, வாமதேவர், பவர் உத்பவர், ஏகபிங்கவர், ஏகேக்ஷணர், ஈசானர், அங்குஷ்டமாத்திரர் என்பவர் அதிபராயிருப்பர்.

இதுவரையும் பதுமத்தின் கீழ்ப்பாகஞ் சொல்லப்பட்டது. இதற்கு மேலுள்ள சுத்தவித்தியாதத்துவ முதல் சிவதத்துவம் வரையிலுள்ள ஐந்து தத்துவங்களும் பதுமத்தின் மேற்பாகமாகும்.

## 4. பதுமாசனம்

### சுத்தவித்தியாதத்துவம்

கிரியாசத்திகுறைந்து ஞானசத்தி அதிகமாக அதிஷ்டித்தபோது சுத்தவித்தியாதத்துவம் தோன்றும் சுத்தவித்தியாதத்துவத்தில் அஷ்டவிததியேசுரரூபங்களாகிய அஷ்டதனங்களிருக்கும்.

### அஷ்டவித்தியேசுவரர்

மலபரிபாகத்தின் மிகுதியாலே சிவபெருமானுடைய அனுக்கிரகத்தை அடைந்தவர்களும், ஈசுவரதத்துவ புவனுதிபர்களும், சத்தகோடிமகா மந்திரேசரைப் பிரேரிப்பவர்களுமாகிய அநந்தர் சூட்சுமர் சிவோத்தமர், ஏகநேத்திரர், ஏகருத்திரர், திரிமூர்த்தி, ஸ்ரீகண்டர், சிகண்டி என்னும் அஷ்டவித்தியேசுவரர்கள் எட்டிதழ் வடிவங்களாக இருப்பார்கள்.

இவர்களுள் அநந்ததேவர் மற்றைய வித்தியேசுரர்களுக்கும் சுத்தவித்தியாதத்துவவாசிகளுக்கும் ஏனையோருக்குந் தலைவராய் மாயையைக் கலக்கி, மாயாதத்துவ புவனங்களை உண்டாக்குவர். இவர் பரமசிவனுக்கு வேருய் அதிகாரமலமொன்றுடையராய் இருப்பர். பாகம் வந்தகாலத்தில் சிவனருளால் முத்தியையடைவர்.



மலபரிபாகத்தின் மந்தத்தாலே சிவனுடைய அனுக்கிரகத்தைப் பெற்றும் அபக்குவமலராயுள்ளவர்களும் அஷ்டவித்தியேசுரர்களாற் பிரேரிக்கப்படுவர்களுமாகிய சத்தகோடி மகாமந்திரேசுரர் இருவகைப்படுவர். அவர்களுள் மூன்றரைக்கோடிபேர் பதவியை வெறுத்துக் குருமூர்த்திகளாயிருந்து சிவானுக்கிரகத்தினுற் சகலரை இராஷிக்குங் காரணர்களாயிருப்பர். மகாபிரளகாலத்தில் சிவன்தாமாக வந்து அனுக்கிரகஞ்செய்து இவர்களுக்கு மோஷத்தைக் கொடுப்பர். மற்றைய மூன்றரைக்கோடி பேர்களை மயாதத்துவத்துக்குமேற் சுத்தவித்தியாதத்துவத்துக்குக்கீழ் அதிகாரமுள்ளவர்களாகச் செய்து, சங்காரகாலத்திற் குருமூர்த்தியை அதிட்டித்து அனுக்கிரகஞ் செய்வர்.

### சூரியமண்டலம்

தளாக்கிரங்களில் கோடிசூரியப்பிரகாசமுள்ள சிவசூரியமண்டலத்தைப் பூசித்து, அதில் பொன்னிறமான சரீரத்தையும், நான்கு கரங்களில் சுருக்கு, தண்டம் உருத்திராக்ஷவடம் தருப்பையாகிய இவைகளையுமுடையவராய்ப் பிரமாவைத் தியானிக்க.

### கணநாதர்

சுத்தவித்தியா தத்துவத்தில் நந்தி, மகாகாளர் பிருங்கி, விநாயகர், இடபதேவர், கந்தர், தேவி, சண்டர் என்னுங் கணநாதர் எண்மருஞ் சிவபெருமானைச் சித்தாந்தசாத்திரத்தினுலே பூசித்துக்கொண்டிருப்பர்.

### சத்தகோடிமகாமந்திரம்

பிருகுணி, பிரமவேதாளி, தாணுமதி, அம்பிகை, உரூபினி, நந்திநி, சுவாலா என்னும் ஏழுவித்தியே

சுவரிகளும் மண்டலே சுரர்களாவே துதிக்கப்பட்டிருப்பர். இவர்கள் சந்தகோடிமகா மந்திரங்களுக்கு ஈசுவரிகள் என்று மிருகேந்திரம் கூறும்.

ஏழுகோடிமந்திரங்கள் நம, ஸ்வாஹா, ஸ்வதா, வௌஷட், வஷட், பட், ஹூம் என்பன. நம என்பது இருஷிகளுக்கும், ஸ்வாகா என்பது தேவர்களுக்கும் ஸ்வதா என்பது பிதிரர்களுக்கும் வௌஷட் என்பது பூதமுதலியவற்றிற்கும், வௌஷட் என்பது மனுடருக்கும், பட் என்பது உக்கிர விக்கிரகங்களுக்கும், ஹூம் என்பது ஆஞ்ஞைத்தலைவருக்குமாம்.

நம என்பதை அந்தமாகவுடைய மந்திரம் புருஷரூபமாம்; ஸ்வதா ஸ்வாகா என்பவற்றை, அந்தமாகவுடைய மந்திரம் ஸ்திரீரூபமாம்: பட், வஷட் வௌஷட், ஹூம் என்பவற்றை இறுதியாகவுடைய மந்திரம் நபுஞ்சகரூபமாகும்.

இருதயாயநம, சிரசே சுவாகா, சிகாயைஷட், கவசாயஹூம், நேத்திரேப்யோ வௌஷட், அஸ்திராயபட் உபாங்கேப்ய சுவதா என ஒவ்வொரு கோடியாய் ஏழுகோடியும் வந்தவாறு காண்க. கோடி என்பது அந்தம்.

## 5. விமலாசனம்

### ஈசுவரதத்துவம்

ஞானசத்திகுறைந்து கிரியாசத்தி அதிட்டித்தபோது ஈசுவரதத்துவம் தோன்றும். இதற்கு மகேசுரர் அதிபர்.

### சதாசிவதத்துவம்

ஞானசத்தியும் கிரியாசக்தியும் சமமாக அதிஷ்டித்தபோது சதாசிவதத்துவம் தோன்றும். இதில் சகள



மாயிருக்கிற அபரநாதமும் அபரவிந்துவும் மலபரிபாகத்தின் மிகுதியையுடையவர்களாகிய பிரணவர், திரிகலர், ஹரர், சுதர், பத்மர், காரணர், சருவருத்திரர், பிரசாபதி, சுசிவர், சிவர் என்னும் நாமங்களையுடைய அணுசதாசிவருமிருப்பர். இதிற் சாதாக்கிய புவனமிருக்கும்.

ஈசுவரம் சாதாக்கியம் என்னுமிவ்விரு தத்துவங்களும் பீடமேற்பாகத்தின் நடுவில் அறுபத்துநான்கு கேசரவடிவாகவிருக்கும்.

### வாமாதி

கிழக்கு முதலிய எட்டுத்திக்குக்களிலுமுள்ள அறுபத்துநான்கு கேசரங்களில் அஷ்டவித்தியேசுரர்களை அதிஷ்டிப்பவரும், சிவனுக்குச் சத்திகளாயுள்ளவர்களும், சுத்தவித்தியாபுவனவாசிகளுமாகிய வாமை, சியேட்டை, இரௌத்திரி, காளி, கலவிகரணி, பலவிகரணி, பலப்பிரமதனி, சர்வபூததமனி என்னும் எட்டுச் சத்திகள் இருப்பார்.

உதயகாலச் சூரியன் போன்ற ஒளியுள்ளவரும், மூன்று கண்களும் நான்கு தோள்களும், பாலசந்திரன் விளங்குகின்ற சடாமகுடமும், சாமரை அபயம் வரதம் சிவனை அணைத்த திருக்கரமலர் என்னுமிவைகளையுடைவர்களுமாக இச்சத்திகளைத் தியானிக்க வேண்டும். கர்ணிகையில் மனோன்மணி சத்தியைப் பசுவின்பால் போன்ற வெண்ணிறமுடையவராய்த் தியானிக்க.

பிருதுவிதத்துவரூபியும், சிருட்டித்தொழிலை விருத்திசெய்கிறவருமாகிய வாமை பிருதுவிதத்துவரூபராகிய சர்வருக்குச் சத்தியாயிருப்பர். இவர் அராகதத்துவம் வரையும் வியாபகமுள்ளவர். வாமை - அழகுள்ளவர்.

சர்வர் - எல்லாமுடையவர். காத்தற்ருெழிலுக்கு ஆதாரமாயிருக்கும் சியேட்டை சலரூபராகிய பவருக்குச் சத்தியாயிருப்பர். இவர் காலதத்துவாந்தம் வியாபகமுள்ளவர். பவர் - எல்லாவற்றையுந் தோற்றுவிப்பவர். சங்கார கிருத்தியத்துக்கு ஆதாரமாயிருக்கும் ரௌத்திரி அக்கினிரூபராகிய பசுபதிக்குச் சத்தியாயிருப்பர். இவர் சுத்தவித்தியாதத்துவாந்தம் வியாபகமுள்ளவர். பசுபதி - ஆன்மாக்களுக்குத் தலைவர். வாயுரூபராகிய ஈசானருக்குக் காளி சத்தியாயிருப்பர். இவர் ஈசுவரதத்துவாந்தம் வியாபகமுள்ளவர். ஈசானர் - ஐசுவரியமுடையவர். ஆகாசதத்துவராகிய பீமருகுக் கலவிகரணி சத்தியாயிருப்பர். ஆகாசம் உருவமற்றது ஆகையால் கலவிகரணி. கலா - அவயவம். விகரணி - இல்லாதவர். பீமர் - மூவுலகங்களும் பயப்படத்தக்கவர். பலவிகரணி சந்திரமூர்த்தியாகிய மகாதேவருக்குச் சத்தியாயிருப்பர். சந்திரன் பயிரை வளர்ப்பதுபோல, பலவிகரணி ஆன்மாக்களாகிய பயிரை வளர்ப்பவர். பலவிகரணி - பலத்தை விசேடமாகக் கொடுப்பவர். சூரியமூர்த்தியாகிய ருத்திரருக்குச் சத்தியாய்ப் பலப்பிரமதனியிருப்பர். பலப்பிரமதனி - பலத்தை அழிப்பவர். சூரியன் உஷ்ணகிரணங்களினுற் பலத்தையழிப்பதுபோல, இவர் ஆன்மாக்களது பாசத்தை நீக்குவர். ஆன்மமூர்த்தியாகிய உக்கிரருக்குச் சத்தியாய்ச் சர்வபூததமனியிருப்பர். சர்வபூததமனி - ஆன்மாக்களது புண்ணியபாவங்களை அடக்குவர். ஆகாசமூர்த்தி சந்திரமூர்த்தி சூரியமூர்த்தி இயமானமூர்த்தி, ஆகிய இந்நான்கு மூர்த்திகளும் சிவதத்துவாந்தம் வியாபித்திருப்பர்.

## அஷ்டமூர்த்தம்

பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாசம், சூரியன் சந்திரன், ஆன்மா ஆகிய இவைகளை அதிஷ்டிக்குஞ் சத்திகள் சிவபிரானது வடிவங்களாதலின் இவைகள்



அஷ்டமூர்த்த மெனப்பட்டன. பிருதிவிரூபமாகிய விக்கிரக வணக்கமும், கங்கை முதலிய தீர்த்த வணக்கமும், யாகம் முதலியவற்றிற் செய்யும் அக்கினிவணக்கமும், சிவபூசை முதலியவற்றில் செய்யும் சூரியசந்திர வணக்கமும், குருவையும் பிராமணர்களையும் சிவனடியார்களையும் சிவனுகப்பாவித்து வணங்கும் வணக்கமும், பஞ்சபூததலங்களிற் செய்யப்படும் பஞ்சபூதலிங்க வணக்கமும் சிவபெருமானது அஷ்டமூர்த்த வணக்கமேயாம்.

சிவபெருமான் அட்டமூர்த்தியாய் நிற்பது உலகத்துண்மைப்பொருளாய் நிற்பவர்தாமென்பதைச் சிற்றறிவுடையவர்களாகிய ஆன்மாக்கள் அறிந்துய்யும்படி காட்டிய பெருங்கருணையேயாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

"இருநிலனய்த் தீயாகி நீருமாகி இயமானனு யெறியுங் காற்றுமாகி
அருநிலையதிங்களாய் ஞாயிருகியாகா சமாயட்ட மூர்த்தியாகிப்
பெருநலமுங் குற்றமும் பெண்ணுமாணும் பிறருருவுந்தம் முருவுந்தா
[மேயாகி
நெருநலையாயின்ருகி நாளையாகி நிமிர்புன்சடை யடிகணின்றவாறே

எனவும்

### திருவாசகம்

"நிலநீர் நெருப்புயிர் நீள்விகம்பு நிலாப்பகலோன்
புலனய மைந்தனே டெண்வகையாய்ப் புணர்நீது நின்ருன்
உலகேழெனத் திசைபத்தெனத் தானெருவனுமே
பலவாகி நின்றவாதோ ணேக்கமாடாமோ"

எனவும்

### காரைக்காலம்மையார்

"அவனே யிருசுடர் தீயாகாசமாவா
னவனே புவிபுனல் காற்ருவா — னவனே
யியமான னுயட்ட மூர்த்தியுமாய் ஞான
மயனுகி நின்ருனும் வந்து

எனவும்,

### பட்டணத்தடிகள்

"எண்வகை மூர்த்தியென்பதிவ் வுலகினி
லுண்மையானென வுணர்த்திய வாறே.

எனவும் கண்டு கொள்க,

### சந்திர மண்டலம்

கேசரங்களின் நுனிவட்டத்தில் கோடிசந்திரப் பிரபையுள்ளதும், குளிர்ச்சி பொருந்தியதுமான சந்திர மண்டலமிருக்கும். இச்சந்திர மண்டலத்தில் துளசி மாலையைத் தரித்தவரும், சங்கம், சக்கரம், கதை, தாமரை மலரென்னும் இவைகளையேந்திய நான்கு கரங்களையுடையவரும், கருமேகம் மேலும் ஒளியுடையவருமாகிய விட்டுணு மூர்த்தி வீற்றிருப்பர்.

### சத்தி தத்துவம்

சத்தி தத்துவம் கேசரங்களுக்குள்ளாகப் பொருந்திய பொருட்டு வடிவாம். எல்லா ஆன்மாக்களுக்குமுண்டாகிய தொழிலை எழுப்புகிறதாகிய கிரியாசத்தி அதிட்டித்தலாற் சத்தி தத்துவந் தோன்றும். அச்சத்தி விந்துவாகிய நிஷ்களையா யிருக்கும். இந்தத் தத்துவத்தில் நிவிர்த்தி முதலிய புவனங்களிருக்கும்.

மண், பெண், பொன் முதலிய பிரபஞ்சப் பற்றுக்களினின்றும் ஆன்மாக்களை நிவிர்த்தி செய்தலால் நிவிர்த்திகலை எனப்படும். அங்ஙனம் நிவிர்த்தி செய்யப் பெற்ற ஆன்மாக்களை வாசனை பற்றி மீளப்பிரபஞ்சத்தை நோக்காவண்ணம் பிரதிட்டை செய்தலால் பிரதிஷ்டாகலை எனப்படும். அங்ஙனம் பிரதிட்டை செய்யப் பெற்ற ஆன்மாக்களுக்கு அனுமானஞானம் ஆகமஞான மின்றிச் சிவானுபூதி ஞானத்தைப் பயப்பித்தலால், வித்தியாகலை எனப்படும். அங்ஙனம் அனுபூதி ஞானம் பெற்ற ஆன்மாக்களுக்கு விருப்பு, வெறுப்பு, சங்கற்பம் முதலிய எல்லாத் துன்பங்களையும் சாந்தமாகச் செய்தலால் சாந்திகலை எனப்படும். அங்ஙனம் சாந்தமாய் நின்றதும் ஒழியச் செய்தலால் சாந்தியதீத கலை எனப்படும். இவை சத்திவடிவாகிய ஐவகைக் கலைகள். பிரதிஷ்டை - நிறுத்தல்.



### அக்கினிமண்டலம்

கர்ணிகையின் நுனி வட்டத்தில், அநந்த அக்கினிக்கு ஒப்பான ஒளியையுடைய சிவாக்கினிமண்டலமிருக்கும். இவ்வக்கினி மண்டலத்தில் காளகண்டரும், முக்கண்ணரும், ஞானமுத்திரை, அக்கினி, ஞானசாத்திரபுத்தகம், சூலம் என்னுமிவைகள் பொருந்திய கரங்களை யுடையவருமாகிய உருத்திரமூர்த்தி வீற்றிருப்பர். உருத்திரரை இவ்வாறு தியானித்துப் பூசிக்க.

### சிவதத்துவம்

எல்லா ஆன்மாக்களுக்கும் அறிவை எழுப்பி நிற்பதாகிய ஞானசத்தி அதிஷ்டித்தலாற் சிவதத்துவம் தோன்றும். இது இலயத் தானமாம்.

இச்சிவதத்துவம் ஐம்பது பீஜவடிவா யிருக்கும். இதிற் பத்துப் புவனங்கள் உள்ளன. இந்திகை, தீபிகை, மோசிகை, ரோசிகை, ஊர்த்துவ காமினி என்னும் இவ்வைந்தும் அபரநாத கலா புவனங்கள். வியாபினி, வியோமரூபிணி, அநந்தை, அநாதை, அநாசிருதை இவ்வைந்தும் பரநாத பேதமான புவனங்கள்.

வியாபினி என்னும் சத்தி வியாபகருக்குக் காரண மூமாய் ஆன்ம அனுக்கிரகமான ஆதி சத்தியுமாம். வியோம ரூபை என்னுஞ் சத்தி வியோம ரூபருக்குக் காரணமுமாய் இச்சாசத்தி என்னும் பெயரையும் பொருந்தும். அநந்தை என்னும் சத்தி அநந்தருக்குக் காரணமுமாய், ஞானசத்தி என்னும் பெயரையும் பொருந்தும். அநாதை என்னுஞ் சத்தி அநாதருக்குக் காரணமுமாய், கிரியா சத்தி என்னும் பெயரையும் பொருந்தும்.

சமனே என்னும் பரையும், உன்மனே என்னும் பரமும் தம்மிற் கூடி ஆன்மாக்களைத் திருவுள்ளத் தடைத்த சமயத்தில் அநாசிருதர் தோற்றினர். இவர் பரையை அதிஷ்டித்தலால் பரன் என்னும் பெயரைப் பெற்று, தாமொருவரை ஆசரியாதபடியால் அநாசிருதராய் பரையும் அநாசிருதையானது. இவருடைய மூர்த்திபேதமான அநந்தேசுவரர் ஆதாரசத்தியுடன் கூடி அசுத்த மாயையைப் பிரேரித்துக் கொண்டிருப்பர்.

## ஐம்பது வர்ணங்கள்

வர்ணங்கள் ஐம்பதும் ஐம்பது பீஜவடிவாயிருக்கும். கலாக்ஷரமாகிய குறிலும், விகலாட்சரமாகிய நெடிலும் சம்பந்தப்படுதலினல், எல்லா வுலகங்களிலும் வியவகாரமுண்டாகின்றது. குறில் ஏழும் தத்துவபீசம். நெடிலொன்பதும் மூர்த்தி பீசம். இவ்விரண்டும் கூடியது பிரபாவம், எனப்படும்.

அகர முதலிய மூன்றும் ஆகாசதத்து வாக்ஷரம் எனவும், ஈகாரம் முதலிய மூன்றும் வாயுதத்து வாக்ஷரமெனவும், இறுகாரம் முதலிய நான்கும் அக்கினிதத்து வாட்சர மெனவும், ஏகாரம் முதலிய மூன்றும் சலதத்து வாட்சர மெனவும், ஔகாரம் முதலிய மூன்றும் பிருதிவிதத்து வாட்சர மெனவும் சொல்லப்படும்.



தாமரைக்காயின் நடுவிலுள்ள ஹகார க்ஷகார வடிவங்களாகிய இரண்டு வித்துக்களும் சிவதத்துவ வடிவாக விருந்து ஆன்மாக்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கும்.

முதலா மாவரணத்திலுள்ள சாத்துவிக அட்சரங்களாகிய மகாரம் சம்ஹார கிருத்தியத்தையும், யகாரம் தோலேயும், ரகாரம் இரத்தத்தையும், லகாரம் மாமிசத்தையும், வகாரம் மேதையையும், சகாரம் எலும்பையும், ஷகாரம் மச்சையையும் ஸகாரம் சுக்கிலத்தையும் குறிக்கும். இரண்டா மாவரணத்திற் பொருந்திய இராசத அக்கரங்களாகிய அகாரம் முதலிய பதினறு உயிர்களும் பிராணனேக் குறிக்கும். மூன்ரு மாவரணத்திற் பொருந்திய தாமத அக்கரங்களாகிய ககார முதலிய இருபத்து நான்கு மெய்களும் உடம்பைக் குறிக்கும்.

## வன்னஙகளுக்கு அதிதேவதை முதலியன.

அகர முதலிய வன்னங்களுக்கு அதிதேவதைகளும், நிறங்களும் உருவங்களும் வருமாறு:-

சர்வதேவமயமானதும், சிவப்பு நிறமுள்ளதும், ஆண்ரூபமானதுமாகிய அகாரம் வசீகரத்தைக் கொடுக்கும். பராசத்தி வடிவானதும், வெண்மை நிறமுள்ளதும். பெண்ரூபமானதுமாகிய ஆகாரம் ஆகர்ஷணத்தைக் கொடுக்கும். விட்டுணுவையதிபராகவுடையதும், பச்சைநிறமுள்ளதும் ஆண்ரூபமானதுமாகிய இகாரம் காத்தற் ரெழிலேச் செய்யும். மாயாசத்தியை யதிபதியாகவுடையதும், பொன்மை நிறமுள்ளதும், பெண்ரூபமானதுமாகிய ஈகாரம் வசீகரத்தைக் கொடுக்கும். வாஸ்து நாதரை அதிபராகவுடையதும், கருமை நிறமுள்ளதும், ஆண்ரூபமானதுமாகிய உகாரம் மந்திரவாதிகளேயும் அரசர்களேயும் வசமாக்கும். பூமிதேவியை யதிபராகவுடையதும், பச்சைநிறமுள்ளதும்,

பெண்ரூபமானதுமாகிய ஊகாரம் சனவசீகரத்தைச் செய்யும். பிரமாவை அதிபராகவுடையதும், பொன்மை நிறமானதும், நபும்சகரூபமானது மாகிய இறுகாரம் கிரகபீடையை நிவாரணஞ் செய்யும். வியாழனை அதிப தியாகவுடையதும், கறுப்பு நிறமானதும், அலிரூபமான துமாகிய இறூகாரம் சுரநிவாரணம் செய்யும். அசுவினீ தேவர்களை அதிபர்களாகவுடையவைகளும், வெண்மை நிறத்தையும் சிவப்பு நிறத்தையும் பொருந்தியவை களும், அலிரூபமானவைகளுமாகிய இலு காரமும் இலூகாரமும் சுரநிவாரணத்தைச் செய்யும். வீரபத்தி ரரை அதிபராக உடையதும், பொன்மைநிறமுள்ளதும், ஆண்ரூபமானதுமாகிய ஏகாரம் எல்லாச் சித்திகளையும் கொடுக்கும், சரஸ்வதியை அதிபராகவுடையதும், வெண்மை நிறமானதும், பெண்ரூபமானதுமாகிய ஐகாரம் ஞானத்தைக் கொடுக்கும். ஈசுவரனை அதிபரா கவுடையதும், சோதிநிறமானதும், ஆண்ரூபமானது மாகிய ஒகாரம் எல்லாப்பலன்களையும் கொடுக்கும். ஆதிசத்தியை அதிபராகவுடையதும், வெண்மை நிறமா னதும், பெண்பாலானதுமாகிய ஔகாரம் சகல சித்தி களையுங் கொடுக்கும். மகேசுவரனை அதிபராக வுடை யதும், சிவப்புநிறத்தையும், ஆண்ரூபத்தையும், பொருந்தியதுமாகிய அம் காரம் சுகத்தைக் கொடுக் கும். காலாக்கினி யுருத்திரரை யதிபராகவுடையதும், சிவப்பு நிறத்தையும், பெண்ரூபத்தையும் பொருந்தியது மாகிய அஃகாரம் பாசத்தை நீக்கும்.

பிரமாவை யதிபராக வுடையதும், பொன்னிறத்தை யும், ஆண்ரூபத்தையும் உடையதுமாகிய ககாரம் சிருட்டித் தொழிலைச் செய்யும், கங்கையைத் தலைவரா கவுடையதும், வெண்மை நிறமானதும், பெண்ரூபமா னதுமாகிய இரண்டாம் ககரம் பாவத்தை நீக்கும். விநாயகரை யதிபராக வுடையதும்‘ சிவப்பு நிறத்தை யும், ஆண்ரூபத்தையு முடையதுமாகிய மூன்றுங்ககரம்



விக்கினங்களை நீக்கும். பைரவரூபமானதும், வெண்மை நிறமுள்ளதும், பெண்ரூபமானதுமாகிய நாலாங்ககரம் சத்துரு நாசத்தைச் செய்யும். காலரைத் தலைவராகவு டையதும், கறுப்பு நிறமானதும், அலிப்பா லானது மாகிய ஙகரம் எல்லா வெற்றியையுங் கொடுக்கும்.

சண்டருத்திரரை அதிபராகவுடையதும், கறுப்பு நிற மானதும், ஆண்ரூபத்தையுடையதுமாகிய சகரம் இராக் கதர்களை நிவாரணஞ் செய்யும். பத்திரகாளியைத் தலை வியாகவுடையதும், பொன்மை கலந்த கறுப்பு நிறமுள் ளதும், பெண்ரூபமானதுமாகிய இரண்டாஞ்சகரம் வெற்றியைக் கொடுக்கும். இந்திரனை யதிபனாகவுடைய தும், சிவப்பு நிறத்தையும், ஆண்ரூபத்தையுமுடையது மாகிய மூன்றுஞ் சகரம் வெற்றியைக் கொடுக்கும். அர்த்த நாரீசுவரமயமானதும், பச்சை நிறமுஞ் சிவப்பு நிறமுள்ளதும் பெண் பாலானதுமாகிய நாலாஞ் சகரம் வெற்றியைக் கொடுக்கும். கோடிருத்திரரை அதிபராகவுள்ளதும், பொன்மை நிறமுள்ளதும், அலிப் பாலானதுமாகிய ஞகரம் போகத்தை நீக்கும்.

பிருங்கியை அதிபராகவுள்ளதும், சிவப்பு நிறத்தை யும், ஆண்ரூபத்தையுமுடையதுமாகிய டகரம் சகல சுகத்தையும் கொடுக்கும். சந்திரனை அதிபனாகவுள்ள தும், வெண்மை நிறமுள்ளதும் பெண்ரூபமானதுமாகிய இரண்டாம் டகரம் அபமிருத்துவை நீக்கும். ஏகருத் திரரை அதிபராகவுள்ளதும், பொன்மை நிறமுள்ளதும், ஆண்ரூபமானதுமாகிய மூன்றும் டகரம் கால தோஷத்தை நீக்கும். யமனை அதிபனாகவுள்ளதும், நீலநிறத்தையும் பெண்ரூபத்தையு முடையதுமாகிய நாலாம் டகரம் அபமிருத்துவை நாசஞ் செய்யும். நந்தியை அதிபராகவுள்ளதும், சிவப்பு நிறத்தையும், அலிரூபத்தையு முடையதுமாகிய ணகரம் அர்த்தசித்தி யைக் கொடுக்கும்.

வாஸ்துதேவரை அதிபராகவுள்ளதும், வெண்மை நிறமுள்ளதும், ஆண்ரூபமானதுமாகிய தகாரம் எல்லா வெற்றியையுங் கொடுக்கும். தருமதேவதையை அதிபராகவுள்ளதும், குந்தவர்ணமாயுள்ளதும், ஸ்திரிரூபமுள்ளதுமாகிய இரண்டாந்தகரம் ஜயத்தைக் கொடுக்கும். துர்க்கையை அதிபராகவுள்ளதும், பச்சைநிறத்தையும், பும்ரூபத்தையு முடையதுமாகிய மூன்றுந்தகரம் சர்வார்த்த சித்தியைக் கொடுக்கும். குபேரனை அதிபனாகவுடையதும், பொன்மை நிறத்தையும் ஸ்திரிரூபததையு முடையதுமாகிய நான்காந்தகரம் அர்த்த சித்தியைக்கொடுக்கும். சாவித்திரியை அதிபராகவுடையதும், வெண்மை நிறத்தையும், நபுஞ்சகரூபத்தையும், பொருந்தியதுமாகிய நகாரம் பாவநாசத்தைச் செய்யும்.

ஆகாயத்தை முதன்மை யாகவுடையதும், வெண்மை நிறத்தையும், ஆண்ரூபத்தையும் பொருந்தியதுமாகிய பகரம் விருஷ்டியைக் கொடுக்கும். பசுபதியை யதிபராகவுடையதும், வெண்மை நிறத்தையும் பெண்ரூபத்தையும் பொருந்தியதுமாகிய இரண்டாம் பகரம் பாவநிவாரணத்தைச் செய்யும். திரிமூர்த்தியை அதிபராகவுடையதும், பொன்மை நிறத்தையும் ஆண்ரூபத்தையும் பொருந்தியதுமான மூன்றும் பகரம் சர்வசித்தியைக் கொடுக்கும். சுக்கிரனையதிபனாகவுடையதும், சிவப்புநிறத்தையும், பெண்ரூபத்தையுமுடையதுமாகிய நாலாம் பகரம் சருவசித்தியைக் கொடுக்கும். மன்மதனையதிபனாகவுடையதும், பச்சைநிறத்தையும் அலிரூபத்தையும் பொருந்தியதுமாகிய மகரம் சகல வெற்றிகளையுங் கொடுக்கும்.

வாயுவையதிபனாகவுடையதும், கறுப்புநிறத்தையுடையதும் அலிரூபத்தைப் பொருந்தியதுமாகிய யகாரம் உச்சாடனத்தைச் செய்யும். அக்கினியை யதிபனாகவுடையதும், சிவப்பு நிறத்தையும், அலிரூபத்தையும் பொருந்தியதுமாகிய ரகரம் மாரணத்தைச் செய்யும்.



பிருதிவிதத்துவபீஜமாயுள்ளதும், பொன்மை நிறமும் அலிரூபமுமுடையது மாகிய லகரம் தம்பனசித்தியைச் செய்யும். வருணனையதிபனாகவுள்ளதும், வெண்மை நிறத்தையும், அலிரூபத்தையுமுடையதுமாகிய வகாரம் ரோகநிவாரணஞ்செய்யும். இலக்குமிபீஜமும், பொன்மை நிறமும், பெண் ரூபமுமுள்ளதாகிய சகரம் ஸ்ரீகரத்தைக் கொடுக்கும். பன்னிருசூரியரை அதிபராகவுடையதும், செந்நிறத்தையும், ஆண்ரூபத்தையும் பொருந்தியதுமாகிய ஷகாரம் எல்லாச்சித்திகளையுங் கொடுக்கும். சத்திபீஜமாயுள்ளதும் சிவப்பு நிறமும் பெண்ரூபமுடையதுமாகிய ஸகாரம் காத்தலைச் செய்யும்.

சிவபீஜமும், களங்கமற்ற பளிங்கு நிறமும் நபுஞ்சகரூபமுமாகிய ஹகாரம் அணிமாதி அஷ்ட சித்திகளையும் போகமோக்ஷங்களையுங் கொடுக்கும். வித்தியாதத்துவமயமானதும், வெண்ணிறமும் ஆண்ரூபமும் பொருந்தியதுமாகிய க்ஷகாரம் சுகத்தைக் கொடுக்கும்.

## சக்திமண்டலம்

கர்ணிகையின் நடுவில் பிரணவரூபமானதும் பாற்கடல்போன்ற வெண்மையானதுமாகிய சத்திமண்டலத்தைப் பூஜித்து, அம்மண்டலத்தில் சர்ப்போபவீதமுடையவரும், அர்த்தசந்திரனைத் தரித்தவரும், முக்கண்ணரும், பளிங்குபோல் நிர்மலமானவரும், வாள் திரிசூலம் அம்பு அக்ஷமாலை அபயம் கமண்டலம் வரதம் தாமரைப் புஷ்பம் என்பவற்றைத் தரித்தவரும், சிங்கத்தோல் யானைத்தோல்களைத் தரித்தவருமாக ஈசுவரரைத் தியானித்துப் பூசிக்க.

## கந்தபுராணம்

ஈசன் மேவரு பீடமாயே னையோர் தோற்றும்
வாசமா யெலா வெழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறு
மாசிறுரகப் பிரமமா மதன்பயனு ய்ந்தான்.

### வாயுசங்கிதை

ஆலம் விதன்னைக்கோடி பொருளெலா மடங்கவைகு
மூலமாயுறைந்து மன்னிமுக் குணங்கடந்து வெய்ய
காலனுருயிரையுண்ட கனைகழற் கடவுண் மூர்த்தி
மேலதாங்குடிலை தன்னின் மேவிவீற்றி ருக்குமன்றே.

இப்படி பரமசிவனுக்கு ஆசனமாகிய பதுமத்தை ஆதாரசத்திக்கு மேல் பிருதுவி தத்துவமுதற் குடிலை பரியந்தம் வியாபித்துள்ளதாகச் சிந்திக்கவேண்டும்.

ஹோமம் தியானம் முதலியவைகளிலும் இவ்வாறுணர்ந்து செய்தல் வேண்டும். இம்முறையறிந்து தியானித்துக் கற்பிக்கும் ஆசனமே சிவாசன கற்பனமாகும்.

இங்ஙனம் யோகபீடத்தைப் பாவித்து அதில் மூர்த்தியை நிவேசிக்க. சிரமுதற் பாதாந்தமாக ஈசானாதிகளை நியசித்து, அஷ்டதிரும் சத்கலா நியாசம் ஸ்ரீ கண்டநியாசம் செய்து வித்தியா தேகத்தைக் கற்பிக்க.

### சிவமூர்த்தி

சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் நிமித்தமாகக் கொண்டருளிய சுத்ததத்துவங்கள் மூன்றாகும். அவை சிவம், சாதாக்கியம், மகேசுவரம் என்பன.

அம்மூன்றனுள் அருவ (நிஷ்கள)த் திருமேனியுடைய சிவம் ஒன்று. அருவுருவ (சகள நிஷ்கள)த் திருமேனியுடையதாகிய சாதாக்கியமானது சிவசாதாக்கியம் அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திரு

* இது முதலியவற்றுக்குப் பிரமாணம் வாதுளசுத் தாக்கியம் ஆதியவற்றுட் காண்க.



சாதாக்கியம், கன்மசாதாக்கியமென ஐந்து பேதங்களையுடையது. உருவ (சகள)த்திருமேனியுடைய மகேசுவரமானது சந்திரசேகரர், உமாமகேசர், இடபாரூடர், நடேசர், கல்யாணசுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, ஜலந்தராரி, கஜாரி, வீரபத்திரர், ஹரியர்த்தர், அர்த்தநாரீசுவரர், கிராதர், கங்காளர், சண்டேசானுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதானர், விக்கினேசுவரானுக்கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசனர், தக்ஷிணாமூர்த்தி, இலிங்கோற்பவர் என இருபத்தைந்து பேதங்களையுடையது. ஆகமூர்த்தங்கள் முப்பத்தொன்றாகும். இந்த பஞ்சவிம்சதி (இருபத்தைந்து) விக்கிரகபேதங்களைச் சிறிது வேறுபடுத்திக் கூறுவதுமுண்டு. அது ஆகமபேதமெனக் கொள்க.

### சதாசிவரூபம்

உயர்மறை புகழ்சிவ னேங்கு சதாசிவ
னியலு மகேச னெனமூன் றுமவை
யருவே யருவுரு வுருவா யடைவே
யரிதுணை ரொன்றைந் தையைந் தாகி
யொருதொகை முப்பத் தொன்றா கும்மே.

### கந்தபுராணம்

ஒன்றாயிருதிறமா யோரைந்தா யையைந்தா
யன்றாதியின் மீட்டுமைந்தா யளப்பிலவாய்
நின்றாய் சிவனே யிந்நீர்மையெல்லாந் தீங்ககற்றி
நன்றாவிகட்கு நலம்புரிதற் கேயன்றே.

### நிஷ்களசிவம்

எல்லாவற்றிற்கும் மேலானதாய், ஒருகுணங்களும் ஓரடையாளமுமில்லாததாய், மலமற்றதாய், ஏகமாய், அழியாததாய், எண்ணிறந்த ஆன்மாக்களுக்குணர்வாய், அசலமாய், இன்பசொரூபமாய், அறியாதார் சென்று கூடுதற்கரிதாய், வழிபட்டவர் சென்று

பொருந்துதற்கிடமாகிய முத்திப்பொருளாய், சர்வவியாபியாய், அநுக்கிரக கிருத்தியத்தைச் செய்கின்ற சதாசிவனுக்கு மேலாய், பராசத்திக்குக் காரணமாயிருக்கும் உண்மைப் பொருளைச் சித்தாந்தத் தெளிவு வந்த பெரியோர்கள் நிஷ்கள சிவமென்று சொல்லுவார்கள்.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

மைப்படிந்த கண்ணாளுந் தானுங்கச்சி
மயானத்தான் வார்சடையா னென்னினல்லான்
ஒப்புடையனல்ல னொருவனல்ல
னோரூரனல்ல னோருவமனில்லி
அப்படியு மந்நிறமு மவ்வண்ணமு
மவனருளே கண்ணாகக்காணினல்லால்
இப்படியனிந் நிறத்த னிவ்வண்ணத்த
னிவனிறைவனென் றெழுதிக்காட்டொணாதே.

### திருவாதவூரடிகள் புராணம்

பந்தமாகிய மலவிருளகற்றும்
பரிதியாயுள பல்லுயிர்க்குயிரா
யந்த மாதிகளளப்பருமொளியா
யமலமாகு மவ்வருவெனு முருவம்.

### நிஷ்களசத்தி

அந்த நிஷ்கள சிவத்தினது சகஸ்ராம்சமாய்ப்பராசத்தி தோன்றியது. பராசத்தியின் சகஸ்ராம்சமாயப் பெத்தமுத்திகளில் வியாபித்திருப்பது ஆதிசத்தி எனப்படும் ஆதிசத்தியின் சகஸ்ராம்சமாய் வடிவைப் பிரேரித்துக் கொண்டிருப்பது இச்சாசத்தியாகும். இச்சாசத்தியினது சகஸ்ராம்சமாய் அறிவையுண்டாக்குவது ஞானசத்தியாகும். ஞானசத்தியின் சகச்சிராம்சமாய்ப் பஞ்ச



கிருத்தியங்களை நடத்துவது கிரியாசத்தியாகும். பஞ்சகிருத்தியத்தைச் சங்கற்பித்த சிவபெருமானிலிருந்து தோன்றிய இவர்கள் நிஷ்களசத்திகள் எனப்படுவர்.

இச்சத்திகளிலிருந்து யோகிகளும் ஞானிகளும் கிரியாவான்களுஞ் செய்யும் தியானபூசை நிமித்தமாகச் சாதாக்கியங்கள் தோன்றியன.

"சாதாக்கிய மைந்தினுற் சகளநிட்களனும்,
போதானந்தன் சிவனன் போடு."

எனச் சைவசமய நெறி கூறும்.

### அருவுருவத்திருமேனி சாதாக்கியம்

சாதாக்கியம் என்பது எப்பொழுதும் புகழப்படுபது எனப்பொருள்படும். எனவே, நாமரூபாதிகள் இல்லாத சுத்தசிவம் நாமரூபாதிகள் உடையவராய் அன்பர்களாற் புகழப்படுபவர் என்பதுகருத்து. சாதாக்கியங்கள் சிவசாதாக்கியம், அமூர்த்திசாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம், கன்மசாதாக்கியம் என ஐந்தாம்.

சாந்தியதீதை என்னும் பெயரையுடைய பராசத்தியினம்சமாய்ச் சிவசாதாக்கியம் தோன்றியது. சாந்தி என்னும் பெயரையுடைய ஆதிசத்தியினம்சமாய் அமூர்த்திசாதாக்கியம் தோன்றியது. ஆதிசத்தி அருபியாதலின் அதினின்றுந் தோன்றிய சாதாக்கியம் அமூர்த்தியென்னும் பெயரைப்பொருந்திற்று. வித்தை என்னும் பெயரையுடைய இச்சாசத்தியினம்சமாய் மூர்த்திசாதாக்கியந் தோன்றியது. இச்சாசத்தி சுத்தமான கலையைப் பொருந்துதலால் அதினின்றுந் தோன்றிய சாதாக்கியமும் மூர்த்தியென்னும் நாமத்தைப் பொருந்தியது. பிரதிஷ்டாகலை என்னும் பெயரையுடைய ஞானசத்தியினம்சமாக கர்த்திருசாதாக்கியந் தோன்றியது. நிவிர்த்தி என்னும் பெயரையுடைய கிரியாசத்தியினம்சமாய்க் கன்மசாதாக்கியந் தோன்றியது. இதுவே பஞ்சசத்திகளினிடமாகப் பஞ்சசாதாக்கியந் தோன்றிய கிரமமாகும்.

### சதாசிவரூபம்

சாதாக்கியவகை தாஞ்சிவமமூர்த்தி
மூர்த்தி கருத்தா கருமமெனவைந்
தோதிய பரைமுத லைந்திலுற் பவமே

### கந்தபுராணம்

ஐந்தியற் சத்திக ளாயினோர் தமைத்
தந்தது மருவுருத் தாங்கி யவ்வழிச்
சிந்தனை யருச்சனை செய்து யாவரு
முய்ந்திடச் சதாசிவ வுருவைந் துற்றதும்.

* சிவசாதாக்கியாதிபர் சதாசிவரென்றும், அமூர்த்தி சாதாக்கியாதிபர் ஈசரென்றும், மூர்த்திசாதாக்கியாதிபர் பிரமீசர் என்றும், கர்த்திருசாதாக்கியாதிபர் ஈசுவரரென்றும், கன்மசாதாக்கியாதிபர் ஈசானரென்றுஞ் சொல்லப்படுவர்.

### சதாசிவரூபம்

எண்ணுசதாசிவ னீசன் பிரமனும்
ஒண்ணெறி யீசுர னுயரீ சானனும்
தந்துரை சிவசா தாக்கிய முதலிவ்
வைந்தினுக் கைந்தா மதிபர்க ளிவரே.

சிவசாதாக்கிய முதலிய பஞ்சசாதாக்கியங்களும் தத்துவமெனப்படும். சதாசிவர் ஈசர் பிரமீசர் ஈசுவரர் ஈசானரென்னும் இவர்கள் மூர்த்திகளென்று சொல்லப் படுவர். தத்துவங்களும் மூர்த்திகளும் கூடிய அவசரத்தில் ஈசானுதிகள் தோன்றியன. அந்த ஈசானுதிகளே பிரபாவம் என்று சொல்லப்படும்.

---

* வாதுளசுத்தாக்கியம், தத்துவமூர்த்தி பிரபாவ முதலியவற்றுனறிக.



நிஷ்களமாகிய சிவசாதாக்கியம் என்னுந் தத்துவமும் சதாசிவன் என்னும் மூர்த்தியும் பொருந்திய குணம் ஈசானம். அமூர்த்திசாதாக்கியம் என்னுந் தத்துவமும் ஈசன் என்னும் மூர்த்தியும் பொருந்தியது சத்தியோஜாதம். மூர்த்தி சாதாக்கியம் என்னுந் தத்துவமும் பிரமீசன் என்னும் மூர்த்தியும் பொருந்தியது வாமதேவம். கர்த்திருசாதாக்கியம் என்னுந் தத்துவமும் ஈசுரன் என்னும் மூர்த்தியும் பொருந்தியது அகோரம். கர்ம சாதாக்கியம் என்னுந் தத்துவமும், ஈச னென்னும் மூர்த்தியும் பொருந்தியது தத்புருஷம்.

### சதாசிவரூபம்

தத்துவ மூர்த்தி தரும்பிர பாவமென்
றித்தகை மூன்று மியைந்திடு மிவையே
சிவசா தாக்கிய முதலிய தத்துவம்
அவமில் சதாசிவ முதலேம் மூர்த்திகள்
ஒன்றிய போ தீ சானு திகளாய்
நின்றன முறைதிரல் நிறைபிர பாவம்.

### சிவ சாதாக்கியம்

சிவசாதாக்கியமானது அதிசூக்குமமாய், அளவற்ற ஒளிமயமாய் மின்னல் போன்று விளங்கி வியாபித்திருப்பதாய், அரூபமாய், தியானத்தால் அறியப்படுவதாய் லயத்தானமாயிருக்கும்.

### திருநாவுக்கரசு நாயனர் திருக்குறுந்தொகை

கன்னலைக் கரும்பூறிய தேறலை
மின்னனை மின்னனையவு ருவனைப்
பொன்னனை மணிக்குன்று பிறங்கிய
என்னனை யினியான் மறக்கிற்பனே.

### அமூர்த்தி சாதாக்கியம்

அமூர்த்தி சாதாக்கியம், கலைகளுக்கு அப்பாற்பட்டதாய் தூணுகாரமான லிங்கமாய், கோடிசூரியப் பிரகாசமாய், இலிங்கத்தின் நடுவே வடிவைக் கற்பித்திருப்பதாயுள்ளது. இது திவ்வியலிங்கமென்றும் மூலத்தம்பமென்றுஞ் சொல்லப்படும்.

### திருநாவுக்கரசு சுவாமிகள் — திருக்குறுந்தொகை

கரும்பினைக் கட்டியைக் கந்தமாமலர்ச்
சுரும்பினைச் சுடர்ச் சோதியுட் சோதியை
அரும்பினிற்பெரும்போது கொண்டாய்மலர்
விரும்பு மீசனை நான் மறக்கிற்பனே.

### மூர்த்தி சாதாக்கியம்

மூர்த்திசாதாக்கியமானது. பிரளயகாலத்தில் அக்கினி போன்றதாய், திவ்வியலிங்காகிருதியாய், அதன் மேற்பாகத்தில் ஒரு திருமுகமும் மூன்று திருக்கண்களும் எல்லா அவயவங்களும் மான் மழு அபயம் வரதம் தங்கிய நான்கு திருக்கரங்களுமுடையதாய் லிங்கமூர்த்தி என்னும் பெயரைப் பொருந்தியிருக்கும்.

### கர்த் திருசாதாக்கியம்

கர்த்திருசாதாக்கியமானது, படிகம்போன்ற ஒளியுடையதாய், திவ்வியலிங்கமுமாய் மத்தியில் நான்கு திருமுகங்களும் பன்னிரண்டு திருக்கண்களும் வலத்திருக்கரங்களில் சூலம் மழு வாள் அபயம்; இடத்திருக்கரங்களில் பாசம் மணி பாம்பு வரதம் என்னுமாயுதங்களுமுடையதாய், நிறைவான இலஷணங்களோடு கூடியதாயிருக்கும். இதனை ஞானலிங்கமென்று சொல்லுவர்.



### திருநாவுக்கரசு நாயனர் — பண் - இந்தளம்

நாலுகொலாமவர் தம் முகமாவன
நாலுகொலாஞ் சனனம் முதற்றேற்றமும்
நாலுகொலா மவரூர்தியின் பாதங்கள்
நாலுகொனா மறை பாடினதாமே.

### கன்ம சாதாக்கியம்

சிவசாதாக்கியம் முதலிய நான்கும் ஒன்றையொன்று பற்றி ஐந்தாவதாகிய கன்ம சாதாக்கியத்தை அடைந்திருத்தலின், இது மற்றைய சாதாக்கியங்களிலும் விசேடமுடையது. * கன்மசாதாக்கியம் நாதமயமாகிய லிங்கமும் பிந்துமயமாகிய பீடமுங் கூடியதாய், பஞ்சகிருத்தியத்தையுடையதாயிருக்கும். கன்ம சாதாக்கியர் லிங்கமும் பீடமுமாயிருப்பினும், ஐந்து திருமுகமும் பத்துத்திருக்கரங்களுமுடைய தியானரூபியாயிருப்பர். சிவபெருமான் ஆன்மாக்களுடைய தியானபூசா நிமித்தமாக நிஷ்களசகளத் திருவுருக்கொண்ட நிலை ஆவுடையாளுடன் கூடிய இலிங்கமாம்.

### சைவசமய நெறி

நிட்களன்ரு னன்பா னினைந்தருச்சிக் கச்சகள
நிட்களனு ஞனிமலனே
ஆதலினுலென்றுஞ் சதாசிவனை யர்ச்சிக்க
வோதிவிதி வாணலிங்கத்தும்

இலிங்கத்திலே சிருட்டி காலத்தில் தோற்றமும், சங்கார காலத்தில் ஒடுக்கமுமாம். "சங்கார காலத்தில்

---

* கன்மசாதாச்கிய காரணப்பெயர்
தொன்மைக் கிரியையிற் றேன்ற லினுடைத்தா
நாதமயமெனு நவிலுமிலிங்கமும்
பேதமில் விந்து மயமாம் பீடமுஞ்
சோர்வறக் கூடித் தொழிற்பட்டிருக்கும்.

சமஸ்த சேதனசேதனப் பிரபஞ்சங்களும் லயமடைந்து பின்சிருஷ்டி காலத்தில் அங்ஙனம் உற்பத்தியாகின்றமையினால் லிங்கம் எனப்படும்" என்று சுப்பிரபேதாகமங் கூறுகின்றது. படைத்தல் முதலியவற்றால் உலகத்தைச் சித்திரிப்பதாகிய பரமேசுரப் பிரபாவமே இலிங்கம் எனப்படும் எனினுமமையும். லிங்கம் என்னும் சப்தமானது சித்திரித்தல் எனப்பொருள்படுகின்ற லிகி என்னுந் தாதுவினின்றும் பிறந்தமையாற் சிவபிரான் சிருஷ்டி முதலிய பஞ்சகிருத்தியங்களாற் பிரபஞ்சத்தைச் சித்திரிக்கிறார்" என வருணபத்ததியுடையார் கூறுவர்.

ஞானசத்தியாகிய சிவலிங்கத்தின் கீழ்க் காணப்படும் ஆவுடையாள் கிரியாசத்தியைக் குறிக்கும். பரவெளியைக் குறிக்கும் சிவலிங்கத்திலே எப்பொழுதுமோர் அசைவுண்டு. அதுவே பராசத்தியாகும். ஆன்மாக்களின் பாசத்தைக் கெடுப்பதற்காக அசைதற் சத்தி லிங்கத்தைச் சுற்றிக்கொண்டிருக்கிறது. அவ்வசைவு லிங்கத்தில் உண்டென்பதை உணர்த்துவதற்கு ஆவுடையாள் இலிங்கத்தைச் சுற்றிக் கீழடங்கி அமைந்திருக்கிறது. ஆவுடையாளின் ஓர் பக்கத்திலே நீண்டிருப்பதாகிய கோமுகியானது, ஆன்மாக்களைத் திருநோக்கம் செய்கின்ற குறிப்பாக அமைந்திருக்கிறது.

அவ்விலிங்கம் * பிரமபாகம், விஷ்ணுபாகம், உருத்திரபாகமென்னும் மூன்று பாகங்களுடையதாயிருக்கும். அவற்றுள் பிரமபாகம் நபுஞ்சகலிங்கமும், விஷ்ணுபாகம் ஸதிரீலிங்கமும் உருத்திரபாகம் பும்லிங்கமுமாகும். ஆண்ரூபம் பெண்ரூபம் நபுஞ்சக ரூபமாயிருப்பது, அவன் அவள் அதுவாக இருக்கும் உலகத்திலேயுள்ள

---

* திருவிளையாடற்புராணம் வேதத். பொ. அ. படலம் செய்யுள் 32



உயர்திணைப் பொருளும் அஃறிணைப் பொருளும் தம்மிடத்திலே தோன்றி ஒடுங்குகின்றன என்பதை உணர்த்துதற்காகும்.

சிவலிங்கமே பிரணவ முதற்பொருள். இதன் சோதித் தன்மையே அகார உகார மகாரமாயிருக்கும். அகரம் சிவமும், உகரம் சத்தியும் மகாம் கலைவடிவமுமாம். நாதவிந்துக்கள் அகர உகரங்களுள் அடங்கும். அகரம் கண்டமும் உகரம் கோமுகமும் மகரம் வட்டமும் பிரணவம் இலிங்கமுமாயிருக்கும்.

### திருமந்திரம்

அகார முதலாவனைத் துமாய் நிற்கும்
உகார முதலாவுயிர்ப் பெய்தி நிற்கும்
அகார வுகார மிரண்டு மறியில்
அகார வுகார மிலிங்க மதாமே.

### சிவஞானசித்தியார்

சத்தியுஞ் சிவமுமாய தன்மையிவ் வுலகமெல்லா
மொத்தொவ்வா வாணும் பெண்ணுமுயர் குணகுணியுமாகி
வைத்தனன்வளால் வந்த வாக்க மிவ்வாழ்க்கை யெல்லா
மித்தையுமறியார் பீடலிங்கத் தினியல்பு மோரார்.

### சுந்தரமூர்த்தி நாயனார் — பண் - தக்கேசி

ஊனங்கத்துயிர்ப்பாயுயிர்க்கெல்லா மோங்காரத்துருவாகி நின்றானை
வானங்காத்தவர்க்கு மனப்பரிய வள்ளலை யடியார் கடம்முள்ளத்
தேனங்கத்தமுதாகியுள்ளூறுந் தேசனைத் தினைத்தற்கரியானை
மானங்கைத்தலத தேந்தவல்லானை வலிவலந்தனில் வந்துகண்டேனே

இலிங்கம் என்பது சிவமேயாம். சிவத்துக்குப் பெயராகிய லிங்கம் என்னும் பதம் உபசாரத்தால் பக்குவம் நோக்கி ஆன்மாக்களின் தியானபூசை

சைலம் - சிலையாலாகியது.

பஞ்சமூர்த்திகளிலிருந்து தோன்றிய சிவசாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், மூர்த்திசாதாக்கியம், கர்த்திருசாதாக்கியம் என்னும் நான்கும் ஒன்றையொன்றுபற்றி ஐந்தாவதாகிய கன்மசாதாக்கியத்தைச் சேர்ந்திருத்தலின், இந்தக் கன்மசாதாக்கியம் மற்றைய சாதாக்கியங்களிலும் விசேஷமுடையதாகும்.

## சிவமூர்த்தி நிவேசனம்

மூர்த்தியை ஒளிரூபமாயும் தண்டாகாரமாயும் பிரியாமலிருக்கிற அவயவங்களையுடையதாயும், சிவதத்துவரூபமாயும், பரவிந்து வியாபகமாயும் இலிங்கத்தின் ஈசானத்திலும் மேற்கு வடக்கு தெற்கு கிழக்குத் திக்குகளிலும் பாவனை பண்ணுதல் வேண்டும்.

ஒளிரூபம் சிவசாதாக்கியத்தையும், தண்டாகாரம் அமூர்த்தி சாதாக்கியத்தையும், பிரியாமலிருக்கும் அவயவம் மூர்த்தி சாதாக்கியத்தையும், சிவதத்துவரூபம் கர்த்திருசாதாக்கியத்தையும், பரவிந்து வியாபகம் கன்ம சாதாக்கியத்தையும் குறிக்கும்.

## மந்திரத் திருமேனி

உலகத்திற்கு முதற்காரணம் சுத்தமாயை அசுத்தமாயை என்பன. இவற்றுள் மேலாகிய சுத்தமாயையில் சிவசத்தி சேர்ந்து நிற்றலானும், அச்சுத்தமாயையிலே தோன்றிய காரணத்தினாலும் பயன்கொடுத்தற்பொருட்டுச் சிவசத்தி அதிஷ்டித்தலானும், சிவபூசை அக்கினிகாரியம் முதலியவற்றால் வழிபடுபவர்களுக்குப் போக மோக்ஷத்தைக் கொடுத்தலானும் ஆகமங்கள் சிவபெருமானுக்கு மந்திரத் திருமேனியை விதந்து கூறுகின்றன.

முதலிற் றோன்றியதனாலும் சிவபெருமானுக்குத் திருமேனியாக விதந் தெடுத்துக் கூறியதென அறிக.

ஈசானம் முதலிய மந்திரங்கள் சிவபெருமானுக்குச் சிரம், முகம் இருதயம், குய்யம், திருவடிகள், என்பனவாம்.

## ஈசானம்

எல்லா உலகங்களையும் அனுக்கிரகஞ்செய்யும் ஐசுவரிய குணத்தோடு கூடியதனாலும் எல்லா மார்க்கத்திற்கும் மேலான இடத்தில் இருப்பதனாலும் ஈசான மூர்த்தா எனப்படும்.

## தற்புருஷம்

ஆன்மாக்களுடைய சரீரங்களை அதிஷ்டித்து நின்று ஞானத்தைப பிரகாசிக்கச்செய்து மலத்தை நீக்குதலால் தற்புருஷவத்திர மெனப்படும்.

## அகோரம்

ஞானமே திருமேனியாகவுடைய சிவபெருமான் கோரமாகிய மலத்தைப் பரிபாகஞ் செய்தலால் அகோர இருதயமெனப்படும்.

## வாமதேவம்

ஆன்மாக்களது கன்மத்துக் கேற்பத் தனுகரண புவன போகங்களைக் கொடுத்துத் தரும முதலியவற்றை அனுபவிக்கச்செய்தலால் வாமதேவ குஹ்யமெனப்படும்.

## சத்தியோஜாதம்

இச்சாசத்தியால் சகலருக்கும் பிரளயா கலருக்கும் உடம்பையுண்டாக்கு கின்றமையாலும் விஞ்ஞானகல

ருக்கு வைந்தவ சரீரத்தை யுண்டாக்குகின்றமையா லும் தொழிலின் வேகத்தால் சத்தியோ ஜாதம் எனப் படும். இவ்வாறு மிருகேந்திரமும் பௌஷ்கரமும் கூறுகின்றன.

### சிவஞான சித்தியார்

மந்திர மதனிற் பஞ்ச மந்திரம் வடிவமாகத்
தந்திரஞ் சொன்ன வாறிங் கென்னெனச் சாற்றக் கேணீ
முந்திய தோற்றத்தாலு மந்திர மூலத்தாலு
மந்தமில் சத்தியாதிக் கிசைத்தலு மாகு மன்றே

### கலா மூர்த்தி

சிவபெருமான் முப்பத்தெட்டுக் கலாசத்திகளைத்திரு மேனியாகக் கொண்டமையாற் கலாமூர்த்தியென்னுந் திருநாமத்தைப் பொருந்தினர்.

ஈசானத்தின் பகுதியாகும் ஈசானியின் ஐந்து

| | |
|---|---|
| கூறுகளாகிய | சசினி மேற் சிரசாகவும், |
| அங்கதை | கிழக்குச் சிரசாகவும், |
| இட்டை | தெற்குச் சிரசாகவும் |
| மரீசி | வடக்குச் சிரசாகவும், |
| சுவாலினி | மேற்குச் சிரசாகவும். (5) |

தற்புருஷத்தின் பகுதியாகும் பூரணியின் நான்கு கூறுகளாகிய

| | |
|---|---|
| * சாந்தி | கிழக்குமுகமாகவும், |
| வித்தை | தெற்கு முகமாகவும், |
| பிரதிஷ்டை | வடக்கு முகமாகவும், |
| நிவிர்த்தி | மேற்கு முகமாகவும். (4) |

* அவ்வியத்தகலையை ஊர்த்துவமுகமாக அகோர கூறியிருக்கின்றனர்.



அகோரத்தின் பகுதியாகும் ஆர்த்தியின் எட்டுக் கூறுகளாகிய

| | |
|---|---|
| தமை | இருதயமாகவும், |
| மோகை | கண்டமாகவும், |
| சயை | வலத்தோளாகவும், |
| நிட்டை | இடத்தோளாகவும், |
| மிருத்தியு | கொப்பூழாகவும், |
| மாயை | வயிருகவும், |
| பயை | முதுகாகவும், |
| சரை | மார்பாகவும். (8) |

வாம தேவத்தின் பகுதியாகும் வாமையின் பதின் மூன்று கூறுகளாகிய

| | |
|---|---|
| இரசை | குய்யமாகவும், |
| இரக்ஷை | கோசமாகவும், |
| இரதி | வலத் தொடையாகவும், |
| பாலி | இடத்தொடையாகவும், |
| காமை | வலமுழந்தாளாகவும், |
| சம்யமினி | இடமுழந்தாளாகவும், |
| பிரியை | வலக்கணைக் காலாகவும், |
| புத்தி | இடக்கணைக் காலாகவும், |
| காரி | வலக்குதமாகவும், |
| தாத்திரி | இடக் குதமாகவும், |
| பிராமணி | கடியாகவும், |
| மோகினி | வலப்பக்கமாகவும் |
| பயை | இடப்பக்கமாகவும், (13) |

சத்தியோசாதத்தின் பகுதியாகும் மூர்த்தியின் எட்டுக் கூறுகளாகிய

| | |
|---|---|
| சித்தி | வலப்பாதமாகவும், |
| இருத்தி | இடப்பாதமாகவும், |

| | |
|---|---|
| தியுதி | வலக்கையாகவும், |
| இலட்சுமி | இடக்கையாகவும், |
| மேதை | மூக்காகவும், |
| காந்தி | திருமுடியாகவும், |
| சுவதை | வலப்புயமாகவும், |
| திருதி | இடப்புயமாகவும், (8) |

இருக்கும். ஆகக்கலைகள் முப்பத்தெட்டு என அறிக.

உருவம் பெயர் செயல் முதலியவற்றைப் பொருந்தாத அநாதிமல முத்தசித்துருவாகிய சிவபெருமான் ஆன்மாக்களது தியானபூசாநிமித்தமாக முப்பத்தெட்டுக் கலாசத்திகளைத் திருமேனியாகக் கொண்டமையினுல், கன்மசாதாக்கிய மூர்த்தியின் திருநாமம் சகளநிஷ்களமென்று சிவாகமங்கள் செப்பும்.

## சதாசிவரூபம்

"இருடீர் முப்பத் தெண் கலை மயமா
முருவடிவுறு சிவனுக்குண்டாகையிற்
சிறக்கு மைம் முகத்தவன் திருநாம
திறக் குஞ்சகள நிட்கள மெனவே"

## அத்துவா மூர்த்தி

சாந்தியதீதகலை சிவபெருமானுக்குத் திருமுடியாகவும், சாந்திகலை திருமுகமாகவும், வித்தியாகலை திருமார்பாகவும் பிரதிஷ்டாகலை குய்யமாகவும் நிவிர்த்திகலை திருவடியாகவும் அமைந்துள்ளன. இருநூற்றிருபத்துநான்கு புவனங்கள் சிவபெருமானுக்கு உரோமரூபமாயிருக்கின்றன. ஐம்பத்தொரு ருத்திரர்களின் ரூபமானதும் ஐம்பத்தொரு மாதிருகாசத்திகளால் அதிஷ்டிக்கப்படுவதுமாகிய வர்ணத்துவா தோலாகவும், பதினொருமந்திரங்கள் இரத்தமாகவும், எண்பத் தொருபதங்கள்



நரம்புந் தசையுமாகவும், முப்பத்தாறு தத்துவங்கள் சுக்கிலம், எலும்பு, நிணம், மூளை முதலிய தாதுக்களாகவும் இங்ஙனம் சிவபெருமானுக்கு ஆறத்துவாக்களும் திருமேனியாக அமைந்துள்ளன,

பதினொரு மந்திரங்கள் எண்பத்தொரு பதங்களினுல் வியாபித்திருக்கும், பதங்கள் ஐம்பத்தொருவர்ணங்களினுல் வியாபித்திருக்கும். வர்ணங்கள் இருநூற்றிருபத்துநான்கு புவனங்களினுல் வியாபித்திருக்கும், புவனங்கள் முப்பத்தாறுதத்து வங்களினுல் வியாபித்திருக்கும், தத்துவங்கள் ஐந்து கலைகளால் வியாபித்திருக்கும். கலைகள் துணைக்காரணமான சிவசத்தியால் வியாபித்திருக்கும். சிவசத்தி சிவத்திலடங்கும்.

இங்ஙனம் ஒன்றிலொன்று வியாபித்திருத்தலால் மந்திரங்கள் வியாப்பியம். பதங்கள் வியாபகம், பதங்கள் வியாப்பியம்; வர்ணங்கள் வியாபகம். வர்ணங்கள் வியாப்பியம்; புவனங்கள் வியாபகம். புவனங்கள் வியாப்பியம்; தத்துவங்கள் வியாபகம். தத்துவங்கள் வியாப்பியம்; கலைகள் வியாபகம். கலைகள் வியாப்பியம்; சத்தி வியாபகம், சத்திவியாப்பியம், சிவபெருமான் சர்வ வியாபகர். ஆதலால் ஆறத்துவாக்களாலும் ஏற்பட்ட கன்மங்களைப் புசிப்பித்துத்தொலைப்பவரும்.

விஞ்ஞான கலருக்கு அவர் அறிவினுள் அறிவாய் நின்று உணர்த்துவதாகிய நிராதார தீக்ஷை செய்து மலத்தை நீக்கி முத்தி கொடுப்பவரும், பிரளயாகலருக்கு நான்கு திருப்புயங்கள் அபயம் வரதம் மான்மழு நீலகண்டம் முதலிய இலக்ஷணங்கள் பொருந்திய திருமேனியோடு முன்னின்று உணர்த்துவதாகிய நிராதார தீக்ஷை செய்து இரு மலங்களையும் நீக்கி முத்தி கொடுக்கின்றவரும், மும்மலங்களையுடைய சகலருக்கு சீடனது பக்குவத்திற்கேற்ப ஞானகுருவை ஆதாரமாகக்

கொண்டு நின்று ஞானவதி தீக்ஷையினாலும், கிரியா குருவை ஆதாரமாகக் கொண்டு நின்று கிரியாவதி தீக்ஷையினாலும் அத்துவசுத்தி பண்ணி மலத்தை ஒழித்து சிவம் பிரகாசித்தற் பொருட்டு, ஞானத்தை உதிக்கச் செய்து பிறவியை ஒழித்து முத்தி கொடுப் பவரும் தாமென்பதை அறிவித்தல் காரணமாக அத்துவா மூர்த்தியாயினர்.

### சிவஞான சித்தியார்

அத்துவா மூர்த்தியாக வறைகுவ தென்னை யென்னில்
நித்தனுய் நிறைந்த வற்றினீங் கிடாநிலைமை யானுஞ்
சித்துடன சித்திற்கெல்லாஞ் சேட்டித ஞதலானும்
வைத்ததாமத்துவாவும் வடிவென மறைகளெல்லாம்.

### சிவாகமத் திருமேனி

காமிகம் திருவடிகளும், யோகசம் கணைக்கால்களும், சிந்தியம், திருவடி விரல்களும், காரணம் கெணைடைக் கால்களும், அசிதம் முழந்தாழ்களும், தீப்தம் தொடைகளும், சூட்சுமம் குய்யமும், சகச்சிரம் கடித்தானமும், அஞ்சுமான் முதுகும், சுப்பிரபேதம் கொப்பூழும், விசயம் வயிறும், நிச்சுவாசம் இருதயமும், சுவாயம்புவம் நெஞ்சும், ஆக்கினேயம் கண்களும், வீரம் கழுத்தும், இரௌரவம் திருச்செவிகளும், மகுடம் திருமுடியும், விமலம் திருக்கரங்களும், சந்திர ஞானம் மார்பும், முகவிம்பம் திருமுகமும், புரோற்கீதம் திருநாக்கும், லளிதம் திருக்கபோலமும், சித்தம் திருநெற்றியும், சந்தானம் குண்டலமும் சர்வோத்தம் உபவீதமும், பாரமேசுவரம் மாலைகளும், கிரணம் இரத்தினுபரணமும், வாதுளம் பரிவட்டமுமாகச் சதாசிவ மூர்த்திக் குச்சிவாகமங்கள் திருமேனியாக அமைந்துள்ளன. ஆகம நியாசம் செய்து வணங்குபவர்கள் சிவஞானத்தையும் சிவதருமத்தில் மேலான விருத்தியையும் பெறுவார்கள்.



## மாதிருகா மூர்த்தி

ஞான சத்தியானது சுத்த மாயையை அதிஷ்டிக்க நாதமும், நாதத்தில் அக்ஷரவிந்துவும் விந்துவில் சிவ பெருமானது இச்சாசத்தியால் அம்பிகையென்னும் விந்துகலாசத்தியும், அதினின்று குண்டவினி வடிவாகிய வாமை, தண்டாகாரமாயிருக்கும் சியேட்டை, கலைக் கொம்பர் வடிவாகிய ரௌத்திரி என்னும் முச்சத்திகளும், அவற்றிலிருந்து சயை, விசயை, அசிதை, பராசிதை, நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, இந்திகை, தீபிகை, ரோசிகை, மோசிகை, வியோமரூபை, அநந்தை, அநாதை, அநாசிருதை முதலிய சத்திகளும், இச்சத்திகளில் ஐம்பத்தொரு அட்சரங்களும் தோன்றின. இவ்வட்சரங்களுக்குப் பரமசிவன் நிமித்த காரணர், பிந்து துணைக்காரணம். சிவசத்தி முதற்காரணமாகும். காரிய ரூபமாகிய அக்ஷரங்கள் காரணத்தோடு கூடியிருக்கும். இவை உலகத்துக்கு மாதாவாயிருப்பதால் மாதிருகை யெனப்படும் ஞானசத்தி என்பர்.

சிவபெருமான் மாதிருகையாகிய ஞானசத்தியைத் திருமேனியாகக்கொண்டு சொற்பிரபஞ்சங்களை நடைபெறச் செய்வரென்று பௌஷ்கராகமஞ் செப்புகின்றது.

### திருமந்திரம்

ஐம்பதெழுத்தே அனைத்து வேதங்களும்
ஐம்பதெழுத்தே அனைத் தாகமங்களும்
ஐம்பதெழுத்தி னுடைவை யறிந்தபின்
ஐம்பதெழத்தே யஞ்செ ழுந்தாமே.

### வித்தியாதேக நியாசம்

சிவபெருமான் பிருதுவிதத்துவ முதல் சிவதத்துவாந்தமான மந்திர சிங்காசனத்தின் மீது ஐந்து திரு

முகங்களும், பதினைந்து திருக்கண்களும், பத்துத் திருக்கரங்களும், இரண்டு திருவடிகளுமுடையவராய், முப்பத்திரண்டு இலக்ஷணங்களமைந்தவராய் வீற்றிருந்தருளுவர்.

புஷ்பங்களினால் அஞ்சலியை நிறைத்து இருதய தானத்தில் வைத்துக்கொண்டு,

உச்சிமுக மீசான மொளிதெளியப் பளிங்கே
யுத்தர பூருவதிசையை நோக்கியுறு முகந்தே
நிர்சயித்த முகத்தின் கீழ்ப் பூர்வதிசை நோக்கி
நிகழுமுகந் தற்புருடங் கோங்கலர் போனிறமே
யச்சுறுத்து மகோர முக மறங்கரிது கரான்
மவிழ்தாடி வலத்தோளிற்றென் னோக்கி யமருஞ்
செச்சை நிறத் தெரிவை முகமிடத்தோண் மேல் வாமஞ்
சிறுபுறநதின் முகஞ் சத்தி யோசாதந் திகழ்வால்.

திருவுருவந் தெளி பளிங்கு சடா மகுடத் திதழி
சிறுபிறையு மூவைந்து திருநயனம் வலப்பாற்
கரதலத்திற் சத்தியப யஞ்சூல நீண்ட
கட்டங்கந் தமருகமு மற்றையிடக் கரத்தின்
வரதமுமா துளங்கபலம் போகி செப மாலை
மணமலிநீ லோற்பலமு முடையர் வய திரெட்
டுருவிரட்டி யுறுப்பிரண்டு பதம்பதுமா தனந்தா
னுறவிருப்பர் சதாசிவர்தத் துவதவிசி னுகந்தே

என்று சத்திமாத்திரத்தாற் சகளீகரித் திருப்பவராயிருக்கிற பரமேசுவரனை மூர்த்தியினிடத்தில் நினைத்து ஓம் ஹாம் ஹௌம் வித்தியாதேகாய நமஎன்றுச்சரித்து அப்புஷ்பாஞ்சலியைப் பிரமரந்திரம் வரையும் மெல்லென உயர்த்திக்கொண்டுபோய் அவ்விடத்தினின்றும் அவ்வித்தியாதேகம் மின்னிறமுடையதாகித் தனது புஷ்பாஞ்சாலியினுள்ளே வந்ததாகத் தியானித்து இருதயத் தானம் வரையும் மெல்லென இறக்கிக்கொண்டு வந்து



சிவலிங்காகாரத்தைப் பாவியாது விடுத்து மேற்சொல்லிய ஐந்து முகம், பதினைந்து கண் முதலியவற்றையுடைய வித்தியாதேக பரமேசுரனையே பாவித்து, சிவலிங்கத்தினது நெடுமையாகிய மூர்த்தியிலே நியாசஞ் செய்க. ஈசான முதலிய ஐந்து முகங்களிலும் நடுவிரல் மூன்றினாலும் ஓம ஹௌம் நேத்திரேப்யோநம என்று நியசிக்க.

சதாசிவ மூர்த்தியினுடைய திருமேனி ஆன்மாக்கள் செய்த கன்மத்துக்கீடாக அறிந்து இரக்ஷிக்குங் குணமாகிய மத்திரமாகையால் மந்திர ரூபமாகிய ஞான சத்தி வித்தியாதேக மெனப்படும்.

## ஞானபூசைத் திருவிருத்தம்

இன்புருவச் சிவன் படைத்தற் கிச்சை காலந்
திசைவுழி வித்தியா தேகியாகி யெழிற் கிரியை
மூண்பெருகக் கூடிலையினை யடைந்து நாத
மூந்து வித்தக்கரமனு நன்மொழி முறையே வகுத்துத்
தன் பொருவில் மந்திரத்தாற் சதா சிவா நியுதனி,,

## திரிநேத்திரம், (மூன்று கண்)

சூரியன், சந்திரன், அக்கினி என்னும் முச்சுடர்களையும், அதிட்டிக்கின்றவர் தாமென்பதையும், காருகபத்தியம், ஆகவனீயம், தட்சிணாக்கினீயம் என்னும் முக்தீவேள்வியில் அவை யாவுந் தம்மிடத்தே பொருந்தியுள்ளன என்பதையும், எல்லாக் கருமங்களையும் அறிந்து செய்யும் இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியா சத்திகளையுடையவர் தாமென்பதையும் மூன்று கண்கள் குறிக்கின்றன.

## திருநாவுக்கரசு நாயனர்

### திருத்தாண்டகம்.

ஏவணத்த சிலையான் முப்புர மெய்தான் காண்
மறையவன் காண் மறையவன் காணீசன்ருன் காண்
தூவணத்த சுடர்ச் சூலப் படையினுன் காண்
சுடர் மூன்றுங் கண்மூன்ருக் கொண்டான்ருன் காண்
ஆவணத் தாலென் றன்னை யாட்கொண்டான் கா
ணனலாடி காணடி யார்க் கமிர்தானுன் காண்
தீவணத்த திருவுருவிற் கரியுருவன் காண்
டிருவா ரூரான் காணென் சிந்தையானே.

### சிவதருமோத்தரம்

"சுடர் மூன்றுங் கண்மூன்ருய்த் தொடர்ந் திலங்க"

## திருநாவுக்கரசு நாயனர்

### திருக்குறுந்தொகை

மூன்று மூர்த்தியு ணின்றியலுந் தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தான்
மூன்று கண்ணினன் றித்தொழின் மூன்றினன்
மூன்று போதுமென் சிந்தையுண் மூழ்குமே.

### பட்டினத்தடிகள்

மூக்கண னென்பது முத்தீ வேள்வியிற்
றெருக்க தென்னிடை யென்பதோர் சுருக்கே.

### சதாசிவ ரூபம்

"இவர்தா — மெல்லாமறியு மியல்பது நயனம்"



### பளிங்கு நிறங் கொண்டது

சாத்துவிக குணம் பளிங்கு நிறமும், இராசதஞ் செந்நிறமும், தாமதங் கரு நிறமுமுடையன. விஷ்ணுவுக்குத் தாமதகுணமும், பிரமாவுக்கு இராசதகுணமுங் காணப்படுகின்றன. உருத்திரனது கிருத்தியம் ஆன்மாக்கள் செய்த கன்மத்தை அவர்களைக் கொண்டு புசிப்பித்துத் தொலைத்துப்பேரின்ப வீடளிக்க வேண்டுமென்னுங் கிருபையின் செயலாகும். ஆகையால் அவரது குணம் சாத்துவிகமாயிருக்கும்.

விஷ்ணு தாமத குண முடைய ரென்பதை அவரது நீல நிற மேனியும், பரமா இராசத குணமுடையரென்பதை அவரது சிவந்த மேனியுந் தெரிவித்து நிற்கின்றன.

சதாசிவ மூர்த்தியானவர் சாத்துவிகமாகிய பளிங்கு நிறத்தைப் பொருந்தியது, சுதந்திரரும் சுகத்துக்கும் ஞானத்துக்கும் இடமாயுள்ளவரும் யோகிகட்கும் அவ்வடிவோடு சென்று ஞானேபதேசஞ் செய்பவரும் தாமென்பதை உணர்த்துதற்காகும்.

### அங்கபேதம்

அங்கபேதங்கள், அங்கம், பிரத்தியங்கம், சாங்கம், உபாங்கம் என நான்கு வகைப்படு மென்று வாதுளாகமம் செப்பும்.

### அங்கம்

சிரம், முகம், இருதயம் என்பன அங்கங்களாம். அங்கம் - திருமேனி.

### பிரத்தியங்கம்,

திருமார்பு, கழுத்து, தனம், புயம், நாபி, குய்யம், உதரம், கண்கள், நாசி, வாய், காதுகள், கைகள்,

கால்கள், விரல்கள், தொடைகள், முழந்தாள்கள், கணைக் கால்கள் ஆகிய இவை பிரத்தியங்கங்களாம்.
பிரத்தியங்கம் - அத்திருமேனியிலுள்ள உறுப்புக்கள்.

சாங்கம்.

சூலம், மழு, வாள், குலிசம், அபயம், அக்கினி, அங்குசம், மணி, சர்ப்பம், வரதம், பாசம் முதலியவை சாங்கங்களாம். சாங்கம் - அங்கத்தோடு கூடியது.

உபாங்கம்,

வஸ்திரம், உபவீதம், மாலை, கந்தம், ஆபரணம் முதலியவை உபாங்கங்களாம்.
உபாங்கம் - அங்கத்தை விட்டு நீங்காது அதன் சமீபத் திலிருப்பது.

## இருதயம்

முத்தான்மாக்களுக்கு மெய்ஞ்ஞானத்தை உணர்த் தும் திருவருட்சத்தி இருதயமாம். "நல்லோருணர வரு ஞானமதியம்" என்பது சதாசிவரூபம்.

## சிகை

அநாதியே சிவபெருமானுக்குச் சுதந்திரமாயுள்ள சிவகரணமே சிகையாம். "ஓங் களவின்மை யுயர்சிகை" என்பது சதாசிவரூபம்.

## ஐந்து திருமுகங்கள்

பஞ்சமூர்த்திகளை நிலைக்களமாகச் செலுத்திப் பஞ்சகிருத்தியத்தைச் செய்யும் பரமசிவனது சுத்த குணங்களாகிய ஈசானம், தற்புருஷம், அகோரம், வாம தேவம், சத்தியோஜாத மென்னும் ஐந்தும் கரும சாதாக்கியராகிய சதாசிவ மூர்த்திக்குத் திருமுகங்களாம்.



ஈசான முகமானது சிறுபிள்ளை முகம் போன்று பளிங்கு நிறமாய் ஈசான திக்கைப் பார்த்து மேனோக் கிய தாயிருக்கும்.

தற்புருஷ முகமானது யௌவனப் பருவத்தையுடை யதாய், கோங்கம் பூ நிறம் போன்றதாய், கிழக்கு நோக்கியதாயிருக்கும்.

அகோர முகமானது தூங்கிய தாடியை யுடைய தாய், வெளிப்பட்ட பற்களை யுடையதாய், கண்டவர்கள் பயங் கொள்ளத் தக்கதாய், விருத்தார் முகம் போன்ற தாய், வலத் தோளின் மேல் தெற்கு நோக்கியிருக்கும்.

வாமதேவ முகமானது மாதர் முகம் போன்று அவர்கள் ஆபரணங்களை யுடையதாய், வெட்சிப் பூ நிறத்ததாய், இடத் தோளின் மீது வடக்கு நோக்கிய தாய் விளங்கா நிற்கும்.

சத்தி யோசாத முகமானது அரசர் முகம் போன்ற தாய், வெண்மை நிற முடையதாய், பிடரில் மேற்கு நோக்கிய்தாய் விளங்கா நிற்கும்.

ஐந்து நிறங்களை யுடைய ஐந்து திருமுகங்களைச் சிவபெருமான் கொண்டது, பஞ்ச கிருத்தியத்துக்குக் காரணரும், பஞ்ச கருத்தாக்களை அதிஷ்டிப்பவருந் தாமென்பதை அறிவித்தற் காகும்.

ஈசானம் முதலிய ஐந்து மந்திரங்களும் அனுக்கிர கம் மறைத்தல், சங்காரம், காத்தல், படைத்தல் என்னும் ஐந்தொழில்களையுஞ் செய்யும் சக்திகள் எனத் தத்து வத்திரய நிர்ணயம் செப்புகின்றது.

### சிவமூலம்

பிருதிவி தத்துவமுதல் உன்மனையந்தம் வியாபித்திருக்கும் சிவபெருமானுடைய பரிபூரணமே மூலமெனப்படும்.

### சதாசிவரூபம்

தரை முதலுன் மனையளவு நிலாவிய
பரை சிவன் பூரண மூலமெனப்படும்.

### திரிசூலம்

* சனனி ரோதயித்திரி ஆரிணி என்னும் முச்சத்தி வடிவினதாகிய சூலப்படையைச் சிவபெருமான் ஏந்தியருளியது. முத்தொழிலுக்கும் முதல்வரும், மும்மலங்களை நீக்குபவருந் தாமென்பதையுணர்த்தும் அறிகுறியாம்.

## திருநாவுக்கரசு நாயனர்

மூன்று மூர்த்தியு ணின்றியலுந் தொழில்
மூன்று மாயின மூவிலைச் சூலத்தான்

### பட்டினத்தடிகள்

மூவிலையொருதாட் சூலமேந்துதன்
மூவரும் யானென மொழிந்த வாறே

---

* சென்னியானது சிருட்டித்தொழிலுக்குக் காரணமாயிருக்கும். போகங்களில் நியதி செய்வது ரோதயித்திரியாம். ஆரிணி சங்கார கிருத்தியத்தையுடையது.



### திருவாசகம்

கோற்றேன் மொழிக்கிள்ளாய் கோதில் பெருந்துறைக்கோன்
மாற்றரை வெல்லும் படை பகரா — யேற்றூர்
அழுக்கடையா நெஞ்சுருகமும் மலங்கள் பாயுங்
கழுப்படை காண்கைக்கொள்படை.

### மழு

பரைக்குமேலானவரும், லயசிவமாயிருப்பவரும் தாமென்பதையுணர்த்துவதற்காகப் பரமசிவன் பராசத்திருபமானதும், லயத்தானமானதுமாகிய மழுவை ஏந்தினர்.

### வாள்

சனனமாகிய கொடியின் வேரையறுப்பவரும், எல்லாரையுமடக்கியாளலால் வந்த புகழொளியை யுடையவருந்தாமென்பதை அறிவித்தற்காக ஞானவடிவாகிய வாளை ஏந்தியருளினர்.

"ஞானவாளேந்துமையர்" என்பது திருவாசகம்.

### குலிசம்

ஒருவராலுங் கெடுத்தற் கியலாதவர் தாமென்பதை அறிவித்தருளுமாறு துட்டர்களைப் பேதிக்குங்குணமாகிய குலிசத்தை ஏந்தினர்.

### அபயம்

உலகத்துன்பத்துக்குப் பயப்படவேண்டாமென்று அனுக்கிரகஞ் செய்யுங் குணத்தை அபயங் குறிக்கும்.

### வரதம்

ஆன்மாக்களது கன்மத்துக் கீடாகப் போகமுத்திகளைக் கொடுப்பவர் என்பதை வரதகரங் குறிக்கும்.

### அக்கினி

முதல்வனுர் சங்கார வடிவினதாகிய அக்கினியைத் திருக்கரத்திற்ருங்கிய ருளியது ஆன்மாக்களைப் பந்தித்த பாசங்களை நீருக்குபவர் தாமென்பதை உணர்த்துவதற்காகும்.

### அங்குசம்

விவர்ணகுணத்தையுடைய வரென்பதை அறிவித்தல் காரணமாய் அங்குசத்தை ஏந்தியருளினர்.

### மணி

நாததத்துவத்துக்கு தலைவர் தாமென்பதை உணர்த்தும் கிருபையால் நாதமயமாகிய மணியைத் தாங்கியருளினுர்.

இருத்தியே நாகரூபமெனக் கூறப்படலால் செல்வம், ஐசுவரியம், நிறைவு, என்பவைகளையுடையவர் என்பது உணரப்படும்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருவிருத்தம்

போர்ப்பனையானை யுரித்த பிரான் பொறிவாயரவம்
சேர்ப்பது வானத் திரைகடல் சூழுலகம் மிதனைக்
காப்பது காரணமாகக் கொண்டான் கண்டியூரிருந்த
கூர்ப்புடையொள்வாள் மழுவனையா மண்டர் கூறுவதே.

### பாசம்

ஆன்மாக்களுக்கு மலத்தை யூட்டு விப்பவர்தாமென்பதை உணர்த்துங் காரணமாக மாயாரூபமாகிய பாசத்தைத் திருக்கரத்திற் தரித்தருளினுர்.

### மான்

மானினது நான்கு கால்களும் நான்கு வேதங்களெனக் கொள்ள நிற்றலின் வேதப் பொருளாயுள்ளவர் தாமென்னு முண்மையை உணர்த்துங் காரணமாக மறிமானைத் தாங்கியருளினுர்,



### பட்டினத்தடிகள்

வேதமான் மறியேந்துதன் மற்றத
ரதனுனென நவிற்று மாறே''

### உடுக்கை முதலியன

உடுக்கை எல்லா உலகங்களையுஞ் சிருட்டிப்பவர் என்பதையும், நீலோற்பலம் சங்கற்பவிகற்பமாகிய மனத்தத்துவத்தை நடாத்துங் குணமுடையவர் என்பதையும் மாதுளம்பழம் சுத்தமாயையைப் பிரேரிக்கும் குணத்தையுடையவர் என்பதையுமுணர்த்தும்.

### புன்முறுவல்

ஆகாமியம், சஞ்சிதம், பிரார்த்தம் என்னும் மூவகைத் துயரையுங் கெடுத்தருளுங் காரணமாக இளமையாகிய புன்முறுவலைக் கொண்டருளினுர். "இடர் மூன்று மிழித்தருளு மிள முறுவன் முகமலரிலங்க'' என்பது சிவதருமோத்தரம்.

"சந்திரன் சர்வஞ்ஞத்துவரூபம், பத்துக்கரங்கள் பத்துத்திக்குகள் திரிசூலம் திரிகுணம் என்று சொல்லப்படும். பரசு சத்தியமென்று சொல்லப்படும் வாள்ஈசுரனுடைய பராக்கிரமமாகும். வச்சிரம் பேதிக்கப்படாத சத்தியாகும். சங்காரசத்தியாகிய அக்கினி பாசங்களைச் சாம்பராக்குவதாகும். நாகத்தின் கெம்பீர வடிவான சத்தி எல்லோரையும் நியமிப்பது, மணியினது ஓசை மந்திரரூபத்தை யறிவிப்பது, அபயம் சமஸ்த உலகங்களையும் காக்கும் சத்தியாகும். அங்குசம் தனக்கு யாதொன்று அனுபவிக்கத்தக்கதோ, அடையப்படுமோ அப்பொருளைக் கற்பிப்பதாகும்.

எனக்காமிகாமத்திலும்

"முத்தலைச்சூலமானது முக்குணங்களென்று சொல்லப்படும். பரசுசத்தியமென்றும், கட்டுவாங்கம்

பிரதாபமென்றும்' வச்சிரம் பேதிக்கப்படாத குணமென்றும் ஈசுரனுடைய அனுக்கிரகம் அபயமென்றும், சொல்லப்படும், நாகம் இருத்தியென்றும் பாசம் மாயாசொரூபமென்றும்,

அங்குசம் விவர்ணகுணமென்றும், மணிநாத ரூபமென்றும், அக்கினி சங்காரரூபமென்றும் அறியத்தக்கது. இந்தக் குணரூபங்கள் சாங்கமென்றும் வாதுளாகமத்திலும் வருவனவற்றால் இவ்வுண்மைகள் தெளியப்படும்.

திரிசூலம், இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்திகளாகக் கொள்ளப்படும். அவைகளே சுத்ததத்துவத்தில் பிரவிருத்தியை உண்டுபண்ணுங்கால் கட்வாங்கமாகவும் ஜகத்பீசமான மகாமாயையில் பிரவிருத்தியை உண்டு பண்ணுங்கால் மாதும்பழமாகவும், கலக்கத்துடன் கூடிய மாயாதத்துவத்தில் பிரவிருத்தியை உண்டுபண்ணுங்கால் வாளாகவுங் கொள்ளப்படும்.

மனதைப் பிரவிருத்தி செய்யுஞ் சத்தி நீலோற்பலம் எனவும், இந்திரியங்களைப் பிரவிருத்திசெய்யுஞ் சத்தி உருத்திராக்ஷமாலை என்வும், துட்டர்களைச் சங்கரிக்குஞ் சத்தி சத்தி ஆயுதமாகவும், போகத்தைக் கொடுக்குஞ்சத்தி வரதமாகவும் மோஷத்தைக்கொடுக்குஞ்சத்தி அபயமாகவுங் கொள்ளப்படும் எனச் சிவார்ச்சனுசந்திரிகையில் வருவனவற்றாலும் இவ்வுண்மைகள் தெளியப்படும்.

### கங்கை

உமாதேவியாரது திருக்கரத்தினின்றுந் தோற்றிய கங்கையானது உலகத்தை அளிக்கும்படி வர அதனுடைய வேகத்தைக் குறைத்துத் தமது திருச்சடையிலே தரித்தருளியமையால் ஆன்மாக்கள் ஆனந்தக்கடலில் ஆழ்கின்றனர்.

அகங்காரத்தை அடக்கும் ஆற்றலுடைமையை இது குறிக்கின்றது.



## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

திருவிராகம், பண் - கௌசிகப்

கடைருமாலை நண்பகற்கூடி வல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணுங் கைதொழப்பாயுங் கங்கை செஞ்சடை
ஆரநீரொடேந்தி னுகளக்காவு சேர்மினே"

### திருவாசகம்

மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தாலவன் சடையிற் பாயுமது வெண்ணேடீ
சலமுகத்தாலவன் சடையிற் பாய்ந்தில னேற்றரணியெல்லாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ

### உபதேசகாண்டம்

திரைக்குநீர்க் கங்கையைச் செறிக்குந் தோற்றத்தால்
தரைப்படு முயிர்த்தொகை தமது சிந்தையைக்
கரைக்கு மானந்தமாக் கடலினுழ்வதே"

### உபவீதம் சிகை

வேதாந்தத்தால் வரும் சிவஞானப் பொருளாயுள்ளவரும் அதனைக் கொடுப்பவரும் தாமென்பதை அறிவித்தருளும் பொருட்டு உபவீதத்தைத் தரித்தருளினர், ஞானரூபியாயுள்ளவர் தாமென்பதை அறிவித்தற்காக ஞானக்குறியாகிய சிகையைக் கொண்டருளினர்.

### சிலம்பும் வீரக்கழலும்

பக்குவான்மாக்களைப் பேரின்ப வெள்ளத்தில் அழுத்துதற்கு ஊன்றிய திருவடியினும், அடியாருள்ளத்தில் கலந்து இன்பபூரணமாயிருக்கின்ற ஞானகுஞ்சித பாதத்தினும் திருவருட்பிரகாசம் பொருந்திய சிலம்பையும் வீரக்கழலையும் தரித்தருளியது ஆன்மாக்

களைப் பந்தித்துள்ள பாசத்தை நீக்கிப் பிறவித் துன்பத்தையறுத்து முத்தியைக் கொடுப்பவர் தாமென்பதையுணர்த்துவதற்காகும்.

### போற்றிப்பஃறொடை

"விட்டின்ப
வெள்ளத் தழுத்திவிடுந் தாளினு மடியா
ருள்ளத்தினும் பிரியாவெண் சிலம்பும் — கள்ளவினை
வென்றுபிறப் பறுக்கச் சாத்திய வீரக்கழலும்"

### சிவதருமோத்தரம்

பரிபுரமு மிருவினையும் பறித்தரு ளொன்றிரு
பதமும் பற்றி யொற்ற
பொருகழலுந் திருவடியிற் பொலிந்திலங்கப்
புடைதொழுவார் புலங்கடனைப்
பருகியவருள்ளக் கரியபரமலமழித்
தொழித்துப் பாசமெல்லாம்.

### கந்தபுராணம்

நெஞ்சலஞ் சலமரும் பிறவிநீடு வினையிற்
சஞ்சலஞ் சலமகன்ற தனதன்பர் குழுவை
அஞ்சலஞ் சலெனுமஞ் சொலனெவிஞ்சு சரண்மேற்
செஞ்சிலம்பொடு பொலங்கழல் சிலம்ப மிகவே"

சிவபெருமான் இவைகளைக் கொண்டருளியமை தமது பிரயோசனங்கருதியன்று. எதற்காகக் கொண்டருளினர் எனில், ஆன்மாக்கள் அஞ்ஞான வளர்ச்சியினுல் நாம் பிரமமென நினைத்து அகந்தை மமதைகொண்டு நரகத்திலாழாது பதியுண்மையறிந்து தம்மையடைந்துய்யும்படி கொண்டருளிய உண்மையாம்.



### சிவஞானசித்தியார்

உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற் றோன்றுங்
கருமமுமருளரன் றன்கரசரணுதி சாங்கம்
தருமருளுபாங்க மெல்லாந் தானருடனக் கொன்றின்றி
யருளுருவுயிர்க் கென்றேயாக் கினனசிந்தனன்றே.

### கந்தபுராணம்

ஆதனைற்றனை வியப்பதற்கன்ற வையணித
னீதலாதொரு திறமுளதியா வருமெவர்க்கு
நாதனேயிவ னென்றுதன் பாங்கரே நண்ணித்
தீதெலாமொரீஇ முத்திபெற்றுய்ந் திடுஞ்செயலே.

### ஆவாகனக் கிரமம்

பரமசிவனை ஆவாகனஞ் செய்யுமிடத்து மூலாதாரத்திலிருந்து பிரகாசிக்கின்ற பிராசாதசத்தி மயனுகத்தன்னைப் பாவித்துப் பிராசாதமந்திர செபானுஷ்டானக் கிரமமாகவே ஆவாகனஞ் செய்தல் வேண்டும். அது பலவகைப்படும். அவற்றுள் சோடசகலைப் பிராசாதம் விஷேடமுடையது.

* அது கோஷகலையோடு கூடிய மேதாகலை, இரசகலை, விஷகலை, விந்துகலை அர்த்தசந்திரகலை, நிரோதிகலை, நாதகலை, நாதாந்தகலை, சத்திகலை, வியாபினிகலை, வியோமரூபாகலை, அநந்தகலை, அநாதாகலை அநாசிருதாகலை, சமனுகலை, உன்மனுகலை எனப் பதினுறு பகுப்புக்களையுடையது.

முதலில் புஷ்பாஞ்சலியை மூலாதாரந்தொடங்கிக் கிரமமாக உயரக்கொணர்ந்து இருதயத்தானத்தில்

---

* இவற்றின் விளக்கத்தை பிரசாதாதீப வுரையாலும் பிராசாதசட்சுலோகி வியாக்கியானத்தாலும், அதற்குச் சங்கரபண்டிதர செய்த தமிழுரையானுமறிக.

நிறுத்தி அகாரத்தை விட்டுப் பிரமத்தியாகஞ் செய்து, மேல் கண்டத்தானத்தில் நிறுத்தி உகாரத்தைவிட்டு விஷ்ணுத்தியாகஞ் செய்து, அதன்மேல் தாலுத்தானத் தில் நின்று மகாரத்தை விட்டு உருத்திரத் தியாகஞ் செய்து, புருவநடுவில் நின்று விந்துவை விட்டு ஈசு வரத்தியாகஞ் செய்து, பிரமரந்திரத்தில் நின்று நாதத்தைவிட்டு சதாசிவத்தியாகஞ் செய்து, மூலமந் திரத்தைத் துவாதசாந்தம்வரை கொண்டுபோய் துவாத சாந்தத்தில் நின்று உன்மனி யந்தத்திலிருக்கும் பரம சிவத்தில் பாவனையினாலே யொருமைப்பட்டு இரண்டற் றதாகத் தியானித்துச் சிருட்டிக்கிரமமாகத் துவாத சாந்தத்தில் நின்றும் சூரியன்போல ஒளியுள்ளதாகத் தியானித்து நெற்றிவரையுங் கொணர்ந்து கோடிசந்தி ரர்களது ஒளியுள்ளதாகவும் குறுக்கே அமிர்தபிண்டம் போன்று வெண்ணிறமாகவும் தியானித்து வலமூக்கு வாயிலாக இரேசக பாவனையினாலே புறப்பட்டு புஷ் பாஞ்சலியினுள் வந்ததாகப் பாவித்து இலிங்கத்தில் ஆவாகனம் செய்க. *

### விளக்கம்

ஆவாகனமாவது பூசையின் பொருட்டுச் சிவபெரு மானை இலிங்கம் முதலியவற்றில் வரவழைத்து அபி முகமாகச் செய்வதென்னும் பாவனையாகும்.

எங்கும் வியாபித்திருக்கும் கடவுளை ஆவாகனஞ் செய்வது எங்ஙனமெனில் விறகுமுழுவதும் நிறைந்தி

* ஆவாகனம் தாபனம் சந்நிதானம் சந்நிரோத னம் அவகுண்டனம் தேனுமுத்திரை பாத்தியம் ஆச மனீயம் அருக்கியம் புஷ்பதானம் தூபம் தீபம், நைவேத்தியம் பானீயம் ஜபசமர்ப்பணம் ஆராத்திரிகம் என்பன சோடசோபசாரங்கள்.



ருக்கும் நெருப்பைக் கோலினாற் கடைய அது ஓரிடத் திலே பிரகாசித்தல்போல எங்கும் நிறைந்திருக்கும் கடவுளை ஓரிடத்தில் சிரத்தையுடன் அழைத்து அபிமுக மாகச் செய்த லென்க *

பிரதிட்டாகாலத்திலே சர்வசங்கார காலமளவாக சிவலிங்கத்தில் சாந்நித்திய மாதற்காகச் செய்யப்படும் சீவந்நியாசம் சிற்பிரகாசாவாகனம் எனவும், தினந் தோறும் பூசாகாலத்தில் சிவலிங்கத்தில் எழுந்தருளி யிருக்கும் சதாசிவமூர்த்தியினுடைய நான்கு முகங் களிலும் வியாபித்திருக்கும் ஈசானமுகம் தன்னைப்பாக் கும்படி செய்வது அபிமுகீகரண ஆவாகனமெனவும், ஆவாகனம் இருவகைப்படும்.

மூலமந்திரத்தினாற்றரிசிக்கப்பட்ட பரிபூரணத்தை ஆன்மாவானது சிவப்பிரகாசமாகிய அருளினால் அறிந்து அதிலழுந்துதலே இதனுண்மையாகும்.

### சதாசிவரூபம்

இப்படித் தரைமுதற் சமனையீறுய்ச்
செப்ப வியாபித்திருக்கும் பரமசிவனது
பொருவிலுயர் பரிபூரணந் தன்னை
யறிவிலழுந் துதலாவா கனமே''

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருக்குறுந்தொகை

''அண்டமாரிருளூடு கடந்தும்பர்
உண்டுபோலு மொரொண் சுடரச்சுடர்
கண்டிங்காரறி வாரறிவா ரெலாம்
வெண்டிங் கட்கண்ணி வேதியனென்பரே''

*இதனை காமிகாகமம் காமிகதந்திரசாரம் முதலிய வற்றுனறிக.

"என்னிலாரு மெனக்கினி யாரில்லை
யென்னிலும் மினியானொரு வன்னுளன்
என்னுளே யுயிர்ப்பாய்ப் புறம்போந்துபுக்
கென்னுளே நிற்குமின்னம் பரிசனே"

## தாபனுதி விதி

தயாநிதியே, அடியேனுக்கு அனுக்கிரகஞ் செய்யு நிமித்தம் இவ்விலிங்கத்தில் எழுந்தருளியிருக்கவேண்டு மென்று அன்புடன் செய்யும் பாவனையேயாம். *

ஆன்மா சிவபெருமானை அருளினலறிந்து அதில் அழுந்தலை நிலைபெறச் செய்தலே இதன் பாவனையாகும்.

## சதாசிவரூபம்

அலையாதழுந்த நிலைபெறல் தாபனம்.

## சந்நிதானம்

சந்நிதானமானது, ஆன்மாவின் அறிவு சிவபெருமானது பரிபூரண குணத்திலும், சிவபெருமானது பரிபூரணத் தன்மையானது ஆன்ம அறிவிலும் ஒன்றை யொன்று பிரியாதபடி ஆண்டானும் அடிமையுமாக நிற்றலாம்.

## சதாசிவ ரூபம்

இவன் றனதறிவு சிவன் பூரணத்திலுஞ்
சிவன் பூரணத்துவ மிவன்றன தறிவிலும்
ஒன்றை யொன்றகலா துறவு செய்திருப்ப
தொன்றியசந் நிதான மென் றுரைப்பரே.

* தத்துவமூர்த்திப் பிரபாவத்திலும் காண்க.



## திருநாவுக்கரசு நாயனர்

### திருக்குறுந்தொகை

நங் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன் னடியேனையுந் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே.

## சந்நிரோதனம்

சந்நிரோதனமானது, பகவானே, எப்பொழுதும் என்னிடத்தில் அனுக்கிரகம் வைத்திருக்க வேண்டும், என்னும் மனோபாவனையேயாம்.

ஆன்மாவிடத்துப் பொருந்திய அறிவு எக்காலத்தும் நீங்காதபடி சிவத்தி லொடுங்குத லென்னும் உண்மையாகும்.

## சதாசிவ ரூபம்

இவனிடத்துறு மறிவென்று மொழியா
தமைவதுதானே சந் நிரோதனமே.

* பரமசிவனை ஆதரவுடன் பூஜகருக்கு எதிர்முகமாக இருக்கச் செய்வது, இங்கு ஆவாகன மென்று

* நிற்பனவும் நடப்பனவும் சயனிப்பனவுமாகிய இலிங்கங்களும், மகேசுரபேதமாகிய இருபத்தைந்து விக்கிரகங்களும் பூசைபண்ணும்போது சுகாசனமாகவே இருந்து அப்பூசையை ஏற்றுக் கொள்ளும்.

### சைவசமயநெறி

இருக்குஞ் சயனமியக்க நிலையு
மருச்சனை செய்யும் போதன்பால்.
இருப்பர்ம கேசரிருபத்தை வருள்ளு
மருச்சனை செய்யும் போதன்பால்.

கூறப்படுகிறது. பூஜகரால் அன்புடன் கூடிய ஒரே மனதுடன் தனக்கு லக்ஷியமான மூர்த்தியினிடத்தில் சிவபெருமானை இருக்கச் செய்தல் தாபனமாகும். உலகத்திற்கு நாதனே, நான் உம்மைச் சேர்ந்தவன். என்னை அனுக்கிரகிக்க வேண்டும் என்று தன்னை ஆட்கொள்ளுதலைத் தெரிவிப்பது சாந்நித்தியமாகும். பரமேசுரருக்கு வியாபகத் தன்மை இருந்தபோதிலும் அந்த சாந்நித்தியமானது விரோதமாகாது. பூசை முடியும் வரை வேறிடத்திற்குப் போகக் கூடாது. பூசையை ஏற்றருளவேண்டு மென்பதுன நிரோத மெனப்படும். பரமேசுவரருக்கு வியாபகத் தன்மை இருந்த போதிலும் இத்தகைய நிரோதனமானது பூஜகன் பொருட்டு வேண்டப்படுகிறது. எண்ணிறந்த காரணங்களை உடையராகவும், சின்மயராகவும், எங்கும் நிறைந்திருப்பவராகவும் இருக்கும் பரமேசுவரரை அபக்தர்களுக்கு அறிவிக்காமல் மறைத்தலே அவகுண்டனமாகும். இவ்வாறு சோம்சம்பு பத்ததியிற் கூறப்பட்டது.

ஆவாகனுதிகளேச் சத்தியோ சாதாதி
நாவிற் சொலிச்செய் நயந்து.
இருதயத் தினுஞ் மிவை புரிதலாகும்
இருதய மெங்கும் பொதுவென்றெண்.

என வரும் சைவசமயநெறிக் குறள்களால் ஆவாகனுதிகளுக்கு மந்திர முணரப்படும்.

"மகாதேவரே; உமக்கு நல்வரவாகுக" என்று விஞ்ஞாபித்து, பின்னர் "குழந்தாய்; நன்கு வந்தோம்" என்று பரமசிவனுற் சொல்லப்பட்டதாக நினைத்து, "சர்வலோகைகநாயகராகிய சுவாமின்; சிறியேன் செய்யத் தொடங்கிய பூசை முடியும் வரையும் இவ் விலிங்கத்திலே பிரீதியோடு சாந் நித்தியராய் இரும்" என்று



விஞ்ஞாபனம் பண்ணி, ஈசானம் முதலிய ஐந்து சிரசுகளிலும் சுவாக தார்க்கியங் கொடுத்து, காளகர்ணிமுத்திரையும், லிங்க முத்திரையும், நமஸ்கார முத்திரையுங் கொடுக்க.

## இருதயாதி நியாசம்

பெருவிரலோடு கூடிய சிறுவிரலினுலே இருதயத்திலே ஓம்ஹாஃ இருதயாய நம" என்றும், பெருவிரலோடு கூடிய அணிவிரலினுலே திருமுடியிலே ஓஃ ஹீம் சிரசே நம," என்றும், பெருவிரலோடு கூடிய நடுவிரலினுலே சிகையிலே 'ஓம் ஹூம் சிகாடுயெ நமஃ , என்றும், நியசித்து, இரண்டு சுட்டு விரல்களினுலும் கழுத்தை முலே நடுவாக 'ஓம் ஹைம் கவசாய வௌஷட்' என்று சுற்றி, அணிவிரல்களினுலே உள்ளங்கைகளில் 'ஓம்ஹஃ அஸ்திராயபட்' என்று நியசித்து, 'ஓம் ஹாம் சிவாய நம' என்று ஐக்கியஞ் செய்து, சுட்டுவிரல் நீட்டிய கையினுல் ஓம் ஹைம், கவசாய வௌஷட், என்று தேனுமுத்திரையும், மகாமுத்திரையுங் கொடுத்துப் பரமீகரணம் பண்ணி பஞ்சமுகிமுத்திரையுங் கொடுக்க.

பரமேசுவரருடைய சிற்சத்தியானது இருதயமாகவும், அஷ்டைசுவரியமானது சிரசாகவும், பிறருக்கு உட்படாத சிவத்தன்மையானது எல்லாவற்றிற்கும் மேலாக இருக்கிற சிகையாகவும், சத்துருக்களின் ஆயுதங்களால் பேதிக்க முடியாத தேஜசானது கவசமாகவும், பிறரால் சகிக்கமுடியாத பிரதாபமானது விக்கினங்களைப் போக்கக்கூடிய அஸ்திரமாகவும் கூறப்படுகின்றன.

## பாத்தியாதி

விசேஷார்க்கிய பாத்திரத்தை எடுத்து இடக்கையில் வைத்துக்கொண்டு வலக்கையின் மிருக முத்திரை

யினாலே * ஓம் ஹாம் சிவாயநம என்று மகேசுரமாகிய திருவடிகளில் வலமிடமாக ஒவ்வொருதரம் ஞானசத்தி காரியமாகிய பாத்தியத்தைக் கொடுக்க.

ஓம் ஹாம் சிவாய சுவதா என்று சதாசிவமாகிய ஈசானாதி ஐந்து திருமுகங்களிலும் மும்மூன்றுதரம் கிரியா சத்தி காரியமாகிய ஆசமனம் கொடுக்க.

ஓம் ஹாம் சிவாயசுவாகா என்று நிஷ்களமாகிய ஈசான முதலிய ஐந்து சிரசுகளில் ஒவ்வொருதரம் இச்சாசத்தி காரியமாகிய அருக்கியங் கொடுக்க.

### சதாசிவரூபம்

பாத்தியா சமனார்க்கியம் பாழதகல்
ஆன்மசுத்தி நிமித்திமாகவும்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### பண் - பியந்தைக் காந்தாரம்

தோடொருகாதனாகி யொருகாதிலங்கு
குரிசங்குநின்று புரளக்
காடிடமாகநின்று கனலாடுமெந்தை
யிடமாய காதனகர்தான்
வீடுடனெய்துவார்கள் விதியென்றுசென்று
வெறிநீர் தெளிப்பவிரலா
நாடுடனாடுசெம்மை யொலிவெள்ளமாரு
நனிபள்ளிபோலு நமர்காள்.

* முத் - சந்தோஷம், திரா - வேகமாகச் செல்லல். எனவே தேவரை மகிழ்வித்து அசுரரைத் துரத்துதல் என்பது கருத்து. முத்திரைகளின் லட்சணங்களை முத்திரா லட்சணம் என்னும் நூலிற் காண்க. குருகுல வெளியீடு க.



மூல மந்திரத்தை வெளஷடந்தமாகவுச்சரித்து அறுகு புஷ்பம் அட்சதைகளைச் சாத்துக. வாமகரத்தினால் மணி அடித்து ஓம் ஹாம் சிவாய சுவாகா என்று தூபதீபம் ஆசமனார்க்கியம் கொடுக்க. பாவனாபிஷேகஞ் செய்து விசேஷார்க்கியம் புரோட்சித்து பாத்தியாசமனார்க்கியம் கொடுத்துத் திருவொற்றுடை சாத்துக.

வாசனை பொருந்திய சந்தனம் அக்ஷதை அறுகு புஷ்பம் பொற்கௌபீனம் மேகலாபரணம் உபவீதம் குண்டலம் ஆபரணம் வஸ்திரம் முதலியவைகளைப் பக்தியுடன் சாத்துக.

### சந்தனம்

அகில், கற்பூரம், புனுகு முதலிய வாசனைத் திரவியங்கள் கலந்து, அருட்சத்திமயமான சந்தனத்தைச் சாத்துகின்றவர்கள் பிரபஞ்ச வைராக்கியமுடையவர்களாய்ச் சிவலோகத்தைச் சேர்வார்கள்.

மெய்யன்போடு சந்தனக் குளம்பு சிவபெருமானுக்கு நியதியாகச் சாத்தியவருடைய பேற்றை மூர்த்தி நாயனாருடைய சரித்திரத்தால் அறிக.

இது திருவருட் சத்திபதிதலென்னும் பாவனையாம்.

## திருநாவுக்கரசு நாயனார்

### திருத்தாண்டகம்

ஆளான வடியவர்கட் கன்பன்றன்னை
யானைஞ்சு மாடியை நானபயம்புக்க
தாளானைத்தன் னொப்பாரில்லா தானைச்
சந்தனமுங் குங்குமமுஞ் சாந்துந் தோய்ந்த
தோளானைத் தோளாத முத்தொப்பானைத்
தூவெளுத்த கோவணத்தை யரையிலார்த்த
கீழானைக் கீழ்வேளூராளுங் கோவைக்
கேடிலியை நாடுமவர் கேடிலாரே.

## புஷ்பதானம்

ஓம்ஹ்ராம் சிவாய வௌஷட் என்னும் மந்திரத்தால் புஷ்பம், அக்ஷதை, அறுகு இவைகளைத் திருமுடியிற் சாத்துதல் சுத்தசைதன்னியமான ஆனந்தம் பெருகுதற்காம்.

## சதாசிவ ரூபம்

நறுமலரதனை நல்விட்டின்பங்
குறுகுதலேதுவாகவுங் கொடுத்து.

## சாத்துவிக புஷ்பம்

வெண்ணிறப் புஷ்பங்கள் சாத்துவிக குணமுடையன. அவைகள், வெள்ளெருக்கு, வெள்ளலரி, பிச்சி, கொக்கிறகு மந்தாரை, புன்னை, நந்தியாவர்த்தம், மல்லிகை, முல்லை முதலியவைகளாம்.

இப் புஷ்பங்களால் சாத்துவிககாலமாகிய உஷக்காலம், சாயரட்சை, அர்த்தயாமம் என்னுங் காலங்களில் அருச்சித்தவர்கள் மோக்ஷத்தையடைவார்கள்.

## இராசத புஷ்பம்

செந்நிறப் புஷ்பங்கள் இராசத குணமுடையன. அவை - செந்தாமரை, செங்கழுநீர், செவ்வலரி, செங்கடம்பு முதலியனவாம்.

இப்புஷ்பங்களால் இராசத காலமாகிய மத்தியானத்தில் அருச்சித்தவர்கள் போகத்தையடைவார்கள்.

## இராசத சாத்துவிக புஷ்பம்

பொன்னிறமுள்ள கொன்றை, சண்பகம், செருந்தி, கோங்கு முதலிய புஷ்பங்கள் இராசத சாத்துவிக குணமுள்ளனவாம். இப்புஷ்பங்களால் இராசத சாத்துவிக



காலமாகிய பிராதக் காலத்தில் அருச்சிப்பவர்கள் போக மோக்ஷங்களை அடைவார்கள்.

## இராசத தாமச பத்திரங்கள்

வில்வம், துளசி, அறுகு, மருக்கொழுந்து, மாசிப் பச்சை, திருநீற்றுப் பச்சை முதலியவைகளாம். இப் பத்திரங்களால் அருச்சித்தவர்கள் போகமோக்ஷங்களை அடைவார்கள்.

நீலோற்பலம் நீங்கலான நீலநிறப் புஷ்பங்கள் தாமத குணத்தையுடையன. ஆகையால், அவை பூசைக்குத் தகுதியற்றன.

## அதிதேவர்கள்

கோங்கம்பூவில் சரசுவதியும், அலரிப்பூவிற் பிரமாவும், வன்னியில் அக்கினியும், நந்தியாவர்த்தையில் நந்திதேவரும், புன்னைப் பூவில் வாயுவும், எருக்கில் சூரியனும் சண்பகப்பூவில் சுப்பிரமணியரும், வில்வத்தில் இலக்குமியும், கொக்கிறகம் பூவில் விட்டுணுவும், மாவிலிங்கையில் வருணனும், மகிழில் சரசுவதியும், வாகையில் நிருதியும், சாதிப் பூவில் ஈசானனும், செங்கழுநீரில் சூரியனும், குமுதம் பூவிற் சந்திரனும், மந்தாரையில் இந்திரனும், மதுமத்தையில் குபேரனும், நாயுருவியில் யமனும், தாமரைப் பூவில் சிவனும், அறுகில் விநாயகரும், நீலோற்பலத்திலும் ஏனைய வாசனைப் புஷ்பங்களிலும் உமாதேவியாரும் அதிதேவதைகளாய் இருப்பார்கள். ஆகையால், இவை முதலிய பத்திர புஷ்பங்களை உண்டுபண்ணியவர்களும், விதிப்படி எடுத்துக் கொடுத்தவர்களும் அவைகளால் பூசித்தவர்களும் போக மோக்ஷங்களை அடைவார்கள் என்று உண்மை நூல்கள் கூறுகின்றன.

## பலன்

அக்ஷதை சத்துருச்செயத்தையும், அறுகு சகோதரருக்குச் செய்த குற்றத்தையும், எட்பூ பிரமகத்தி

தோஷத்தையும், கொன்றைப் பூ மாதாவுக்குச் செய்த குற்றத்தையும், வெள்ளெருக்கம் பூ அன்னிய ஸ்திரீகளைச் சேர்ந்த தோஷத்தையும், நீலோற்பலம் வாக்குத் தோஷத்தையும், குங்குமப் பூ நவக்கிரக பீடையையும், வில்வம் பொய் சொன்ன பாவத்தையும், கோங்கம் பூ கள்ளுண்ட பாவத்தையும், கத்தரி குட்ட ரோகத்தையும், துளசி வறுமையையும், தும்பைப் பூ கோகத்தி தோஷத்தையும், பலாசம் பூ பொன் திருடிய தோஷத்தையும் நெய்தலும், நெல்லியும் பல வகை ரோகத்தையும் சாந்தி செய்யுமென்று சைவபூஷணம் முதலிய நூல்கள் செப்புகின்றன.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

பண் — இந்தளம்

நொச்சியேவன்னி கொன்றைமதி கூவிளம்
உச்சியே புனைதல்வேடம் விடையூர்தியான்
கச்சியேகம்பம் மேவிய கறைக்கண்டனை
நச்சியே தொழுமினும் மேல்வினை நையுமே.

பண் — ஸ்ரீகாமரம்

வாசநலஞ் செய்திமையோர் நாடோறு மலர்தூவ
வீசனெம் பெருமானு ரினிதாகவுறை யுமிடம்
யோசனை போய்ப்பூக் கொணர்ந்தங் கொருநாளுமொழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

குறுந்தொகை

விண்டமாமலர் கொண்டு விரைந்துநீர்
அண்டநாய கன்றன் னடிசூழ் மின்கள்
பண்டு நீர்செய்த பாவம் பறைந்திடும்
வண்டுசேர் பொழில் வான்மி யூரிசனே.

---

பறைந்திடும் - பாறச் செய்யும்.



### கௌபீனம்

நான்கு வேதங்களையும் கலைகளையுங் கௌபீனமாக இறைவன் அணிந்தருளினர்.

### திருவாசகம்

என்னப்ப னெம்பிரா னெல்லார்க்குந் தானீசன்
துன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது வென்னேடீ
மன்னுகலை துன்னுபொருள் மறைநான்கே வான்சரடாத்
தன்னையே கோவணமாச் சாத்தினன்காண் சாழலோ

### உபவீதம்

விதிப்படி செய்யப்பட்ட வேதாந்தமாகிய பூணூலைச் சிவபெருமானுக்குத் தினந்தோறும் சாத்துகின்றவர்கள் மறுபிறப்பில் வேத பண்டிதராவார்கள் என்று சிவ தருமோத்தரம் செப்பும்.

## திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள்

பண் — காந்தாரம்

முத்தேர் நகையாளிடமாகத் தன்மார்பில் வெண்ணூல்பூண்டு
தொத்தேர் மலர்சடையில் வைத்தாரிடம்போலுஞ் சோலைசூழ்ந்த
அத்தேனளி யுண்களியாலிசை முரலவாலத் தும்பி
தெத்தேயெனமுரலக் கேட்டார்வினை கெடுக்கும் திருநணுவே.

### வஸ்திரம்

மிருதுவான இழைகளையுடையதும், வெண்மை நிறமுடையதுமாகிய பட்டு வஸ்திரத்தை அன்புடன் சாத்தியவர்கள் சிவலோகத்தை யடைந்து ஒவ்வோரிழைக்கு ஆயிரம் கற்பகாலம் வாழ்வார்கள்.

இது திரோதானசத்தி நீங்குதலென்னும் பாவனையாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருநேரிசை

கட்டிட்ட தலைகையேந்திக் கனலெரி யாடிச்சீறிச்
சுட்டிட்ட நீறுபூசிச் சுடுபிணக் காடராகி
விட்டிட்ட வேட்கையார்க்கு வேறிருந் தருள்கள்செய்து
பட்டிட்ட வுடையராகிப் பருப்பத நோக்கினரே.

### புஷ்பாஞ்சலித்திரயம்

ஓம் ஹா° ஹௌம் ஆத்ம தத்துவாதி பதயெசிவாயநமஃ,
" " வித்தியா தத்துவாதி பதயெ சிவாயநமஃ,
" " சிவதத்துவாதி பதயெ சிவாயநமஃ ,,
என்று புஷ்பாஞ்சலிதிரயங் கொடுத்துத், திரும்பவும் மூலத்தாலருச்சிக்க.

### விளக்கம்

ஆன்மா ஆன்மபோதம் நீங்கிச் சிவபோதம் பதியுஞ் சமயத்தில் மனம் வாக்குக் காயத்தால் வந்த பாபமும், ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்தம் என்னும் வினைகளும் நீங்குதல் என்னும் பாவனையாகவே தத்துவத் திரயம் சாத்துவதாம்.

### சதாசிவரூபம்

நீங்கருங் கருமசுத்தி நிமித்தந்
நீங்கறுந் தத்துவத் திரயஞ்சாத்தி

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### பண் — வியாழக்குறிஞ்

அவ்வினைக் கிவ்வினையாமென்று சொல்லு மஃதறிவீர்
உய்வினை நாடாதிருப்பது முந்தமக் கூனமன்றே
கைவினைசெய் தெம்பிரான் கழல்போற்றுது நாமடியோம்
செய்வினைவந் தெமைத்தீண்டப் பெருதிரு நீலகண்டம்



## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திரு நேரிசை

நாயினுங் கடைப்பட்டேனை நன்னெறி காட்டியாண்டாய்
ஆயிரமரவ மார்த்த வமுதனேய முதமொத்து
நீயுமென் நெஞ்சினுள்ளே நிலாவினுய் நிலாவிநிற்க
நோயவை சாருமாகினேக்கி நீயருள் செய்வாயே.

### மாலை

மாலை பிரணவ வடிவமானது. ஒவ்வொரு மாலையும் ஒரே நிறப் புஷ்பங்களாலே தொடுக்கப்படுதல் வேண்டும். அது உத்தம மாலை யெனப்படும். பல நிறப் புஷ்பங்களைக் கலந்து தொடுத்த மாலை மத்திமமாம். கருநிறப் புஷ்பங்களையும் இலைகளையும் கலந்து தொடுக்கப்பட்ட மாலை அதமமாம்.

சிவபெருமானுக்குக் கொன்றை முதலிய புஷ்பங்களால் தொடுக்கப்பட்ட மாலைகளைச் சாத்தியவர்கள் சிவலோகத்தை யடைந்திருப்பார்கள்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### பண் — காந்தாரம்

அண்டமா யாதியாயருமறை யோடைம் பூதப்
பிண்டமா யுலகுக்கோர்பெய் பொருளாம்பிஞ்ஞகனைத்
தொண்டர்தா மலர்தூவிச்சொன் மாலைபுனைகின்ற
இண்டைசேர் சடையானையென் மனத்தே வைத்தேனே.

### திருத்தாண்டகம்

நிலைபெறுமா றெண்ணுதியே னெஞ்சே நீவா
நித்தலுமெம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் னலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்துபாடித்

தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கராசய போற்றி போற்றி யென்றும்
அலைபுனல்சேர் செஞ்சடையெம் மாதி யென்று
மாரூரா என்றென்றே அலறு நில்லே.

## கண்டாநாதம்

சிவபோகத்தையடைந்த ஆன்மா மீண்டும் பிரபஞ்சத்தை நோக்காவண்ணம், அஸ்திராய நம, என்று மணியடித்துத், தூபம் தீபம் ஆசமனம் அருக்கியங்களைக் கொடுத்து மனோரதமுத்திரையுங்காட்டுக.

விளக்கம்: பூஜாகாலங்களில் அடிக்கும் மணியில் தேவர்கள் வாசஞ்செய்தலால் அதை நாபிக்கு மேல் பிடித்து அடித்தல் வேண்டும், என்று தந்திரசாரம் செப்புகின்றது.

இயக்கர் இராக்கதர், பிசாசர், அசுரர் முதலானவர்கள் மணிச்சத்தத்தைக் கேட்டு அகலுவரெனவும், தேவர்கள் மகிழ்ச்சியுடன் சாந்நித்தியமாவார்களெனவும் காமிகாகமம் செப்புகின்றது.

## தூபபேதமும்பலனும்,

தூபமானது உத்தமதூபம், மத்திமதூபம், அதமதூபம் எனமூவகைப்படும் உத்தமதூபம் சாத்துவிககுணசம்பந்தமானது. அகிற்பொடி ஒரு கூறும், குங்குலியம் இரு கூறும், சந்தனப் பொடி மூன்று கூறும், சிறிது கற்பூரப்பொடியும் தேனுங் கூட்டியிடுவது உத்தமதூபமாகும், மந்திமதூபம் இராசதகுணசம்பந்தமானது. இலாமிச்சம் வேர்ப்பொடி ஒரு கூறும், குங்குலியம் இரு கூறும், சந்தனப்பொடி மூன்று கூறும் நெய்யும் தேனுங் கூட்டியிடுவதுமத்திம தூபமாகும். அதமதூபம் தாமசசம்பந்தமானது குங்குலியமும் நெய்யுங் கூட்டியிடுவது அதமதூபமாகும்.



தூபபாத்திரத்தின் முகத்தில் அக்கினியும், தண்டத்தில் ஈசுவரனும், பாதத்தில் பிரசாபதியும் அதிபர்களாக இருப்பார்கள். கிரியாசத்தி ரூபமாகிய தூபத்தைச் சிவசன்னிதானத்திலிடுவதனால் வரும் உண்மையைக்கூறுமிடத்து, ஆன்மாவை மறைத்திருக்கும் ஆணவமல சத்தியாகிய அறியாமையை கிரியாசத்தியால் நீக்குதலென்னும் உண்மையாம்.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்

### பண் — பழந்தக்க ராகம்

தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர் கொண்
டங்கையாற் றொழுதேத்தவருச் சுனற்கன்றருள்செய்தான்
செங்கயல் பாய்வயலுடுத்தசெங் காட்டங்குடியதனுட்
கங்கைசேர் வார்சடையான்கணப தீச்சரத்தானே.,

### பண் — கௌசிகம்

வெந்தகுங்குலியப் புகைவிம்மவே
கந்தநின்றுலவுங்களிப் பாலையார்
அந்தமும் மளவும் மறியாத தோர்
சந்தமாலவர் மேவிய சாந்தமே.,

## தீபபேதமும் பலனும்

சிற்சத்தியின் வாசமாய் ஞானவிளக்கமாயிருப்பது தீபம். சிவசந்நிதானத்திலே தீபமேற்றி வருபவர்களுக்குச் சிவபெருமான் அபமிருத்து நிவாரணத்தையும், பாப நீக்கத்தையும் ஞானஅறிவையும் இட்டசித்திகளையுங் கொடுத்தருளுவர். அது உத்தமதீபம், மத்திம தீபம், அதமதீபம் என மூவகைப்படும்.

கபிலைப் பசுவின் நெய்யால் நிறைக்கப்பட்டதும் தாமரை நூல் வெள்ளெருக்கு நூல், பருத்தி நூல் என்பவற்றிலொன்றினால் இருபத்தோரிழையாக்கிக் கர்ப்பூரப் பொடி கூட்டித் திரி பண்ணப்பட்டதும், திரியிலெரியுஞ் சுடர் நான்கங்குலவள வுயரமாயிருப்பதும் சாத்துவிக குணத்தைப் பொருந்தியுள்ளதுமானது உத்தம தீபமாகும்.

மற்றைய பசுக்களின் நெய்யால் நிறைக்கப்பட்டதும், பதினாறிழையாக்கிக் கருப்பூரப்பொடி கூட்டப்பட்ட திரியையுடையதும், திரியிலெரியுஞ் சுடர் மூன்றங்குல வுயரமாயிருப்பதும், இராசத குணத்தைப் பொருந்தியுள்ளதுமானது மத்திம தீபமாகும்.

ஆட்டு நெய் அல்லது எண்ணெயால் நிறைக்கப்பட்டதும், பதினான்கிழையாலேனும் ஏழிழையாலேனுங் கருப்பூரப்பொடி கூட்டிப் பண்ணப்பட்ட திரியையுடையதும், திரியிலெரியும் சுடர் இரண்டங்குலவுயரமாயிருப்பதும் தாமத குணத்தைச் சார்ந்துள்ளதுமானது அதம தீபமாகும்.

மரக்கொட்டைகளிலிருந்து எடுக்கப்பட்ட நெய்யும், எருமை நெய்யும் கந்தைத் துணியும் சிவதீபங்களுக்கு விலக்கப்பட்டனவாம்.

சதாசிவரூபம்

“ஞான விளக்க நண்ணு தற்பொருட்டுத்
தூபதீபந் துதைந்தினி தளித்து”

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திருநேரிசை

விளக்கினார் பெற்றவின்ப மெழுக்கினாற் பதிற்றியாகும்
துளக்கினன் மலர் தொடுத்தாற் றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார் பேறு சொல்லின் மெய்ந்நெறி ஞானமாகும்
அளப்பில கீதஞ்சொன்னார்க் கடிகடா மருளுமாறே,



மெய்யன்போடு தூபமிட்டவரது பேற்றைக் குங்குலியக்கலய நாயனார் சரித்திரத்தாலும், தீபமேற்றியவர் பெருமையை நமிநந்தியடிகள் சரித்திரத்தாலும் பெரிய புராணத்திலறிக.*

## மனோன்மனி

விந்து சக்தியின் அம்சமாக உமாசத்தியும், அவரின் அம்சமாக அம்பிகையும், அவரின் அம்சமாகக் கணாம்பிகையும், அவரின் அம்சமாக ஈசுவரியும், அவரின் அம்சமாக மனோன்மனியும் தோன்றினர்.

மனோன்மனி சிவமூர்த்தியும், பக்குவான்மாக்களுடைய மலத்தை நீக்கிச் சத்திநிபாதத்தைச் செய்து சிவத்தோடு சேர்க்கின்றவரும், சதாசிவமூர்த்திக்குச் சத்தியுமாயுள்ளவர்.

---

* சந்தனம், பழம், கிழங்கு, புஷ்பம், அன்னம் முதலானவை பிருதுவி சம்பந்தமாகையால் பார்த்திவோபசாரம் எனப்படும். திருமஞ்சனம், பால், தயிர் முதலானவை சலசம்பந்தமாகையால் சலோபசாரம் எனப்படும். இரத்தினதீபம், கருப்பூரம் முதலானவை அக்கினி சம்பந்தமாகையால் தைஜசோபசாரம் எனப்படும். தூபம், சாமரை, விசிறி முதலானவை வாயு சம்பந்தமாகையால் வாயவ்யோபசாரம் எனப்படும். மணி தோத்திரம், வாத்தியம் முதலானவை ஆகாச சம்பந்தமாகையால் ஆகாசோபசாரம் எனப்படும். இவை பஞ்சோபசாரங்கள் என அறிக.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திருக்குறுந்தொகை

ஏயிலானை யென்னிச் சையகம் படிக்
கோயிலானைக் குணப் பெருங் குன்றினை
வாயிலானை மனோன்மணியைப் பெற்ற
தாயிலானைத் தழுவு மென்னுவியே.

## மாணிக்கவாசக சுவாமிகள்

உடையாளுன்ற நடுவிருக்கு முடையாணடு வுணியிருந்தி
யடியே னடுவுளிருவீரு மிருப்பதாறு லடியேனுன்
னடியார் நடுவுளிருக்கு மருளைப் புரியாய் பொன்னம்பலத்தெம்
முடியா முதலேயென் கருத்து முடியும் வண்ண முன்னின்றே.

சிவபெருமானுக்கு வாம பாகத்தில் ஓம் ஸ்ரீம் ஹ்றீம் மனோன்மன்யாசனாயநம: என்று பூசித்து அதன்மேலே மனோன்மனி மூர்த்தியைத் தியானித்து, ஓம் ஹ்றீம் மனோன்மனி மூர்த்தயேநம: என்று பூசித்து, ஓம் ஹ்றீம் மனோன்மன்யை நம: என்று அம்மூர்த்தியிலே மனோன்மனியை ஆவாகித்து ஒம் ஹ்றீம் மனோன்மனியை சுவாகா என்று அர்க்கியங் கொடுத்துச் சந்தனம் முதலியவற்றால் பூசிக்க.

மனோன்மனியானவர் சரசுவதியையும், இலக்குமியையும் இரு கண்களாக உடையவராய், நான்கு திருக்கரங்களிலும் செபமாலை, நீலோற்பலம், அபயவரதங்களை உடையவராய், பரஞானம், அபரஞானங்களாகிய இரு தனங்களை உடையவராய்த் தியானிக்கப்படுவர்.

### இலயாங்கம்

பின்பு சிவபெருமானுக்கு பஞ்சப் பிரம சடங்க மந்திரங்களினாலே சிரசு, முகம் முதலிய லயத் தானங்களிலே பூசை செய்து, மனசில் விரும்பியவைகளை விண்ணப்பம் செய்க.



போகாங்க பூசை, ஆன்ம நாயகராகிய சுவாமீ அடியேன் காமியத்தை விரும்பி ஆவரண பூசை செய்வதற்கு உத்தரவு தரவேண்டுமென்று விண்ணப்பித்து அனுமதி பெற்றுக்கொண்டு, ஓம் ஹாம் சிவாயநம என்று சிவனை ஒருமுறை பூசிக்க.

சர்வஞ்ஞத்துவம், நித்திய பரிபூரணம், அநாதி போதம், சுதந்திரம், அலுப்தசத்தி, அநந்தசத்தி என்னும் சிவபோகத்துக்கு அங்கமாகிய சுத்த குணங்களாறையும் ஆன்மா பெறுதலே மேலாகிய போகாங்க பூசை என்று ஞானரத்தினாவளி கூறுகின்றது.

### சதாசிவரூபம்

சட்குணந் தனக்குச் சார்தற்பொருட்டுப்
பொக்கமில் போகாங்கம் பூசித்து.

### பிரதமாவரணம்

ஐந்து சிரசுகளிலிருந்து ஈசானத்தை அங்குச முத்திரையாலெடுத்து, 'ஓம் ஹொம் ஈசானமூர்த்தாய நம, என்று ஈசான தளத்தில், "பளிங்கு நிறத்தையுடையவரும், உலக காரணரும், முக்கண்ணரும், ஞானசந்திரனைச் சடையிலணிந்தவரும், அழகும் பிரசன்னமுமுள்ளவரும், பார்வதியுடன் கூடினவரும், சூலத்தையும் அபயத்தையும் திருக்கரங்களிற் தரித்தவருமாக" ஈசான தேவரை தியானித்து ஆவாகித்துப் பூசிக்க.

ஐந்து திருமுகங்களிலிருந்து தற்புருஷத்தை அங்குச முத்திரையினாலெடுத்து 'ஓம் ஹெம் தற்புருஷவத்திராய நம' என்று கிழக்குத் தளத்திலே, "பொன்னிறத்தையும், பீதாம்பரத்தையும் உபவீதத்தையுமுடையவரும், மாதுளங்கனியும் உருத்திராக்ஷமாலிகையும்

தரித்த திருக்கரங்களையுடையவரும் கௌரியுடன் கூடியவரும் சடையில் இளம்பிறையைத் தரித்தவருமாக' தற்புருட தேவரைத் தியானித்து ஆவாகித்துப் பூசிக்க.

இருதயத்திலிருந்து அகோரத்தை அங்குச முத்திரையினுலெடுத்து 'ஓம் ஹூம் அகோர இருதயாய நம' என்று தெற்குத் தளத்திலே "மூன்று கண்களையும், திருமுடியிற் சந்திரனையும், சாந்தத்தையும், குண்டலாலங்காரத்தையும் கீரி நிறமான புருவம், மீசை, தாடி, கேசம், பல் இவைகள் பொருந்திய உக்கிரமுகத்தையும், கபாலம், சர்ப்பம், விருச்சிகமென்னும் ஆபரணங்களையும், வலத்திருக்கரங்களிற் சூலம், பரசு, வாள், தண்டம் என்னுமிவைகளையும் இடத்திருக்கரங்களில் கட்டுவாங்கம், கபாலம், பரிசை, பாசம் என்னுமிவைகளையுந் தரித்தவரும், சத்துருக்களை யழிப்பவரும், சூற்கொண்ட முகில் போலும் நிறமுள்ள கங்கையுடன் கூடியவரும் இட்டசித்திகளைக் கொடுப்பவருமாக," அகோர மூர்த்தியைத் தியானித்து ஆவாகித்துப் பூசிக்க.

குய்யத்திலிருந்து வாமதேவத்தை அங்குச முத்திரையினுலெடுத்து "ஓம் ஹிம் வாம தேவகுஃயாய நம" என்று வடக்குத் தளத்திலே, "சிவப்பு நிறத்தையும், நறுமணம் பொருந்திய மாலை வஸ்திரம் உபவீதம் என்பவற்றையும், உயர்ந்த மூக்கையும், சிவந்த தலைப்பாகையையும் கணும்பிகையுடன் கூடியவரும் வாள் பரிசைகளைத் திருக்கரங்களில் ஏந்தியவருமாக, தியானித்துப் பூசிக்க.

பாதாதி அங்கங்களிலிருந்து சத்தியோசாதத்தை அங்குச முத்திரையினுலெடுத்து ஓம் ஹம் சத்தியோசாதமூர்த்தயே நம" என்று மேற்குத் தளத்திலே வெண்மை நிறமுள்ளவரும், வெண்மையான மாலை சந்தனம், ஆபரணம் தலைப்பாகை, வஸ்திரம், இவற்றையும், மூன்று கண்களையும், வரதம் அபயங்களையுடை



யவரும் சாந்தரும், சந்திரனைத் தரித்தவரும் அம்பிகையுடன் கூடியவரும் பாலவடிவருமாகத் தியானித்துப் பூசிக்க.* இவர்களுடைய திருவடிகளை மறவாது தியானித்தவர்கள் ஆன்மாவை இடர்ப்படுத்துகின்ற வினையினின்று நீங்குவர்.

ஒரு தீபத்திலிருந்து ஏற்றப்பட்ட ஏனைய தீபங்கள் ஒரேதன்மையாகப் பிரகாசித்தல் போல, ஈசானம் முதலிய பஞ்சப்பிரமங்களிலிருந்து தோன்றிய இவர்களும் ஈசானம் முதலியவற்ருேடு பின்ன மற்றவர்களாய் விளங்குவர்.

நேத்திரங்களிலிருந்து நேத்திரத்தை எடுத்து ஓம் ஹௌம் நேத்திரேப் பியோநம, என்று ஈசான தேவருக்கு உத்தரபாகத்தில் சிவப்பு நிறமானதும், முச்சத்திவடி வானதும் முச்சுடர்களை அதிட்டிக்கின்றது மாகத்தியானித்துப் பூசிக்க.

இருதயத்திலிருந்து இருதயத்தை யெடுத்து வெண்மை நிறமுள்ளவராய், 'ஓம்ஹாம் இருதயாயநம, என்று தென்கிழக்குத் தளத்திலும், சிரசிலிருந்து சிரசையெடுத்து பொன்னிற முள்ளவராக; 'ஓம் ஹீம் சிரசே நம, என்று வடகிழக்குத் தளத்தில் நேத்திரத்துக்கு வடக்கிலும், சிகையிலிருந்து சிகையை எடுத்து சிந்தூரவர்ன முள்ளவராய் 'ஓம் ஹூம் சிகாயை நம', என்று தென்மேற்குத் தளத்திலும், பிறராற் பேதிக்கப்படாத ஒளிரூபமான கவசத்தை எல்லா அங்கங்

---

* பஞ்சப் பிரமதேவர்களை சூலம் உடுக்கு அபயம் வரதம் என்னு மாயுதங்களைத் தரித்த நான்கு கைகளையுடைய வர்களாய்த் தியானிக்க. என்று வேறு ஆகமம் கூறுகின்றது.

களிலுமிருந் தெடுத்து 'ஒல் ஹைம்கவசாய நம,' என்று வடமேற்குத் தளத்திலும்.

பராக்கிரம ரூபமான அஸ்திரத்தை அஸ்தங்களிலிருந் தெடுத்து 'ஓம் ஹ: அஸ்திராயபட், என்று கிழக்கு முதலிய நான்கு தளங்களிலிருக்கும் தற்புருஷா திகளுக்கு இடப்பாகத்திலும் பூசிக்க.

ஈசானுதி ஐந்திற்கும் முறையேதேனு, பத்மம், திரிசூலம், மகரி, சுருக்கு என்னும் முத்திரைகளும், இருதயாதி அங்கங்களுக்கு நமஸ்காரமுத்திரையும் கொடுக்க.

"முந்து மறைதெரி முதலாவரண
மைந்து பிரம மோடாறங்கமே"
எனச்சதாசிவரூபம்பகரும்.

இருதயாதி மந்திரங்கள் சர்வஞ்ஞுத்துவம் முதலிய ஆறு குணங்களாக அமைந்துள்ளன எங்ஙனமெனில்,

முச்சத்திகளாலும் எல்லாக் காரியங்களையு மறிந்து அதிஷ்டித்துச் செய்வதே நேத்திரமாகையால் இது அலுப்த-சத்தி யென்னுங் குணத்தையும், திருவருட் சத்தியால் எல்லாவற்றையும் அறிதலே இருதய மாதலால் இது சர்வஞ்ஞுத்துவ மென்னும் குணத்தையும், இச் சாஞானக்கிரியை மூன்றும் பஞ்சகிருத்தியஞ் செய்யும் குணமாகிய ஈசானுதி ஐந்துமாகிய எட்டுக் குணங்களும் பொருந்திய குறைவு படாத ஐசுவரியமே சிரசாதலால் இது அனுதிபோத மென்னும் குணத்தையும், இச் சாஞானக்கிரியைகள் மிகுந்த பிரகாசமே கவச மாகையால் இது சுவதந்திர மென்னும் குணத்தையும், ஆன்மாவினது அனுதிமலத்தைச் சங்கரிக்கும் பெருமையே அஸ்திரமாகையால் இது அநந் தசத்தி என்னும் குணத்தையும் பொருந்தியிருக்கும் எனவாதுளாகமம் கூறும்.



## இரண்டாமாவரணம்

கிழக்கு முதலிய தளாக் கிரங்களில் சிவப்பு நிற முள்ளவரும் பூசத்தியை-யுடைய வருமாகிய அநந்தரையும், வெண்மை நிறமானவரும் சுவாகாசத்தியையுடைய வருமாகிய சூக்கு மரையும், நீல நிற முள்ள வரும், சாந்திசத்தியையுடைய வருமாகிய சிவோத்தமரையும், பீத நிற முள்ள வரும், பிரபாசத்தியையுடைய வருமாகிய ஏகநேத்திரரையும், கறுப்பு நிற முள்ள வரும் புஷ்டிசத்தியோடு கூடிய வருமாகிய ஏகருத்திரரையும், சிவப்பு நிற முள்ளவரும் சுருதிசத்தியையுடைய வரும் ஆகிய திரிமூர்த்தியையும், சிவப்பு நிறமுள்ளவரும், கிருதி சத்தியையுடைய வருமாகிய ஸ்ரீ கண்டரையும், மஞ்சல் நிறமுள்ளவரும் மேதாசத்தியையுடைய வருமாகிய சிகண்டியையும் பூசிக்க.

இந்த வித்தியேசுரர்களை மூன்று கண்களையுடையவர்களாயும், நான்கு புயங்களையும், அபயம், வரதம், உடுக்கு, மழு என்னும் ஆயுதங்களைத் தரித்தவராயும், சிவபெருமானைப் பார்த்துக் கொண்டிருப்பவர்களாயும் தியானிக்க.

### சதாசிவரூபம்

வீசியவுபயா வரண மிச்சைக்
கீசரனந் தாதிகளெண் மருமே.

## மூன்றுமாவரணம்

பீடகண்டத்தில் கிழக்கு முதலாக, செந் நிறத்தரும் திரிசூலம், ருத்திராக்ஷமாலை, அபயவரதமுள்ளவரு மாக நந்தியைத்தியா னிக்க.

கருஞ் சிவப்பு நிறமான தலைமயிர் மீசை தாடியையும், சூலம், கபாலம், வாள், பரிசை என்னும்

ஆயுதங்களைத் தாங்கியவருமாக மகா காளரைத் தியானிக்க. வெண்மை நிறமும், தசைப் பற்றற்றவடிவமும், தண்டம், ருத்திராக்ஷமாலை சிகை என்பவற்றைத் தரித்தவருமாக பிருங்கியைத் தியானிக்க.

செந் நிறத்தரும், பாசம், அங்குசம், தந்தம் பக்குவமான மாம் பழம் என்னு மிவைகளைத் தரித்தவருமாகக் கணபதியைத் தியானிக்க, வெண்ணிறமுள்ளவரும் தருமவடி வினரும், சிவத்தியானத்துடன் கூடியவருமாக இடபதேவரைத் தியானிக்க.

பொன் நிறத்தரும், சத்தி, குக்குடம் அபய வரதங்கள் பொருந்திய கரங்கள் உள்ளவருமாகக் கந்தரைத் தியானிக்க. கரு நிறத்தினரும், சிம்மவாகனியும், சூலம் கண்ணுடி தரித்தகரத் தினருமாகத் தேவியைத் தியானிக்க. கறுப்பு நிறத்தரும், கரங்களில் கமண்டலம், ருத்திராக்ஷமாலை, சூலம், பரசு என்பவற்றைத் தரித்தவரும், சர்ப்போபவீதரு மாகச் சண்டேசுரரைத் தியானிக்க,

''மூன்ருவது கணமுதல்வர்களெண்மரும்,''
எனச் சதாசிவ ரூபம் பகரும்.

## நான்காமாவரணம்

பீடபாதத்தில், இந்திரன், அக்கினி, யமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன், பிரமா, விட்டுணு என்னும் லோகபாலகர் பதின்மரையும் பூசிக்க. இதனை,

''நான்காவது மகவான் முதலீந்திரு
பாங்காருலக பாலகரும்''
என்னும் செய்யுளால் உணர்க.



## ஐந்தாமாவரணம்.

ஆதாரசிலையில் வச்சிரம் சத்தி தண்டம் கட்கம் பாசம் அங்குசம் கதை சூலம் பதுமம் சக்கரம் என்னும் தசாயுதங்களைப் பூசிக்க.

''ஐந்தாவது தசாயுதமே''

''பஞ்சாவரணத் தலம் பகரும் பொழ்
தம்புய கேசர மதனிதழந்தம்
பீடகண்டம் பிரபீட பீடம்
தேடரும் பிரமச் சிலையிவை யைந்தே''

### விளக்கம்

இந்த ஆவரணதேவர்களைத் தியானிக்கும்பொழுது சிவனையும் அம்பிகையையும் பக்தியோடு பார்த்துக் கொண்டு தத்தம் ஆசனங்களின்மீது இருப்பவர்களாகத் தியானம் பண்ணுக.

சில ஆகமங்கள் ஆன்மார்த்த பூஜைக்கு ஏகாவரணபூஜையை மாத்திரம் விதிக்கின்றன. * பஞ்சாவரண பூஜையையும் சில ஆகமங்கள் விதிக்கின்றன. சிவார்ச்சனு சந்திரிகைகாரரும் ஆன்மார்த்த பூஜாபத்ததிகாரரும் அவற்றை ஆராய்ந்து ஆன்மார்த்த பூசையில் ஏகாவரண பூஜையேனும் பஞ்சாவர்ண பூஜையேனும் செய்யலாமென்று சமாதானம் கூறி விளக்கியுள்ளார்கள்.

### கிரியை

பின்பு ஆவரணதேவர்களுடன் கூடிய சிவபெருமானுக்கு அஸ்திரத்தால் மணியடித்து தூபதீபம் ஆசனம் அருக்கியம் கொடுத்து நைவேத்திய பானீயங்களைச் சுவாகாந்தமூலத்தாற் கொடுத்துப் பிரமாங்கங்களுக்கும் அந்தந்த மந்திரங்களாற் கொடுக்க.

---

* பஞ்சாவர்ண மருச்சிக்க பாங்காக
வெஞ்சா விதியெண்ணி யீங்கு.

## நைவேத்திய விதி பரிசாரக லஷணம்

பாகஞ்செய்யும் பரிசாரகர்கள் சிவதீக்ஷை பெற்றவர்களாய், ஸ்நானஞ்செய்து தோய்த்துலர்ந்த வஸ்திரங்களைத் தரித்தவர்களாய், வீபூதிருத்திராஷமணிந்து அனுட்டானம் பண்ணியவர்களாய் இருத்தல் வேண்டும்.

## பாகலக்ஷணம்

பாத்திரத்தில் அரிசியையிட்டு வடித்தெடுத்த சலத்தை அவ்வரிசிக்கு ஒன்றரைக்கூறு அப்பாத்திரத்தில் வார்த்து வார்த்து அங்கமந்திரங்களினுல் ஆறுதரம் கழுவிக்கழுவி, சத்தியோசாத மந்திரத்தினுல் கழுநீரையூற்றிவிட்டு இருதயத்தினுல் கல்வாரி அரிசியினிருமடங்கு சலம் பூரித்துக் கவசத்தினுல் மூடிப் பின்பு கோமயத்தினுல் மெழுகப்பட்ட மடைப்பள்ளியிலே தரும அதர்மரூபமாகிய இரண்டு கைகளையுடைய அடுப்பை அரிசிகொண்டு இருதயத்தினுல் அருச்சித்து, பின்பு அப்பாத்திரத்தை வாமதேவத்தினுல் எடுத்து இருதயத்தினுல் அடுப்பின்மேல் வைத்து அகோரத்தினுல் அக்கினியிட்டு, தற்புருஷத்தினுல் புழுக்கள் பூச்சிகள் எலும்புகள் இல்லாதனவும் பொறி பறவாதனவுமாகிய விறகுகளிலே குழலைக்கொண்டேனும், தருப்பைப்புல்லைக் கொண்டேனும் வாயுவை உண்டுபண்ணி அக்கினியை எரியச்செய்து மயிர், உமி முதலியவைகள் கூடாமலும் அபக்குவம் அதிபக்குவம் ஆகாமலும் வேறு நிறமும் துர்க்கந்தமும் வராமலும் நன்ருகச் சமைத்து இருதயத்தினுல் இறக்கி முக்காலியில் வைத்து அன்னத்தினடுவே இருதயத்தினுல் ஒரு பத்திரம் வைத்து பாத்திரத்தின் கழுத்தடியிலே நான்கு திக்கினும் தத்புருஷ முதலிய நான்கு மந்திரங்களினுலும் விபூதி சாத்துக. இவ்வாறு காமிகம் காரணம் முதலிய ஆகமங்களிற் கூறப்பட்டது.



புகை மணமுள்ளதும் குழைந்ததும் குளிர்ந்ததும் மயிர் புழுவுள்ளதும் பழையதுமாகிய அன்னத்தை நீக்க வேண்டும்.

நைவேத்தியத்தில் உமியிருந்தால் வறுமையும் கல்லுக்கிடந்தால் வியாதியும் மயிர்கிடந்தால் வறுமையும் வருமென்றுசந்தானசங்கிதை கூறுகின்றது. நைவேத்தியம் பண்ணும் அன்னத்தில் மயிர் இருந்தால் மரணமும் புழு இருந்தால் பகைவராற் பீடையும், கல்லிருந்தால் பயிரழிவும், உமியிருந்தால் கிராமத்துக்குக் கேடும், ஊரியிருந்தால் சுரபீடையும், அதிகபக்குவமாலுல் வறுமையும், பக்குவமில்லாதிருந்தால் பிரசைகளுக்குக் கேடும், உண்டாம். ஆறியசாதமானுற் பொருளழிவும் அதிக சூடுடனிருந்தால் துக்கமும், கருகலாயிருந்தால் சகல நாசமுமுண்டாமென்று காரணுகமம் பகரும்.

## தண்டுலவிசிஷ்டம்

நைவேத்தியத்திற்குப் பொற்சம்பா, முத்துச்சம்பா, வெண்சம்பா, செஞ்சம்பா, பரிமளசம்பா அரிசி உத்தமமாம். வைணவம், நீவாராம் * மத்திமமாம். பன்றிநெல் அரிசி முதலியவை அதமமாம். இவ்வாறு காமிகாகமம் முதலியவற்றிற் சொல்லப்பட்டது.

## அன்னவகைகள்

சுத்தான்னம், மத்வன்னம், தெதியன்னம், பாயசான்னம், கிருசரான்னம் குளான்னம், முற்கான்னம் என அன்னம் ஏழுவகைப்படும்.

வேறு பொருள்கள் சேராது தனியே பாகம் பண்ணப்பட்டது சுத்தான்னமாம்.

---

* நீவாரம் - விதைக்காமல் முளைத்தது.

தேன்வார்த்துப் பிசறிய அன்னம் மத்துவன்னமாம். மது - தேன்.

தயிர் வார்த்துச் சேர்க்கப்பட்ட அன்னம் தத்தியன்னமாம். தெதி - தயிர்.

அரிசியிற்பாதி அல்லது அதிற்பாதி பயற்றம்பருப்பும் அரிசியினிருமடங்கு பசுப்பாலும் சருக்கரையுங் கூட்டிப் பாகம் பண்ணப்பட்டது பாயசான்னம்.

அரிசியிற்பாதியாவது அதிற்பாதியாவது அதிற்பாதியாவது எள்ளுப்பொடியும், எள்ளுப் பொடியிற்பாதி நெய்யுமாகப் பிசறிய அன்னம் கிருசரான்னமாம். கிருசரம் - எள்ளு

அரிசியிற்பாதி வெல்லமும், அரிசியிற்பாதி பசுப்பாலும், அதிற்பாதி நெய்யுமாகக் கூட்டிப்பாகம் பண்ணப்பட்டது குளான்னமாம். குளம் - சருக்கரை.

அரிசியிற்பாதி அல்லது அதிற்பாதி சிறுபயறும் தேங்காய்த்துருவலும் சருக்கரையும் சேர்த்துப் பாகம் பண்ணப்பட்டது முற்கான்னமாம். முற்கம் - பயறு.

இனி முற்கான்னம் சர்ஷபான்னம், மாஷான்னம், ஆமிலான்னம் திலான்னம் என அன்னம் ஐவகைப்படுமெனவும் ஆகமம் கூறும். சர்ஷபம் - கடுகு. மாஷம் - உழுந்து ஆமிலம் - புளி.

## நைவேத்தியம் செய்யுமுறை

பொன், வெள்ளி, தாமிரம் என்னுமிவற்றால் அமைந்த பாத்திரங்களிலாவது வாழையிலையிலாவது சுத்தவெண்கலப் பாத்திரத்திலாவது அன்னத்தைப் படைத்து நிவேதிக்க என்று மகுடாகமம் கூறுகின்றது. நைவேத்தியம் செய்வதற்கு நெய்யுடன் கூடிய அன்னமே ஏற்றதாகும். அம்சுமான் ஆகமம் "நெய் இல்லாத அன்னம் அசுரப் பிரீதியாகின்றது; ஆதலின் எவ்வகை முயற்சியினாலாவது நெய்யுடன் கூடிய அன்னத்தை நிவேதிக்க" என்று செப்புகின்றது.



அன்னம் முதலியவற்றைத் தனித்தனியே ஐந்து பாத்திரங்களிற் படைத்துச் சதாசிவ மூர்த்தியினுடைய ஐந்து திருமுகங்களிலும் நிவேதனம் பண்ணுக. அது கூடாதாயின் ஒரே பாத்திரத்திற் படைத்துத் தற்புருஷமுகத்தில் மிருகமுத்திரையினாலே நிவேதிக்க; அதுவும் சிவனுக்குப் பிரீதியாம்.*

## சைவ சமய நெறி

பஞ்சான னந்தனினும் பாங்குறப்போ னங்கொடுக்க
பஞ்சகசெம் பொற் பாத்திரத்து.
தற்புருட வந்திரத்திற் றுனோனைந வேத்தியமு
மற்புதனுக் காமென் றறி.

வாசுகியின் முகங்களைந்தினுள் ஒரு முகத்திற் பருகின் மற்றவைகளுக்கும் திருத்தியாகு மாறுபோலத் தற்புருஷமுகத்தில் நிவேதித்தது மற்றவைகளுக்கும் நிவேதித்தாகும்.≠

÷தற்புருஷவத்திரம் கன்மசாதாக்கியம். ஆதலால் நைவேத்தியம் முதலிய உபசாரங்கள் எல்லாவற்றையும் கன்மசாதாக்கியத்திற்றுனே செய்க. இக் கன்மசாதாக்

---

*சைவசமய நெறி பொது

≠காரணாகமம்.

÷பஞ்சசாதாக்கியங்களுள்ளே சிவசாதாக்கியம் ஈசானத்தும், அமூர்த்திசாதாக்கியம் சத்தியோசாதத்தும், மூர்த்திசாதாக்கியம் வாமதேவத்தும், கர்த்திருசாதாக்கியம் அகோரத்தும், கருமசாதாக்கியம் தற்புருடத்தும் பொருந்துதலானும் சாதாக்கியமைந்தும் ஒன்றுய்த் திரண்ட அவதரம் கருமசாதாக்கிய மாதலானும் தற்புருஷமே சிறப்புடைத்து. ஆதலால் தற்புருஷமுகத்தில் நிவேதித்தல் உத்தமமாயிற்று. அது,

கியத்திற் செய்தனவெல்லாம் மற்றைச் சாதாக்கியங்களிலும் செய்தனவேயாகும். சதாசிவ மூர்த்திக்குத் தற்புருஷம் முகம் ஆகையால் அம்முகத்தில் நிவேதிக்க வேண்டுமென்று வாதுளாகமத்திலும் காணப்படுகின்றமையாலும் அம்முகத்தில் நிவேதிக்க.

கன்மசாதாக்கியங் காண்டற் புருடமாதலினுற்
கன்மஞ்செய் கன்மத்தின் கண்.
வத்திரமாந் தற்புருட மாதேவற் காதலினவ்
வத்திரத்தி னூட்டல் வழக்கு.

இவ்வாறன்றி ஈசானவத்திரம் சிவாகமங்களிருபத்தெட்டுந் தோன்றிய மேன்முகமாதலால் அம்முகத்தில் நிவேதித்தலே உத்தமமென்று சிவ ஆகமம் கூறும்.

---

கன்மசாதாக்கியங் காண் கருதிடிற் புருடமெங்கு
மன்னபானுதியந்த முகந்தனிற் கொடுக்கவன்பா
லுன்னிடினகோரங் கர்த்தர மூர்த்தமே யுணரிற்சாத
மன்னிய மூர்த்தம் வாம மதித்திடிற் சிவமீசானம்

என்னுஞ் செய்யுளாலறிக. வாதுளாகமமுமிங்ஙனமே கூறும்.

சில நூல்களில் கருமசாதாக்கியம் தற்புருஷத்தும், கர்த்திருசாதாக்கியம் அகோரத்தும், மூர்த்திசாதாக்கியம் சத்தியோசாதத்தும் அமூர்த்திசாதாக்கியம் வாமதேவத்தும் சிவசாதாக்கியம் ஈசானமுகத்தும் பொருந்துமெனக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகமபேதமெனக் கொள்ளப்படும்.

### சைவசமயநெறி

கன்மம்புருடங் கருத்தாவ சோரமேற்
சுன்னுங்கான் மூர்த்த முறும்.
வாமமமூர்த்தமே யீசான வத்திரத்தி
னுமஞ் சிவமென்றே நாடு.



நைவேத்தியத்திற்கு எவ்வளவு அரிசி கற்பிக்கப்பட்டதோ அவ்வளவாயிரம் வருஷம் அப்பணியைச் செய்தவர்கள் சிவலோகத்தி லிருப்பார்கள் எனக் காமிகம் கூறும்.

விளாம்பழத்தினுடைய சாரத்தை யானை எப்படிப் பக்ஷிக்கின்றதோ, அப்படியே தேவர்கள் மந்திரத்துடன் நிவேதிக்கப்பட்ட பொருள்களை ஏற்கின்றார்கள்.

மனவமைவு பிறத்தற்காகத் தற்போதத்தை நைவேத்தியமாக ஒப்பித்தலே இதன் பாவனையாகும்.

### சதாசிவரூபம்

பின்மன அமைவுபிறத்தற் பொருட்டு
நைவேத்திய முகவாசமு நல்கி

### திருவிளையாடற் புராணம்

பாட்டிற் கின்புறு குருபரன் பாதமேற் கண்ணி
ராட்டிச்சொன் மலரணிந்து தற்போத வின்னமுதை
யூட்டித் தற்பரஞானமா மோமவெங்கனலை
மூட்டிச் சம்புவின் பூசைமேன் முயற்சியரானர்.

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### பண் — தக்கேசி

ஆலந்தானுகந் தமுதுசெய்தானை யாதியையமரர் தொழுதேத்துஞ்
சீலந்தான்பெரிது முடையானைச் சிந்திப்பாரவர் சிந்தையுளானை
யேலவார் குழலாளுமைநங்கை யென்றுமேத்தி வழிபடப்பெற்ற
காலகாலனைக் கம்பனெம்மானைக் காணக்கண்ணடியேன் பெற்றவாறே.

### பானீயம்

ஏலம், சந்தனம், பச்சைக் கர்ப்பூரம், பாதிரிப் பூ, செங்கழுநீர்ப் பூ, சாதிக்காய் என்பவற்றால் நிறைக்கப்பட்ட சலத்தைத் திருப்தியின் பொருட்டுக் கொடுத்தல் பானீயமெனப்படும். ஆசமனீயமும், கரசுத்தியும் சமர்ப்பிக்க.

### முகவாசம்

ஏலம், இலவங்கம், பச்சைக் கர்ப்பூரம், சாதிக்காய், தக்கோலம் என்பவற்றின் பொடியை பனி நீரோடு கூட்டிச் சேர்த்த தாம்பூலத்தைச் சமர்ப்பிக்க*

பின்பு அருக்கியம் தூபதீபம் ஆசமனுர்க்கியம் என்னுமிவைகளைச் சமர்ப்பிக்க.

### பவித்திரம்

அறுகு, அட்சதை, புஷ்பம், வில்வம் இவைகளை எடுத்து மூலமந்திரஞ் சொல்லி பவித்திரம் சாத்துக.

இது தைவிகம், பௌதிகம், ஆன்மிகம் என்னும் மூவகைத் துக்கங்களை நீக்கும் பொருட்டாகும். மனோ வாக்குக் காய மிறந்தவிடத்தில் முன் அதிட்டித்து நின்ற இச்சாஞானக் கிரியையை ஆன்மா பொருந்துவதே இதன் பாவனையாம்.

### சதாசிவரூபம்

மூவகைத்துக்க முடிகையின் பொருட்டுப்
பாவகமான பவித்திரஞ் சாத்தி.

### தீபாராதனை

ஐந்து அடுக்குள்ள அலங்காரதீபம் பஞ்சகலைக ளைக் குறிக்கும். மூன்று அடுக்குள்ள தீபம் முத்தத்து வங்களைக் குறிக்கும். இத்தீபத்தால் ஆராதிப்பின் ஆன் மசுத்தியுண்டாம். நாகதீபம் புத்திரவிருத்தியின் பொருட் டும், இடபதீபம் பசுவிருத்தியின் பொருட்டும், புருட தீபம் சகலசித்தியின் பொருட்டும் நக்ஷத்திரதீபம் ரோக

*இது ஐந்து வாசனைத் திரவியங்கள் சேர்ந்தது. இதற்கு பஞ்ச சௌகந்திக மென்று பெயர்.



சாந்தியின் பொருட்டும், வித்தையின்பொருட்டும் கும் பதீபம் மலநிவாரணத்தின் பொருட்டும், ஐந்து தட்டை கள் ஈசானம் முதவிய ஐந்து குணங்கள் பதிதற் பொருட்டும், தூபதீபம் சாரூபபதவியின் பொருட்டும், செம்பஞ்சும் வேப்பிலையும் திருட்டி தோஷபரிகாரத் தின் பொருட்டும் விபூதி மூவுலகஇரட்சையின் பொருட் டும், ஆராதிக்கப்படுகின்றன. கண்ணாடியிற் சிவமும் அதனொளியிற் சிவசக்தியும் அதிபராம். அதனால் ஆரா தனம் செய்தவர்கள் ஞானத்தைப் பெறுவார்கள், குடை யிற் சூரியனும் காம்பில் சூரியகிரணங்களுமாம். அத னால் ஆராதித்தவர்கள் ஆஞ்ஞாசக்கரத்தைப் பெறு வார்கள். சாமரையில் வாயுவும் அதன் காம்பில் கார்க் கோடனும் அதிபராம். அது கொண்டு பணியாற்றியவ ருக்கு மலநிவாரணமுண்டாம், விசிறியிற் சூரியனும், காம்பிற் பதுமனென்னும் சர்ப்பமும், அதில் உண்டா கும் காற்றில் வாயுதேவனும் இருப்பதால் அதனாற் பணி செய்தவர்களும், ஆலவட்டத்தினாற் பணிசெய்த வர்களும் சகலசுகபோகத்தையும் தீர்க்காயுளையும் அடைவார்கள்.

### ஆராத்திரிகம்

கர்ப்பூரம் வெண்மை நிறத்தைப் பொருந்தி அக்கி னிபற்றியவிடத்தே அதன்வடிவமாக விளங்கி, ஓர் பற்றுமில்லாமல் முற்றுங்கரையப்பெற்று ஆகாயத்து டன் கலந்து அத்துவிதமாய் விளங்கல்போல, ஆன் மாவெண்மை நிறமான சாத்துவித குணத்தைப் பொருந்தி, ஞானாக்கினி பற்றிய விடத்தே பசுத்தன் மைநீங்கிச் சிவத்தன்மை விளங்கப்பெற்று, தூலசூக்கு மசரீரங்கள் நீங்கப்பெற்று, எல்லாப் பற்றுங்கழன்று, சிவபெருமானோடு கலந்து அத்துவிதமாய்ப் பேரானந் தப் பெருவாழ்வு அடைதல் வேண்டுமென்னும் குறிப் பை உணர்த்துவற்காகக் கர்ப்பூராராதனை செய்யப்படு கின்றது.

### பட்டணத்துப்பிள்ளையார்

அக்கினி கர்ப்பூரத்தையற விழுங்கிக் கொண்டாற்போ
மக்கினம் பட்டுள்ளே மருவியிருந்தாண்டி,

### தாயுமானசுவாமிகள்

தீதணையாக்கர்ப்பூரதீபமென நான்கண்ட
சோதியுடனென்றித் துரிசறுப்பதென்னாளோ,

### புஷ்பாஞ்சலி

அனந்தாதிகளாற்று திக்கப்பட்டுச் சந்தோஷமடைகின்றவராகச் சிவனைத்தியானிக்க, பிராசாதத்தை உச்சரித்து, மூலமந்திரத்தால் புஷ்பாஞ்சலிசாத்தி, மகாமுத்திரையும், பஞ்சமுகிமுத்திரையும், கொடுக்க.

## செபநிவேதனம்

செபமாலையின் நாயகமணியில், சத்தியாதி சத்தி பரியந்தமாகச் சிவனைப் பூசிப்பது போலப் பூசிக்க, போககாமிகள் நூற்றெட்டு அல்லது ஐம்பத்து நான்கு அல்லது இருபத்தேழு மணிகளினாற் செய்த செபமாலையைக் கீழ் நோக்கித்தள்ளியும், முத்திகாமிகள் இருபத்தைந்து மணிகளாற் செய்த செபமாலையை மேனேக்கித் தள்ளியும் செபிக்க, செபிக்கும் பொழுது நாயகமணியைக் கடவாமலும் செபமாலை பிறர் கண்ணுக்குத் தெரியாமலும் பரிவட்டத்தால் மூடிக்கொண்டும். ஒன்ரேடொன்று ஓசைபடாமலும் சிவபெருமானுடைய திருவடிகளை மனதில் தியானித்துக்கொண்டு செபிக்க.

மனதாற் செபித்தல் மானதமெனவும், தன்காதுக்கு மாத்திரம் கேக்கும்படி செபித்தல் உபாஞ்சு எனவும், அருகிலிருப்பவருக்குக் கேட்கும்படி செபிப்பது வாசக



மெனவும் கூறப்படும், இவற்றுள் மானதசெபமேவிசேஷமுடையது. மானதம் சாத்துவிகத்தையும், உபாஞ்சு இராசதத்தையும், வாசகம் தரமதத்தையும் கொடுக்கும் மந்திரங்களுக்குமேலாய் அநாதியாய் உள்ளதாகையாலும், பஞ்சசத்திகளுக்கிடமாகையாலும் சிவபெருமானுடைய திருமேனியாய் உள்ளதாகையாலும் சிகரம் சிவனையும், வகரம் சத்தியையும், யகரம் ஆன்மாவையும், நகரம் திரோதானசத்தியையும், மகரம் மலத்தையும் குறிப்பதாதவாலும் ஆணவத்தை நீக்கி, திரோதான சத்தியைக் கடந்து, தம்மை அறிந்து, ஞானத்தைத் தரிசித்து சிவத்திற்கலக்கச் செய்தலாலும் ஐந்தெழுத்தினதுண்மையறிந்து செபிப்பவர்கள் சிவஞானத்தையடைவார்கள். பதியெழுத்து முதலும், சத்தியெழுத்து இரண்டாவதும், உயிரெழுத்து மூன்ருவதும், திரோதான எழுத்து நான்காவதும், மலஎழுத்து ஐந்தாவதுமாக நிற்கும். இறுதியிலுள்ளதாகிய திரோதான மல எழுத்துக்களை முதலில் வைத்துச் செபிப்பவர்கள் போகத்தை அடைவார்கள்.

இவ்வெழுத்தை அறிவு வழியாகப் பார்த்து, சிவனுலே சத்தியும், சத்தியாலே ஆன்மாவும் ஆன்மாவைப்பற்றிப்போகத்தைக் காட்டும் திரோதானமும் அத்திரோதானத்தால் நடக்கும் மலமுமென்று அறிந்து செபிப்பவரகள் மோட்சத்தையடைவார்கள், ஆன்மாவோடு அநாதியாயுள்ள மலத்தைப்பாகப்படுத்துவதற்காகத் திருவருட் சத்தியானது அதனேடுந்திரோதமாய் மறைந்து நின்றதிரோதானத்தினின்றும் முற்சினமருவு திரோதாயிகருணையாகி'' என்றபடி நீங்கியருளாய் நின்று பிரகாசித்துச் சிவத்தோடுகூட்டும்.

## திருஞான சம்பந்த மூர்த்தி நாயனர்

### பண் — கௌசிகம்

தெக்குளார்வமிகப் பெருகிந்நினை ந்
தக்குமாலை கொடங்கையிலெண்ணுவார்
தக்கவானவராத்தருவிப்பது
நக்கநாம நமச்சிவாயவே

## திருநாவுக்கரசு நாயனர்

### பண் — காந்தாரபஞ்சமம்

விண்ணுறவடுக்கியவிறகின் வெவ்வழல்
உண்ணிய புகிலவை யொன்றுமில்லையாம்
பண்ணிய வுலகினிற் பயின்ற பாவத்தை
நண்ணிநின்றறுப்பது நமச்சிவாயவே

## சுந்தர மூர்த்தி நாயனர்

### பண் — புறநீர்மை

அந்தியுநண்பகலு மஞ்சுபதஞ் சொல்லி
முந்தியெழும்பழைய வல்வினை மூடாமுன்ன
சிந்தை பராமரியாத் தென்றிருவாரூர்புக
கெந்தை பிரானுரை யென்றுகொலெய்துவதே

## மாணிக்கவாசக சுவாமிகள்

நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநமவெனப் பெற்றேன்
தேனையின்னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
தானேவந்தெனதுள்ளம் புகுந்தடியேற்கருள் செய்தான்
ஊனுருயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே



மூலமந்திரத்தை நூற்றெட்டுருச் செபித்து இடக்கையில் புஷ்பத்தை வைத்து அஸ்திரகவச இருதயமந்திரங்களாலும் இருதய கவச அஸ்திரமந்திரங்களாலும் மூடி, இரட்டை அவகுண்டனஞ் செய்து வலக்கையிலெடுத்து புஷ்பம் அக்ஷதை அர்க்கியத்துடன் உற்பவ முத்திரையினுல் பூமியில் வலமுழந்தாளை ஊன்றிக் கொண்டு, குஹ்யம் அதிகுஹ்யமானவரே, அனைத்தையும் காப்பவர் நீரே, எல்லாவற்றையும்இரக்ஷிக் கிறவராய் இருப்பதால் என்னுற் செய்யப்பட்ட செபத்தையும் ஏற்றருள வேண்டும்; எந்த என் ஜபமானது* உம்மிடத்தில் இருக்கிறதோ அது கொண்டு உம்முடைய அனுக்கிரகத்தால் எங்களுக்குப் போகமோக்ஷங்கள் சித்தியாக வேண்டும் என்னுங்கருத்தமைந்த "குஹ்யாதி" என்னுஞ் சுலோகத்தைச் சொல்லிக் கொண்டு மூலமந்திரத்தை யுச்சரித்து வலதுகையால் அருக்கிய ஜலம் புஷ்பம் என்பவற்ருேடு செபத்தைச் சிவபெருமானுடைய வரதஹஸ்தத்தில் சமர்ப்பிக்க.

குஃயம் என்பதனுல் இருபத்து நான்கு ஆன்மதத்துவங்களையும் அதிகுஹ்யம் என்றதனுல் அதற்குமேலுள்ள தத்துவங்களையும் அந்தந்தத் தத்துவபுவன வாசிகளையும் அதிஷ்டிக்கின்றவர் என்பது உணரத்தக்கது.

சர்வ குணங்களும் கழன்று மோக்ஷம் பெறுவதற்காகச் செபநிவேதனஞ் செய்க.

### சதாசிவரூபம்

எல்லாநன்மையு மெய்துதற் பொருட்டு
நல்ல செபத்தை நயந்து நிவேதித்து

*ஜப மென்பதின் பொருள்: ஜ - பிறவிநீக்கம், பம் - பாப நிவாரணம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### பண் — காந்தார பஞ்சமம்

முன்னெறியாகிய முதல்வன் முக்கணன்
தன்னெறியே சரணுதறிண்ணமே
அந்நெறியே சென்றங் கடைந்தவர்க்கெல்லாம்
நன்னெறியாவது நமச்சிவாயவே

### திருவிருத்தம்

படைக்கலமாகவுன்னுமத்தெழுத்தநஞ் செனவிற்கொண்டேன்
இடைக்கலமல்லே னெழு பிறப்புமுனக் காட்செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் ஞெழுதுவணங் கித்துநீறணிந்துன்
அடைக்கலங்கண்டாயணிதில்லைச் சிற்றம்பலத்தானே.

### கன்மசமர்ப்பணமும் ஆன்ம நிவேதனமும்

ஆன்மாக்களுக்குச்சு பஞ் செய்பவரே, சிவபதத்திலிருத்தும் என்னுடைய சிவபுண்ணிய ரூபமான கன்மத்தைக் காப்பாற்றும் பாபரூபமான கன்மத்தை நாசஞ் செய்யும் என்னுங் கருத்தமைந்த "யத்கிஞ்சித்" என்னும் மந்திரத்தைச் சொல்லிக் கன்மத்தையும், பலன் தருபவன் சிவனே. பலனை அனுபவிப்பவன் சிவனே எல்லா உலகங்களும் சிவனே, எல்லாவிடங்களிலும் பூசிக்கப்படுபவன் சிவனே இவ்வாறு சிவன் எல்லாமாயிருத்தலால் நான் சிவமாயிருக்கிறேன் என்னுங் கருத்தமைந்த 'சிவோதாதா' என்னும் மந்திர சுலோகத்தைச் சொல்லி 'ஓம் ஹாம் ஹௌம், சிவாய சுவாகா என்று தீர்த்தத்தோடு ஆன்மாவையும் சிவபெருமானது வரத அத்தத்தில் தத்தம் செய்க. தனியே இருதய மந்திர முச்சரித்தும் நிவேதிக்கலாம்.

*மோக்ஷத்தை அடைய வொட்டாது தடை செய்யும் விக்கினத்தை நீக்குதற் பொருட்டும் சிவபோகத்தை

*சிவார்ச்சனுசந்திரிகை.



யடைதற் பொருட்டும் புண்ணியத்தைச் சிவபெருமனுடைய திருக்கரத்தில் சமர்ப்பிக்க வேண்டும். பாவத்தைச் சமர்ப்பித்தல் எதன் பொருட்டெனில் அது நாசமாதற் பொருட்டென்க. ஆகையால் புண்ணிய பாவங்களை ஏற்றருளும் என்பதற்கு புண்ணியத்தைக் காப்பாற்றும், பாவத்தை நீக்கும் என்று பொருள் செய்து கொள்க.

"சிவோதாதா" என்னும் மந்திர சுலோகத்தில் சோகமென்னும் ஒரு பதத்தால் தனக்கும் சிவனுக்குமுள்ள சரீர சரீரி பாவம் நிச்சயப்படுகின்றது. சிவன் எல்லாவற்றையும் நியமனஞ் செய்கின்றமையால் சரீரி. பூசகன் சிவனுல் நியமிக்கப்படுபவ னுகையால் சரீரம். ஆகவே சரீர சரீரிபாவத்தில் சோகம் என்பது ஓரிடத்திலிருப்பதாம்.

'சிவ' என்னும் பதத்துக்கு மும்மலங்களோடு சம்பந்தப் படாதவர்; மேலான மங்கலத்தை உண்டுபண்ணுகின்றவர் என்பது கருத்து.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித் திருவிருத்தம்

சிவனெனு நாமந் தனக்கே யுடைய செம்மேனியெம்மான்
அவனெனை யாட்கொண்டளித் திடுமாகி லவன்றனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரிந்து பன்னாள் ளழைத்தால்
இவனெனைப் பன்னாளழைப் பொழியா னென்றெதிர்ப்படுமே.

'தாதா' — தம்மை அடைந்தவர்களுக்கு மறதியினுல் பாவங்களாகிய விக்கினங்கள் ஏற்படின் அவைகளை நீக்குபவர் என்பதாம். போக்தா — தம்மை யடைந்தவர்களைக் காப்பவர். "சிவசர்வமிதம் ஜகத்" — சுத்தம் மிச்சிரம் அசுத்தம் என்னும் பிரபஞ்ச மனைத்தின்

சொரூபமானவர். "சிவோயசதி சர்வத்ர" — எல்லா வுலகங்களிலும் சிவனே தருமத்துக்குத் தலைவராகிருர். ஆன்மாக்களது மலத்தை அடக்குபவர் எனச் சிவார்ச்சனு சந்திரிகையில் கூறப்பட்டுள்ளது.

ஆன்மா சீவோ பாதியைப் பொருந்தாமல் அதற்கு அதீதமாய் அலைவற்று நின்மலமாயுள்ள பரமசிவத்தில் சலனமற்றிருப்பதே இதன் பாவனையாம்.

### சதாசிவரூபம்

அலைபெறவே தான மலனிடத்தி
னிலைபெற வேண்டித்தனை நிவேதித்து

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித் திருநேரிசை

மோத்தையைக் கண்டகாக்கை போலவல்வினை கண்மொய்த்துன்
வார்த்தையைப் பேசவொட்டா மயக்க நான்மயங்குகின்றேன்
சீத்தையைச் சிதம்புதன்னைச் செடிகொனேய் வடிவொன்றில்லா
ஊத்தையைக் கழிக்கும் வண்ணமுணர்வு தாவுலகமூர்த்தி,

### திருவாசகம்

வெறுப்பனவே செய்யுமென் சிறுமையை நின்பெருமையினுற்
பொறுப்பவனே யராப்பூண்பவனே பொங்கு கங்கைசடைச்
செறுப்பவனே நின்றிரு வருளாலென் பிறவியைவேர்
அறுப்பவனே யுடையா யடியேனுன் னடைக்கலமே.

அன்றேயென்ற னுவியுமுடலு முடமை யெல்லாமுங்
குன்றேயனையா யென்னையாட் கொண்டபோதே கொண்டிலையோ
வின்றோரிடை யூறெனக்குண்டோ வெண்டோண் முக்கணெம்மானே
நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானேவிதற்கு நாயகமே.



இவ்விதம் மூன்று சுலோகங்களால் செபத்தையும், கன்மத்தையும், ஆன்மாவையும் சமர்ப்பித்தபின்னர் பஞ்சப்பிரமமந்திரங்களையும் விடங்கமந்திரங்களையும் பத்திலொருபங்கு செபித்து அட்டபுஷ்பம் சாத்துக.

### காமிய மந்திரபூசை

சிவபெருமானுடைய அனுமதிபெற்றுக்கொண்டு, ஆசனபத்மத்தின் தெற்குத்தளத்திலே கிழக்குப் பாகத்தில் ஸ்திரீ ரூபமான கௌரீ மூதலிய மந்திரங்களையும், மேற்குத் தளத்தில் ஆண் ரூபமான மிருத்தியுஞ்சய முதலிய மந்திரங்களையும், முற்பாகத்தில் ஸ்திரீபுருஷ ரூபமான உமாமகேசுராதி மந்திரங்களையும் கிரமமாகப் பூசித்து, அவ்வவ் மந்திரங்களை யதாசத்தி செபித்துச் சர்வதேவதாசொரூபியாகிய சிவபெருமானிடத்தில் நிவேதிக்க.

இலிங்கத்துக்கு முன்னே மேற்கு முகமாகத் திருநந்தி தேவரையும் அவருக்கு முன் சூலத்தையும், அவருக்கு வாமத்திலே ஆதித்தனையும், அக்கினி திக்கிலே சாத்தாவையும், மகேசுரரையும், சிவபெருமானுக்குத் தெற்கே தக்ஷிணமூர்த்தி வித்தியா பீடத்தையும், நிருதியிலே கணபதியையும், அவருக்கு இடப்பக்கத்திலே பிரமாவையும், வாயுவிலே சுப்பிரமணியரையும், வடக்கே தெற்கு முகமாக நிருத்த மூரத்தியையும், அவருக்கு வாமத்திலே போகசத்தியையும், குபேரனுக்கும் வாயுவுக்கும் நடுவே இலிங்கோற்பவத்தையும், குபேரனுக்கும் ஈசானருக்கும் நடுவே சிவபத்தர்களையும், அவருக்கு வாமத்திலே வைரவரையும் எழுந்தருளப் பண்ணிப் பூசிக்க. இடபத்துக்கும் ஆதித்தனுக்கும் நடுவே திருநீற்றுதாரத்தில் மாயாசத்தியையும் திருநீற்றிலே லகுளீசுரனையும், கயிற்றிலே வாசுகியையும் பூசித்து அதற்கடுக்கச் செபமாலையை வைத்துப் பூசிக்க.

## 1. சந்திரசேகரர்

சிவபெருமான் சந்திரனை அணிந்தது, சர்வஞ்ஞருத்து வர்தாம் என்பதையும், ஆன்மாக்களது பிறப்பிறப்புக் களை நீக்கி மேலான முத்தியைக் கொடுப்பவர் தாம் என்பதையும், அறிவித்த உண்மையாகும். சந்திரன் ஆதிபௌதிகசந்திரன், ஆதியான்மிகசந்திரன், ஆதி தைவிகசந்திரன் என மூவகைப்படும், சிவபெருமான் தரித்தருளியசந்திரன் ஆதிபௌதிகசந்திரனல்லாத மந்திரரூபமாகிய ஆதிதைவிகசந்திரனேயாம்.

### பட்டினத்தடிகள்

தூமதி சடை மிசைச் சூடுதல்தூநெறி
யாமதியானென வமைத்தவாறே.

### திருஞானசம்பந்த சுவாமிகள்

பண் - செவ்வழி.

குறைவதாய குளிர்திங்கள் சூடிக்குனித்தான் வினை
பறைவதாக்கும் ஏமன் பகவன் பரந்த சடை
இறைவனெங்கள் பெருமானிடம் போலிரும்பை தனுள்
மறைகள் வல்லார் வணங்கித் தொழுகின்ற மாகாளமே.

## 2. உமேசர்

அகரம் உகரம் மகரமாய் நிற்கும் பிரணவமானது எழுத்து மாறுதலினால், உகரம் மகரம் அகரமாகித் தீர்க்கப் புலுதமுமாய்த் தேவிக்குமாம், என்று லிங்க புராணம் கூறுகின்றது. உமாதேவியார் சிவபெருமானது திருவருளே. சிவபெருமானே எல்லாவற்றையும் படைத் துக்காக்கும் வண்ணம் தாமோர் பெண்ணுருக்கொண்டு விளங்குவார், அங்கம், பிரத்தியங்கம், சாங்கம், உபாங் கமாக எங்கும் காணப்படும் வடிவமெல்லாம் சத்தியே அந்தந்த வடிவச் சத்திமயமாகி நிற்பவர் சிவபெருமா னும். இதனை வேதாகமங்கள் சொல்லும்.



### கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள்

மாதுமை வசத்தனாகி மருவு வானென்றியன்னு
ளுதனதருலே யெல்லா நண்ணுவித்தருளும்வண்ணம்
பேதமதா கித்தானோர் பெண்ணுருக்கொண்டு மேவும்
என்பதனாலறிக இச்சரித்திரத்தின் உண்மைக் கருத்தை,

### மாணிக்கவாசக சுவாமிகள்

தென்பாலு கந்தாடுந் தில்லைச் சிற்றம்பலவன்
பெண்பாலுகந்தான் பெரும் பித்தன் காணேடீ
பெண்பாலுகந் திலனேற் பேதாயிருநிலத்தோர்
விண்பாலியோ கெய்திவீடுவர் காண் சாழலோ.

சிவபெருமான் தேவர்களுடைய வேண்டுதலுக்கிரங் கிச் சிருட்டித் தொழில் நிறைவேறுதற்காகவும், உயிர் களுக்குப் போகத்தையூட்டுவதற்காகவும் தமது திரு வருளைச் சத்தியாக்கி இடப்பாகத்தில் இருத்தினமை யால் உமா மகேசுர மூர்த்தியாயினர்.

## 3. இடபாரூடர்

சிவபெருமான் தம்மைச் சார்ந்து போற்றுகின்ற தருமக் கடவுளாகிய இடபத்துக்கு இறவாத்தன்மையை யும், வாகனமாய்த் தம்மைத் தாங்கும் வன்மையையும், அன்பையும், மெய்யுணர்வையும், கொடுத்து அதனை வாகனமாகக் கொண்டனர்.

### பட்டனத்தடிகள்

அறனுருவாகிய வானேறூர்தல்
இறையவ னியானென வியற்றுமாறே.

என்பதனால் அறிக.

திருமால்திரிபுர சங்காரகாலத்தில் சிவபெருமானை இடபமாய்த் தாங்கினுர் என்று புராணங்கள் பகரும். "திரியுமுப்புரந் தீப்பிழம்பாகச் செங்கண்மால் விடை மேற்றிகழ் வானை" (சுந்தரர்) எனவும்,

கடகரியும் பரிமாவுந் தேருமுகந் தேருதே
யிடப முகந்வேறிய வாறெனக் கறியவியம் பேடீ
தடமதில் களவை மூன்றுந் தளலெரித் தவந்நாளி
விடப மதாய்த்தாங்கினுன் திருமால் காண்சாழலோ.

(திருவாசகம்) எனவும் வரும். திராவிட சுருதிகளாலும் விட்டுணு இடபமாய்த் தாங்கிய சரித்திரம் உணர்ந்துகொள்க.

தருமதேவதையும், ஞானமும், விட்டுணுவும் ஒவ்வோர் காலத்தில் இடபரூபங் கொண்டு சிவபெருமானைச் சுமந்தனரெனக் கூறப்படலால் தருமரூபரும், தருமபரிபாலகரும், ஞானமய மானவரும், விட்டுணுவுக்குமேலான வரும் சிவபெருமானே யென்பது துணியப்படுகிறது.

## 4. சபாநாயகர்

சபைகள் ஐந்து, திருவாலங் காட்டில் இரத்தின சபையும், சிதம்பரத்தில் கனகசபையும், மதுரையில் வெள்ளிச்சபையும் திருநெல்வேலியில் தாமிரசபையும். திருக்குற்றலத்தில் சித்திரசபையுமாம்.

சங்கமமாகிய பிண்டமும் தாவரமாகிய அண்டமும் சமமாதலால், பிண்டமாகிய சரீரத்தில் இடை நாடிக்கும் பிங்கலை நாடிக்கும் நடுவிலுள்ள சுழுமுனை நாடியிலும், பிரமாண்டத்திலுள்ள இப்பரத கண்டத்தில் இலங்கைக்கு நேரேபோகும் இடை நாடிக்கும் இமய மலைக்கு நேரேபோகும் பிங்கலை நாடிக்கும் நடுவிலுள்ள தில்லைவளத்துக்கு நேரேபோய்க் கூடும்



சுழுமுனை நாடியிலிருக்கும் மூலலிங்கத்திற்குத் தெற்கேயுள்ள கனகசபையிலும் அனவரத தாண்டவம் செய்தருளுவோம், அச்சபை ஞானு காசமாகிய மெய்ப்பொருளா யிருத்தலால் மாயைப் பொருள்களைப் போல அழியாது எக்காலமும் நிலைபெற்றிருக்கும், புண்ணியங்களைச் செய்த ஆன்மாக்களுள்ளே நாடுதற் கரிய ஞானக் கண்ணைப் பெற்றவர்களே சிதம்பரத்தை மெய்யன்போடு தரிசிப்பர். சகளமும் நிஷ்களமுமாகிய இரண்டும், நமக்குப் பற்றுக் கோடாகிய வடிவங்களாம் உருவத் திருமேனியானது அன்பர்களது பாசமாகிய விலங்கை அகற்றும் படி சத்தி உபாதானமாக அவர்களெதிரே விளங்குவது, அருவத் திருமேனியானது ஞான மாய்க் கண்டிக்கப் படாததாய் இருப்பது, இவ் விரண்டையுங் கடந்து நின்ற இயற்கைவடிவம் சோதிமயமாகிய ஒளிரூபமேயாம், அது பரமாகிய சுத்தமாயையின் மேலானது.

சிருட்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகமாகிய பஞ்சகிருத்தியங்களுமே நமது நிருத்தமாகும். என்று பதஞ்சலி முனிவருக்கு சிவபெருமான் உபதேசித்த பொருளையுடையதாக உமாபதி சிவாசராரியர் கோயிற் புராணத்திற் கூறியருளினுர்.

பரமசிவனுர் பஞ்சாட்சரத்தைத் திருமேனியாகக் கொண்டு பராசத்தியாகிய திருவம்பலத்தில் நின்று உமாதேவியார் காணும்படி வியாக்கிரபாதமுனிவர், பதஞ்சலிமுனிவர் இருவருக்கும் மெய்யுணர்வாற்றெழ ஆடியருளுகின்ற திருக்கூத்தை விரும்பியவர்கள் மோக்ஷமடைவார்கள்.

உடுக்கேந்திய திருக்கரத்திலே சிருட்டியாகவும், அமைந்த திருக்கரத்திலே ஆன்ம இரக்ஷையாகவும், அக்கினி ஏந்திய திருக்கரத்திலே மலசம் ஹாரமாகவும், ஊன்றிய திருப்பாதத்திலே பிரபஞ்சத்தை மறைக்கும் திரோதமாகவும், தூக்கிய திருப்பாதத்திலே அனுக்கிரக

முத்தியாகவும் இம்முறையே பஞ்சகிருத்திய நிருத்தம் செய்தருளுவர்.

உடுக்கையேந்திய திருக்கரத்தினாலே மாயாமலத்தை நீக்கி, அக்கினியேந்திய திருக்கரத்தினாலே கன்மமலத்தைச்சுட்டு, ஊன்றிய திருப்பாதத்தினாலே ஆணவமல மேலிடாமலழுத்தி, தூக்கிய திருவடியினாலே அருளே உடம்பாக நிறுத்தி அமைத்த திருக்கரத்தினாலே ஆனந்த வெள்ளத்திலே ஆன்மாவை அழுத்துதலே எமது தலைவர் நிருத்தஞ் செய்கின்ற முறைமையாம், என்று உண்மை விளக்கம் கூறும்.

சிவத்தைக் காட்டிக் காணுதலின் எய்தும் பரமாநந்தசிவபோகத்தை அபக்குவர்களாகிய ஆன்மாக்கள் அனுபவிக்க இயலார், என்று அறிந்தே எங்கள் உலக மாதாவாகிய சிவகாமித்தாயார் பஞ்சப்பொறிகளையும் ஒருவழிப்படுத்தும் சிதம்பரத்தில், எக்காலமும் ஆநந்த நடேசரது நடனத்தைப் பார்த்துக்கொண்டு நிற்பாராயினர். இது சிறுபாலரின் பிணிநீக்கத்தின் பொருட்டுத் தாயார் மருந்துண்பது போலாம். அம்மையார் அங்ஙனம் கண்டுகொண்டு நிற்கின்றார் என்பது,

## திருநாவுக்கரசு நாயனார்

### திருத்தாண்டகம்

கயிலாய மலையெடுத்தான் கதறிவீழக் கால்விரலால்
அடர்த்தருளிச் செய்தார் போலும்
குயிலாய மென்மொழியாள் குளிர்ந்து நோக்கக்
கூத்தாட வல்லகுழகர் போலும்
வெயிலாய சோதிவிளக் கானார் போலும்
வியன்வீழி மிழலையமர் விகிர்தர் போலும்
அயிலாய மூவிலைவேற் படையார் போலும்
அடியேனை ஆளுடைய அடிகள் தாமே.

என்பதனால் அறிக.



### திருவிருத்தம்

போற்றுந் தகையன பொல்லா முயலகன் கோபப் புன்மை
ஆற்றுந் தகையனவாறு சமயத்தவ ரவரைத்
தேற்றுந் தகையன தேறியதொண் டரைச்செந் நெறிக்கே
ஏற்றுந் தகையன வின்னம்பரான் றனிணையடியே

குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போன் மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்தமுடைய வெடுத்தபொற் பாதமுங் காணப் பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேயிந்த மாநிலத்தே

இது எழுவகை நடனங்கட்கும் முதலாவதாகிய ஆநந்ததாண்டவமாம்.

இங்ஙனமன்றி எல்லாவுலகங்களையுந் திருமேனியாகக்கொண்டு நின்றும் பஞ்சகிருத்திய நிருத்தத்தைச் செய்தருளுவர்.

### பட்டணத்தடிகள்

அடியொன்று பாதலமேழிற் குமப்புறப்பட்ட திப்பான்
முடியொன்றில் வண்டங்க ளெல்லாங் கடந்தது முற்றும் வெள்ளைப்
பொடியொன்று தோளெட்டுந் திக்கின்புறத் தனபூங்கரும்பின்
சேடியொன்று தில்லைச்சிற்றம் பலத்தான்றன் றிருநடமே

## 5. கல்யாணசுந்தரர்

ஆன்மாக்கள் போகமோக்ஷத்தையடைதற் பொருட்டும் இமையமலையரசனது தவத்தை நிறைவேற்றுதற் பொருட்டும் தக்கன் பயந்த மகளெனப் பொருள்படும் தாக்ஷாயிணி என்னும் பெயரையும், அவனிடத்து வளர்ந்த சரீரத்தையும் நீக்குதற்பொருட்டும், சிவபெருமானது கிருபையினால் உமாதேவியார் திருவுள்ளங்கொண்டு சிவாஞ்ஞைப்படி சிறுபிள்ளையுருவத்தோடு சென்று; இமயமலையிலுள்ள பத்மை என்னும் தடாகத்

திலுள்ள ஒரு தாமரைப் புஷ்பத்தின் மீதாக வீற்றிருந்தனர்.

உமாதேவியார் தமக்குப் புத்திரியாக வேண்டுமென்று நினைத்துத் தவஞ்செய்த அரசன் அவரைக் கண்டு மகிழ்ந்து ஆனந்த அருவி சொரியச் சென்று வணங்கி எடுத்துச் சிரசில் வைத்துச்சென்று. தமது மனைவியாகிய மேனையென்பவள துகையிற்கொடுத்து நிகழ்ந்தவற்றைக் கூறினான். மேனை உலக மாதாவாகிய உமாதேவியாரை வணங்கிப்போற்றினாள்.

உமாதேவியார் சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்யச் சிவபெருமான் அம்மையார் தம்மிடத்துக் கொண்ட அன்பை உலகினர்களுக்குக் காண்பித்து, உலகத்திலே இல்வாழ்க்கை நிகழ்தற்பொருட்டுத் திருமணம் செய்தருளிய காரணத்தினால் கல்யாணசுந்தரமூர்த்தியாயினர்.

## சுந்தரமூர்த்தி நாயனார்

### பண்—தக்கராகம்

குரும்பைமுலை மலர்க்குழலி கொண்ட தவங்கண்டு,
குறிப்பினொடு சென்றவடன் குணத்தினை நன்கறிந்து
விரும்புவரங் கொடுத்தவளை வேட்டருளிச் செய்த
விண்ணவர்கோன் கண்ணுதலோன் மேவியவூர்வினவில்
அரும்பருகே சுரும்பருவ வறுபதம்பண்பாட
வணிமயில்கணட மாடும்மணிபொழில் சூழயலின்
சுரும்பருகே கருங்குவளை கண்வளருங் கழனிக்
கமலங்கண் முகமலருங்கலைய நல்லூர்காணே.

## திருவாசகம்

மலையரையன் பொற்பாவைவாணு தலாள்பெண்டிருவை
யுலகறியத் திவேட்டானென்னு மதுவென்னேடீ
யுலகறியத் தீவேளாதொழிந் தனனே லுலகனைத்துங்
கலைநவின்ற பொருள்களெல்லாங் கலங்கிடுங் காண்சாழலோ.



## 6. பிக்ஷாடனர்

இரணியாக்கனுடைய புத்திரனாகிய அந்தகாசுரன் கொடுங்கோல் செலுத்தி அரசாளுங்காலத்தில், பன்னிரு வருடம் மழை வளங்குறைய வேதபண்டிதர்களாகிய தாருகாவனத்து முனிவர் பசிநோயால் வருந்திக் கௌதமமுனிவருடைய ஆச்சிரமத்தையடைந்தார்கள். முனிவர் அவர்களைப் பூசித் தக மகிழ்ந்து, நாடோறு மன்புடன முதருத்தி வந்தனர். அவர்கள் அடிசிலையருந்தி ஆச்சிரமத்தில் வசிக்கும் நாட்களில், முகில்வளநிறைந்து மழை பெய்தது. பன்னிரு வருடமும் வருத்திய பசிநோய் அச்சமுற்றோட மிகுந்த செல்வம் பெருகுதலும், அவர்கள் தங்களாச்சிரமங்களையடைய நினைத்தார்கள். விருந்தினராக வந்த தங்களைவிடக் கௌதமருக்கு விருப்பமின்மையாயிருப்பதையறிந்து, அவர்கள் ஒரு மாயப்பசுவையுண்டாக்கி முனிவர் முன்னிலையிலனுப்பினர். நரம்புகள் மிதந்து, தசைப்பற்றற்று வந்த பசுவை முனிவர் கண்டு 'பசுவுக்கு வந்த துன்பங்களை நீக்கிக்காத்தல் மேலான சிவதருமமாய் முத்தியிற் கூட்டும்; காவாது விடுத்தல் கொடிய நரகத்துக்கு இரையாக்கும்' எனச் சிவாகமங்கள் கூறியதை நினைத்து 'யானும் இப்பசுவுக்குத் தீங்குவராமற் காப்பேன்' என்று கூறிப் பசுவைக் கரத்தினாற்றீண்ட அது பூமியில் விழுந்து இறந்தது. அதனைக் கண்ட கௌதம முனிவர் துன்பக்கடலுளமிழ்ந்தத் தாருகாவனத்து முனிவர்கள், பசுக்கொலை புரிந்த பாவியினுடைய கிருகத்தில் விரும்பியுண்டால் அப்பாவம் எமக்குஞ் செருமென்று சொல்லிக்கொண்டு, தம்முடைய இடங்களையடைந்தார்கள். கௌதமமுனிவர் ஞானக்கண்ணாலுற்றுணர்ந்து அவர்கள் செய்தது வஞ்சனையென்றறிந்து, "வேதவொழுக்கத்தினின்று நீங்கிச், சிவபெருமானிடத்தன்பின்றிக் கொடிய துன்பக்கடலில் விழுந்தமிழ்ந்துவார்களாக" என்று கோபத்தோடு சபித்தனர். அவ்விதமே

அவர்கள் அஞ்ஞானிகளாய், வேதமோதல் முதலிய நற்கிரியைகளை விடுத்துத் தவவொழுக்கத்தினின்றும் நீங்கிக் கன்மமலத்தினுற் கட்டப்பட்டுத் துன்பமாகிய சமுத்திரத்திலமிழ்ந்தி, மீமாஞ்ச மதப்பிரவேசஞ்செய்து அசுத்தராஞர்கள். சிவபெருமாஞனவர், பரதந்திரர்க ளான மற்றய ஆன்மாக்கள் இவர்களைப் பின்பற்றிக் கெட்டுப்போவார்களென்பதையும், கடவுளின் கிருபை யாலன்றிப் புண்ணியஞ்செய்தல் முடியாதென்பதையும், "பரனடிக்கன் பிலாதார் புண்ணியம் பாவமாகும்" என் பதையும் எல்லா ஆன்மாக்களுக்கு முணர்த்தல் காரண மாகவும், முன்னர்க் காமமுங்கோபமும் அவர்களுக் குண்டாக்குவதாகிய திருவுருவத்தைப் பொருந்திச் சென்று, காமிகளுங்கோபிகளுமாகச் செய்து, அவர் களது ஆணவ மலசக்தியையுங் கருமத்தையுமழித்து, ஞானத்தைப் பயப்பதாகிய திருமேனியைக்காட்டி, மெய்ஞ்ஞானத்தைக் கொடுத்துச் சுத்தவைதிக சைவர் களாக்கும்படி திருவுள்ளங்கொண்டனர்.

பின்பு சிவபெருமான், அதிபாதகர்களாகிய முனி வர்களுக்குத் தம்முருவங்காட்ட வொண்ணுமையின், விட்டுணுவையழைத்து மோகினி வடிவங்கொள்ளும்படி செய்து, முனிவரை மயக்கவிடுத்து, அற்ப பாதகிகளா கிய முனிபத்தினிமாரை மயக்கியருளும்பொருட்டு, வேதரூபமாகிய கௌபீனத்தையும், சிவஞானமாகிய பூணூலையும், முச்சத்தி வடிவானதும் மும்மலங்களை நீக்குவதுமான சூலத்தையும், பராசத்தி வடிவானதும் அன்பான பிச்சையேற்பதுமாகிய பிக்ஷாபாத்திரத்தை யும், நாதரூபமானதும், ஞானத்தைக் கொடுப்பது மாகிய உடுக்கையையும், மலபரிபாகஞ் செய்வதும் திரோதான சக்தி ரூபமானதுமாகிய பாதுகையையும், சிவஞான ரூபமாகிய விபூதிப்பையையுஞ் தரித்துக் கொண்டு மோகினியுடன் சென்ருர்.



மோகினி தபோவனத்தையடைய முனிவர்கள் கண்டு மிகக்காமிகளாகிப் பின்சென்ருர்கள். பிக்ஷாடன மூர்த்தியானவர் முனிபத்தினிமார்களுடைய வீதிகளிற் போய், அவர்களைச் சுத்தர்களாக்கும்பொருட்டுக் தமது திருவுருவத்தைக்காட்ட, அவர்கள் பிட்சையிடும்படி வந்து திருவுருவைக்கண்டு காமித்துப் பேராசைவைத் துப் பார்வை மாத்திரத்தாலே கருப்பவதிகளாயினர்.

புருடர்களது சேர்க்கையின்றிச் சிவதரிசனத்தாலா கிய கருப்பத்திலே பிறக்கவேண்டுமென்று நினைத்துத் தவஞ்செய்த நாற்பத்தெண்ணுயிரம் முனிவர்களும் அக்கருப்பத்தினின்றும் பிறந்து வணங்கிக் கடவுளு டைய அனுமதிப்படி தவஞ் செய்யப் போயினர்.

முனிபத்தினிமார்களாற் சூழப்பட்டுச்சிவபெருமான் செல்ல, முனிவர்களாற் சூழப்பட்டு மோகினி சிவ சன்னிதானத்தையடைந்தார்.

முனிவர்கள் தமது மனைவிமாருடைய கற்பழிந்த மையைக்கண்டு காமமொடுங்கக் கோபமதிகரித்தனர். இதனைச்செய்தவர் சிவனும் விட்டுணுவுமேயென்பதை யறிந்து பெருங்கோபங்கொண்டு சிவனைகொல்லவேண் டுமென நினைத்து ஒரு அபிசாரவேள்வி செய்தார்கள். அவ்வோமகுண்டத்தினின்று மெழுந்த புலி முதலிய வற்றை முனிவர்கள் அனுப்பச் சிவபெருமான் புலியை யுரித்துத் தோலையுடுத்தும், மழுவையும் மானையும் கரத்திற்ருங்கியும், பாம்புகளை யாபரணமாகவணிந்தும், பூதங்களைச் சேனைகளாக்கியும், முனிவர்களது ஆணவ மலமாக வந்த முயலகனைக் காலால் மிதித்தும் நின்றனர். பின்பு ஓமகுண்டத்திற் பொருந்திய அத்கினியையனுப்ப அதனை யேந்தினர். பின்பு அனுப்பிய மந்திரங்கள் உடுக்கை வடிவாகிச்செல்ல, அதனைத் திருக்கரத்தில் தரித்தனர். முனிவர்கள் தாம் அனுசரித்து வந்த மீமாஞ்சைமதம் பொய்பட்டமையிற் சோர்வடைந்தனர்.

"காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
னுமங் கெடக் கெடுநோய்"

எனத் திருவள்ளுவர் கூறியபடி மலநோயினின்றும் நீங்கிப் பக்குவர்களாயினர். அவர்களது பக்குவமுதிர்ச்சியைக் கண்ட சிவபெருமான் ஆணவரூபமாகிய முயலகன் மீது மிதித்து நின்று பஞ்சகிருத்திய நிருத்தத்தைச் செய்தனர். அந்நடனத்தைக்கண்ட முனிவர்கள் பயந்து பூமியில் விழுந்து சிவனருளாலெழுந்து சிவஞானத்தைப் பெற்று வணங்கினர். சிவபெருமான் முனிவர்களைப் பார்த்து, "நீங்கள் இந்நாள்வரையுந் துன்மார்க்க வழியில் நின்று மோகர்களாயினீர்கள். இப்பொழுது உங்களுடைய மோகத்தை நீக்கினோம். இனி நீங்கள் சைவமார்க்கத்தையனுசரித்து, வீபூதி உருத்திராக்கந் தரித்துச் சிவலிங்கப் பிரதிட்டைசெய்து, இடையில் விடாதபடி பூசித்துப் போக மோட்சங்களையடையுங்கள்" என்று கூறியருளித் திருக்கைலாசமலையிற் சென்று வீற்றிருந்தருளினர்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

பண் - நட்டராகம்.

"சூடல் வெண்பிறையினர் சுடர்முடியர்
சுண்ண வெண்ணீற்றினர் சுடர்மழுவாள்
பாடல் வண்டிசை முரல் கொன்றையந்தார்
பாம்பொடு நூலவையசைந் திலங்கக்
கோடனன் முகிழ்விரல் கூப்பிநல்லார்
குறையுறு பலியெதிர் கொணர்ந்து பெய்ய
வாடல் வெண்டலை பிடித்திவராணீர்
வாய் மூரடிகள் வருவாரே"



திருவாசகம்

"அம்பலத்தே கூத்தாடி அமுது செயப் பலிதிரியும்
நம்பனையுந் தேவனென்று நண்ணுமது வென்னேடீ
நம்பனையு மாயா கேளுன் மறைகடாமறியா
வெம்பெருமானீசாவென் றேத்தினகாண் சாழலோ"

சிவபெருமான் மோகினியைப்பார்த்து, "உனக்கு யாது வரம் வேண்டும்" என வினவியருள, "அடியேன், தேவரீருக்குச் சத்தியாகும் வரத்தைத்தந்தருள வேண்டும்" என்று பிரார்த்திக்க, அவ்வரத்தைக்கொடுத்தனர்.

சிவபிரான் பிக்ஷாடனமூர்த்தங் கொண்டது மீமாஞ்சைமதத்தைப்பற்றி அதிமோகிகளாயிருந்த இருடிகளைச் சுத்த வைதிக சைவ மார்க்கத்திலே நிறுத்தியருளும் கிருபையேயாம்.

## 7. காமாரி

சிவபெருமானைத் தேவர்களிலொருவரென்று மன்மதன் நினைத்துப் புஷ்பபாணங்களைச் செலுத்திப் பொருத, கடவுளுடைய நெற்றிக் கண் அக்கினியாற்சாம்பராயினன். ஆகையால் எவர்களாயினும் இங்ஙனம் நினைப்பார்களே ஆனால் அக்கினி நரகத்தில் வீழ்ந்து வருந்துவார்கள்.

ஆன்மாக்களிடத்தில் பகையும் அன்பும் சிறிதுமின்றி எல்லாவுயிர்களுக்குமுள்ள கன்மங்களை அறிந்து அவற்றிற் கேற்பமுறை புரிபவரென்பதும். தம்மை எதிர்த்து அகங்கரித்து வந்த பாவத்தை நீக்குதற் பொருட்டும், அவ்வாறு எதிர்த்தவர்கள் தண்டிக்கப் படுவார் என்பதும் உணர்த்துதற்குமாகவே மன்மதனை எரித்தருளினர் என்பது உணரப்படும்.

சிவபெருமான் "வேண்டாமை வேண்டுவதுமிலார்" (திருநாவுக்கரசு சுவாமிகள்) என்பது குற்றஞ் செய்யாத மன்மதன் பக்கலாக நின்ற இரதியை அழியாமையானும், மீளமன்மதனையெழுப்பித் தொன்மை போல அரசுரிமை முதலியன கொடுத்து இன்பஞ் செய்தமையானும் பெறப்படும்.

விட்டுணுவுக்குக் காத்தற் றொழில் சுதந்திரமல்ல என்பது சிவபெருமான் காமனை எரித்தருளிய சரித்திரத்தால் உணரப்படும். சுதந்திரமாயின் தன் மகனாகிய மன்மதனைச் சிவபெருமான் நீருக்கிய காலத்து நீறுபடாமற் காத்திருக்கலாம். அங்ஙனம்செய்யாமையினாலே அவருக்கு அத்தொழில் சுதந்திரமல்ல வாதல் அறிக. சிவபெருமான் காமனைத் தகித்தமையானும், தக்கனுடைய யாகத்தை அழித்தமையானும், அந்தகாசுரன், சலந்தராசுரன் என்பவரை வதைத்தமையானும், வீரரென்று இருக்கு வேதத்திற் புகழப்பட்டார். பகைத்து வந்த மன்மதனை எரிக்கும்படி சிவபெருமான் காமசங்கார மூர்த்தி ஆனமையால் அறிஞர்கள் அதிகரித் தெழுகின்ற காமாக்கினியை அடக்கப் பெற்றார்கள், நாமும் இம்மூர்த்தியை அதிகரித் தெழுகின்ற காமாக்கினியை அடக்கியருள வேண்டுமென்று வணங்குதல் வேண்டும்.

## திருநாவுக்கரசு நாயனார்

பண் — பழம்பஞ்சுரம்

கழைபடுகாடு தென்றல் குயில் கூவவஞ்சு
கணையோனணைந்து புகலும்
மழை வடிவண்ண னெண்ணி மகவோனை விட்ட
மலரான தொட்ட மதனன்



எழில்பொடி வெந்து வீழ விமையோர் கணங்க
ளெரியென்றி றைஞ்சிய கலத்
தழல் படுநெற்றி யொற்றை நயனஞ் சிவந்த
தழல் வண்ண னெந்தை சரனே.

## திருஞான சம்பந்த நாயனார்

பண் — குறிஞ்சி

கண்ணிற் கனலாலேகா மன்பொடியாகப்
பெண்ணானுக் கருள் செய்த பெருமானுறை கோயில்
மண்ணிற் பெருவேள் விவளா தீப்புகை நாளும்
விண்ணிற் புயல் காட்டும் வீழி மிழலையே.

## 8. காலாரி

மிருகண்டு முனிவர் புத்திரராகிய மார்க்கண்டேயர் யமனைவெல்லும் பொருட்டு காசியை அடைந்து மெய்யன்போடு சிவார்ச்சனை செய்தனர். அவர் பொருட்டாகவும், தம்மைத் தியானஞ் செய்த சிவாதன முனிவருடைய புத்திரராகிய திருநந்திதேவர் பொருட்டாகவும், திருவெண்காட்டில் சுவேதகேது என்னும் பிராமணன் பொருட்டாகவும், சுவேதராசன் பொருட்டாகவும் ஒவ்வோர் கற்ப காலத்தில் சிவபெருமான் இயமனை உதைத்தடக்கியருளினார். இதனாற் சிவபெருமான் காலாரி எனப்படுவர்.

## திருநாவுக்கரசு நாயனார்

நேரிசை

தோடுலாமலர்க ளுதித்தொழு தெழுமார்க் கண்டேயர்
வீடுநாளணு கிற்றென்று மெய்கொள்வான் வந்தகாலன்
பாடுதான் செலலுமஞ்சிப் பாதமேசரண மென்னச்
சாடினார் காலன்மாளச் சாய்க்காடு மேவினாரே.

---

பெண் — இரதி.

## சுந்தரமூர்த்தி நாயனர்

பண்—தக்கேசி

அந்தணுளனுன் னடைக்கலம் புகுத
வவனைக் காப்பது காரணமாக
வந்த காலன் றனுருயிரதனை
வவ்வினுய்க் குன்றன்வன்மை கண்டடியேன்
எந்தைநீ யெனை நமன்றமர் நலியி
லிவன்மற்றென் னடியானென விலக்குஞ்
சிந்தையால் வந்துன்றிருவடி யடைந்தேன்
செழும்பொழிற் றிருப்புன் கூருளானே.

## திருஞானசம்பந்த மூர்த்தி நாயனர்

பண்—சிறீகாமரம்

வேலைமலி தண்கானல் வெண்காட்டான் றிருவடிக்கீழ்
மாலைமலி வண்சாந்தால் வழிபடுநன்மறையவ னறன்
மேலடர் வெங்கால னுயிர்விண்டவினை நமன்றூதர்
ஆலமிடற் றனடியாரென் றடரஞ்வசுவரே,

சிவபெருமான் உதைக்க விறந்த இயமனை யெழுப்பியருளினுர்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

காலபாசத் திருக்குறுந்தொகை

வாமதேவன் வளநகர் வைகலும்
காமமொன்றிலராய்க் கைவிளக்கொடு
தாமந்தூபமுந் தண்ணறுஞ் சாந்தமும்
ஏமமும் புனைவாரெதிர் செல்லவே.



சிவபெருமான் இயமனை உதைத்துக் கொல்லும்படி காலாரி மூர்த்தங் கொண்டமையால் உலகத்திலே பரிபக்குவமாயுள்ள மேலவர்கள் அவனுடைய அச்சத்தினின்றும் ஒரு சிறிது நீங்கப் பெற்றுர்கள்.

## 9. திரிபுராரி

முப்புரங்களையும் ஒரு நொடியளவிற் பொடி செய்த திருக்கோலமே திரிபுரசங்கார மூர்த்தமெனவும், திரிபுராரி மூர்த்தமெனவும் கூறப்படும்.

சிவபெருமான் திரிபுரசங்காரம் செய்யப் போந்த விடத்துத் தேருக்குப் பிரமா சாரதியாகவும், மற்றைய தேவர்கள் தேரின் உறுப்புக்களாகவும், பாணமாகவும் அமைந்தார்கள் எனக் கூறப்படுதலானும் அக்கினி பசுவாயிருந்தான். வாயு பசுவாயிருந்தான், ஆதித்தியன் பசுவாயிருந்தான், என்று கிருஷ்ணயசுர்வேதம் கூறப்படலானும், உபலக்கணையால் விட்டுணு முதலிய தேவர்களெல்லாம் பசுக்களேயாக சிவபெருமான் ஒருவரே பசுபதி யென்பது பெறப்பட்டது,

அருந்தவ முனிவராகிய அகத்தியர் பூமியைச் சமப்படுத்துதற் பொருட்டு இத்திரிபுரசங்காரமூர்த்தத்தையே தியானித்துக் கொண்டு பொதியமலையிலிருந்தார்.

முண்டகன் வலிகொண்டுற்ற மூவெயிலழிப்பான் முன்னி
யண்டமும் புவனமுற்று மாகியகொடிஞ் சிமான்றேர்
பண்டொருபதத் தாலூன்றிப் பாதலத்திட்ட வண்ணல்
கொண்ட தொல்லுருவமுன்னிக் குறுமுனியங் கணுற்றுன்.
எனக் கந்தபுராணங் கூறுமாற்றுலுணர்க.

முப்புரத்தவுணர்கள் சிவபூசா நியமமுள்ளவர்களாக ஒழுகினுர்களாயினும், தேவர்களுக்குத் துன்பம் செய்பவர்களாயிருந்தார்கள். விட்டுணு ஒரு புத்த வடிவங் கொண்டு நாரதர் சீடராகவர அவுணர்களையடைந்து

பௌத்த மதக் கொள்கைகளை உபதேசித்தார். விரத்தன், பரமயோகன், குணபரன் என்னும் மூவரொழிந்த மற்றெல்லோரும் விட்டுணுவினுடைய துர்ப்போதனையில் மயங்கிப் பாபிகளானார்கள். சிவபெருமான் தேவரை வருத்திய திரிபுரத்தவுணரைச் சங்கரிப்பதற்குத் தேரிற் சென்றருளினார். முப்புரங்களும் ஓரிடத்துச் சேர்ந்தன. சிவபெருமான் புன்னகை செய்தருளினார், சிரிப்பினின்றுமெழுந்த கோபாக்கினியினால் முப்புரங்களுமழிந்து சாம்பராயின.

சிவார்ச்சனையில் அன்புடையவர்களாய் விளங்கிய விரத்தன் முதலிய மூவரும் ஆனந்தக் கண்ணீர் பெருகிச் சிவத்தியானமுடையவர்களாய் நின்றார்கள். இகல் பற்றில்லாதவராகிய சிவபெருமான் அவர்களுக்குத் திருவாசற் காவற்றொழிலைக் கொடுத்துக் கணங்களோடு சேர்த்தருளினார்.

சிவபெருமான் முப்புர தகனம் செய்ய எழுந்தருளுங் காலத்தில் சாரதியாயிருந்த பிரமா தனது தேவியான கலைமகளது பிரிவாற்றாராய் வாட, அதையொழிக்கும்படி விபூதியணிந்து பிரமாவின் முன்னர் இறைவனேசரசுவதி வடிவாய் ஒரு கூத்து ஆடியருளினார், அது பாண்டரங்க மெனப்படும்.

தேவதேவர் தேரைத் திருவடியாலூன்றிப் பாதலத்தி வாழ்த்தியது தேவர்களது அகங்கார மமகாரங்களை யழித்தற் பொருட்டாம், இச்சரித்திரத்தினாலே சிவார்ச்சனையை மெய்யன்போடு செய்தவர்கள் சிவகதியடைவரென்பதும், செய்யாது வழுவினோர் தண்டிக்கப்படுவார் என்பதும் உணரப்படும் இது ஏழுவகை நடனங்களுள் நான்காவதாகிய திரிபுரதாண்டவ மெனப்படும்.



## திருநாவுக்கரசு சுவாமிகள்

### ஆதிபுராணத் திருக்குறுந் தொகை

"தாயினுநல்ல சங்கரனுக் கன்பர்
ஆயவுள்ளத் தமுதருந்தப் பெற்றார்
பேயர் பேய் முலையுண்டுயிர் போக்கிய
மாயன் மாயத்துப் பட்டமனத் தரே."

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### பண் — நட்டபாஷை

"கல்லாலநிழற் கிழாயிடர்காவா யெனவானோ
ரெல்லா மொருதேராயயன்மறை பூட்டிநின்றுய்ப்ப
வல்லா யெரிகாற்றீர்க் கரிகோல் வாசுகி நாண்கல்
வில்லா லெயிலெய்தானிடம் வீழிம் மிழலையே."

## சுந்தர மூர்த்தி நாயனார்

### பண் — தக்கேசி

"மூவெயில் செற்றஞான்றுய்ந்த மூவரி
லிருவர் நின்திருக்கோயிலின் வாய்தல்
காவலாள ரென்றேவிய பின்னை
யொருவநீகரி காடரங்காக
மானைநோக்கியோர் மாநடமகிழ
மணி முழாமுழக்கவருள்செய்த
தேவதேவ நின்றிருவடியடைந்தேன்
செழும் பொழிற்றிருப்புன் கூருளானே."

### திருவாசகம்

"எண்ணுடை மூவிராக்கதர் களெரி பிழைத்துக்
கண்ணுதலெந்தை கடைத்தலை முன்னின்றதற்பி
னெண்ணிலியிந்திர ரெத்தனையோபிரமர்களு
மண் மிசை மால்பலர் மாண்டனர் காண்தோணோக்கம்."

சிவபெருமான் வலிமை பொருந்திய முப்புரங்களை யெரிக்கத் திரிபுரசங்காரமூர்த்தங் கொண்டமையால், புண்ணியான்மாக்கள். மலநீக்கிமெய் தியவர்களாய், முக்குணநீக்கத்தையும் பெற்றுர்கள்

## 10. சலந்தராரி

சலந்தரன் : சவம் - கோபம்; தரன் - தரித்தவன். எனவே சவந்தரன் என்பது உருத்திரமூர்த்தியின் கோபத்திற் பிறந்தவன் எனப்பொருள்படும்.

உருத்திரமூர்த்தியின் கோபத்திற் பிறந்த இச்சலந்த ராசுரன் காஞ்சீபுரத்தையடைந்து சிவலிங்கமொன்ற மைத்து நாடோறும் பூசையையுந் தவத்தையுஞ் செய் தான். ஏகாம்பரநாதசுவாமி காட்சிகொடுக்க வணங்கி, ''ஆன்மைத்தன்மையையும், வெற்றியையும், அரசுரிமை யையும் வலியையும் தேவரீராலன்றி மற்றையோரால் இறவாமையையும் இறப்பினும் இக்காஞ்சீபுரத்திற் பெருமை பொருந்திய முத்தியையடைதலாகிய வரத்தை யுந் தந்தருளுக'' என்று பிரார்த்திக்க, ''அவ்விதமே யாகுக'' என்று கிருபைசெய்து மறைந்தருளினுர்.

சலந்தரன் சாலாந்தரம் என்னும் நகரையுண்டாக்கி அதிலிருந்து அரசு செய்யுங்காலத்தில், இந்திரன் முத லிய எண்டிசைக்கிறைவரையும் பிரமனையும் வென்று விட்டுணுவினுடன் எதிர்த்துப் பலகாலம் யுத்தஞ் செய் தான். அவரும் ஆற்றுது புகழ்ந்து போயினர். அச் சமயத்தில் இந்திரன் முதலிய தேவர்கள் சலந்தரனுக் குப் பயந்து திருக்கைலாசமலையையடைந்தார்கள். அவனுங் கைலாசமலையையடைய இந்திரன் முதலிய தேவர்கள் சிவசந்நிதானத்தையடைந்து நமஸ்கரித்துத் தோத்திரஞ் செய்தார்கள். புராந்தகர் ஒரு திருவிளை யாடலைத் திருவுள்ளத்துக் கருதி விருத்தப்பிராமண



வேடங்கொண்டு, சவந்தரனுக்கு எதிரே போய் "நீ யார்?'' என்று வினுவினுர். அவன் "என்பெயர் சலந் தரன்; தேவர்களை வென்று சிவபெருமானையும் வெல் லும்படி ஈண்டு வந்தேன்'' என்று கூறினுன். அத னைக் கேட்ட பிராமணர் ''அரசனே! யான் கைலாச பதிக்குச் சமீபத்திலிருப்பவன் அவரோடு போர் செய் தால் நீ இறப்பாய்; ஆகையால் மீண்டு செல்லுதி" என்று கூறினர். அதைக்கேட்ட சலந்தரன் கோபமுற்று ''அந்தணரே! நீர் ஓர் கணப்பொழுது நின்று என் வலி யைப் பாரும்'' என்று கூறினுன். அந்தண வடிவங் கொண்ட சிவபெருமான் ''யாமும் அதைக் காணும் படி வந்தோம்'' என்று கூறித் தமது திருவடியினுலே பூமியில் ஒரு சக்கரத்தைக் கீறினுர். அது சக்கராயுத மாதலும், சலந்தரனைப் பார்த்து இதனை நீ உன் வலிமை யாற் றூக்கிச் சிரசில் வைப்பாயா?'' என்றனர். இதனைத் தாங்குவது எனக்கு ஒரு அரிய செயலா? என்று சலந்தரன் கூறிச் சக்கரப்படையைக் கையி லெடுத்தான். அது பெரும்பாரமாயிருந்தபடியாற் பெரு மூச்சுவிட்டு மார்பிலும் புயத்திலும் தாங்கி ஒருவாறு சிரத்தில் வைத்தான். சக்கரப்படை அப்பாதகனுடைய உடம்பை இரண்டு பிளவாக்கிச் சிவபெருமானுடைய திருக்கரத்தில் வந்திருந்தது.

பின்பு பரமசிவன் சலந்தரனுடைய சேனைகளைத் தமது நெற்றிக்கண்ணுற் பார்த்து எரித்து, இந்திரன் முதலியோருக்குத் தமது திருவுருவத்தைக் காண்பித் தனர். அவர்கள் வணங்கி அனுமதியைப் பெற்றுக் கொண்டு தத்தமிடங்களை யடைந்தனர்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

பண் - சாதாரி

ஆருமெதிராத வலியாகிய சலந்தரனையாழியதனல்
ஈரும்வகை செய்தருள் புரிந்த வனிருந்த மலைதன்னை வினவில்
ஊருமரவம் மொளிகொண் மாமணியுமிழ்ந்த வையுலா விவரலால்
காரிருள் கடிந்து கனகம் மென விளங்கு காளத்திமலையே.

## திருமந்திரம்

எங்குங் கலந்து மென்னுள்ளத் தெழுகின்ற
வங்க முதல் வனருமறை யோகிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர் செல்வ நீர்மையி
னங்கு விரற்குறித் தாழி செய்தானே,

சலந்தராசுரன் சக்கரப்படையாலிறந்த பின் காஞ்சியில் ஒளிப்பிழம்பாகத் தோன்றித், தான் முன்னரே வழிபட்ட இலிங்கமூர்த்தத்தில் இரண்டறக் கலந்தான்.

சிவபெருமான் சலந்தரனை வதைத்தருளியமையாற் சலந்தராரி எனப்படுவர்.

## 11. மாதங்காரி

யானைவடிவுடைய கயா சுரனென்பவன் மேருமலையிற் சென்று பிரமாவைக்குறித்துத் தவஞ் செய்ய, அவர் தோன்றி விரும்பியவரங்களைக் கொடுத்து "அன்பனே! சிவபெருமானேடு எதிர்ப்பாயாகில் இவை அழிவடையும்" என்று கூறிச் சென்றனர். கயாசுரன் சிவபெருமானை எதிர்க்காது மற்றையோருடன் யுத்தஞ் செய்து அவர்களை வெற்றி கொள்வேன் என்று நினைத்துப் புறப்பட்டுத் தேவபதவிகடோறுஞ் சென்று



அவர்களை வெற்றி கொண்டு இந்திரனுடன் யுத்தஞ் செய்து வென்று பொன்னுலகை அக்கினிக்கு இரையாக்கி அவுணர் முதலாயினேரையும் வென்ருன். பின்பு முனிவர்களை எதிர்க்க அவர்கள் காசியை அடைந்தனர். அவன் அவ்விடத்திலுந் தொடர்ந்து செல்ல, முனிவர்களஞ்சித் தமக் கொப்பாரு மிக்காரு மின்றி எழுந்தருளியிரா நின்ற விசுவநாதரை அடைக்கலம் புகுந்தனர். அது கண்ட அசுரன் கோபித்து மணி கன்னிகைவாயிலை அடைந்தான். பெருமான் முனிவருக் கிரங்கியருள் செய்து உக்கிரவடிவு கொண்டு உடுக்கையையும் சூலத்தையும் திருக் கரங்களிற்றுங்கிய வரா யெழுந்து திருவடியினுலுதைக்கக் கயாசுரன் பூமியில் விழுந்தான். பின்பு அவர் தமது திருக்கர நகத்தினுல் முதுகைப் பிளந்து தோலையுரித்துப் போர்த்தனர்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

திருநேரிசை

விரித்தபல் கதிர் கொள் சூலம் வெடிபடுதமருகங்கை
தரித்த தோர் கோலகால பயிரவனுகி வேழம்
உரித்துமையஞ்சக் கண்டு வொண்டிரு மணிவாய் விள்ளச்
சிரித்தருள் செய்தார் சேறைச் செந் நெறிச் செல்வனுரே.

## நக்கீரதேவ நாயனர்

"மும்மதத்து வெண் கோட்டுக் கார்நிறத்துப் பைந்தறு கண்
வெம்மதத்த வேகத்தான் மிக்கோடி — விம்மி
யடர்த்திரைத்துப் பாயுமடு களிற்றைப் போக
வெடுத் துரித்துப் போர்த்த விறை போற்றி."

### திருவாசகம்

அத்தியுரித்தது போர்த்தருளும் பெருந்துறையான்
பித்த வடிவு கொண்டிவ்வுலகிற் பிள்ளையுமாம்
முத்தி முழுமுதலுத்தர கோசமங்கை வள்ளல்
புத்தி புகுந்தவா பூவல்லி கொய்யாமா.

## 12. வீரபத்திரர்

பிரமதேவருடைய புத்திரனாகிய தக்கன் சிவபெருமானைக் குறித்துத் தவஞ் செய்ய அவர் தோன்றிய ருளி அவன் விரும்பிய வரங்களைக் கொடுத்தருளினர், அவன் செல்வச் செருக்கினால் பரமசிவனது மகிமைகளை மறந்து இகழ்ந்து விஷ்ணுவை யாகாதிபதியாக வைத்து ஒரு யாகத்தைச் செய்யத் ததீசி முனிவர் வந்து நற்புத்திகளைப் போதிக்கவும் அவைகளை அங்கீகரியாதவனாய் இகழ்ந்தான்.

சிவபெருமான் அவன் மீதிரங்கி அவனை அடிமைக் கொள்ளுமாறு திருவுள்ளங் கொண்டு வீரபத்திர மூர்த்தியாயினர். சத்தியும் பத்திரகாளி என்னும் நாமத்தைப் பொருந்தி, இடப்பாலில் வர வீரபத்திரக் கடவுள் பூதர்களுடனும் காளியுடனுஞ் சென்று யாகசாலையை யடைந்து அவிப்பாகத்தைக் கேட்க தக்கன் கொடாதிகழ்ந்தமை கண்டு திவதூஷணஞ் செய்த வருக்கேற்ற தண்டனையிது வென்று தமது திருக்கரத்திற்றுங்கிய ஞானவாட்படையினால் அவனது சிரசைவெட்டி, அஞ்ஞானிகளறிந்துய்யும்படி யாகப்பசுவுளிறந்த ஒரு ஆட்டின் தலையை அவனது குறையுடம்பில் வைத்துப் பொருத்தி "தக்கனே! எழும்புதி" என்று எழுப்பி, அஞ்ஞான விருளை நீக்கி நல்லுணர்வுண்டாகும்படி செய்தனர். தக்கனெழுந்து நமஸ்காரஞ் செய்து காசியையடைந்து சிவபூசை செய்தான். சிவபெருமான்



அவன் செய்த பூசைக்கிரங்கிச் சுத்தனாக்கிக் கணத் தலைவனாக்கினர்.

### திருநாவுக்கரசு நாயனர்

#### திருத்தாண்டகம்

எச்சனிணத்தலை கொண்டார் பகன் கண் கொண்டா
ரிரவிகளி லொருவன் பல் லிறுத்துக் கொண்டார்
மெச்சன் வியாத்திரன்றலையும் வேறுக் கொண்டார்
விறலங்கி கரங் கொண்டார் வேள்வி காத்து
உச்ச நமன் றாளறுத்தார் சந்திரனையு தைத்தா
ருணர் விலாத்தக் கன்றன் வேள்வியெல்லாம்
அச்ச மெழ வழித்துக் கொண்டருளுஞ் செய்தா
ரடியேனை யாட் கொண்ட வமலர்தாமே.

"உதைத் தவன் காணுண ராத தக்கன் வேள்வி
யுநண்டோடத் தொடர்ந் தருக்கன் பல்லை யெல்லாந்
தகர்த் தவன் காண்டக் கன்றன் றலையைச் செற்ற
தலையவன் காண் மலைமகளா முமை யைச்சால
மதிப் பொழிருந்த வல்லமரர் மாண்டார் வேள்வி
வந்த வியுண்டவ ரோடு மதனை யெல்லாஞ்
சிதைத் தவன் காண்டிருமுண் டீச்சரத்து மேய
சிவலோகன் காணவ னென் சிந்தையானே.'

### மாணிக்கவாசக சுவாமிகள்

பண்பட்ட தில்லைப் பதிக்கரசைப் பரவாதே
யெண்பட்ட தக்கனருக்க னெச்சனிந்து வனல்
விண்பட்டிட பூதப்படை வீரபத்திரராற்
புண்பட்டவா பாடிப் பூவல்லி கொய் யாமோ.

## 13. அரியர்த்தர்

விட்டுணு மூர்த்தியானவர் சிவபெருமானுடைய பாதித் திருமேனியைப் பெறவிரும்பிச் சிவபூஜை செய்ய இறைவர் பிரசன்னராகி, நீ எம்முடைய இடப் பாகத்தைப் பொருந்துதி இனி உன்னுடைய பெயர் மாயனாகுக என்று திருவாய் மலர்ந்து. வலப்பாவிற் கொன்றைப் பூவும், இடப்பாலில் துளசியும் வலப்பாவில் புலித்தோலுடையும் இடப்பாலில் பீதாம்பரமும் வலத்திருக்கரத்தில் மானும் இடந்திருக்கரத்தில் சக்கரமும், வலப்பாலில் செந்நிறம் பொருந்திய தமது திருவுருவமும். இடப்பாலில் பச்சை நிறம் பொருந்திய விஷ்ணுவினுடைய திருவுருவமும் ஒருங்கு பொருந்த அரியர்த்தர் என்னுந் திருக்கோலத்தைக் கொண்டருளினார்.

காசிகாண்டம்

ஆற்றல் வடிவாட்டங் கையவுணரானு
மகல்விசும்பு தனிபுரக்கு மமரரானு
மாற்றரிதா யெவ்வுயிர்க்கு மயக்கஞ் செய்யு
மாயை நினக்களித்தன மெம்மிடப்பானியே
யூற்றிருந்து நறவொழுகுந் துளவத்தாரோ
யுனையிகழ்ந்தோ ரெமையிகழ்ந்தோ ரென்னவோதி
யேற்றையிருங் கொடியுயர்த்த செக்கர்வேணி
யிறைவனுயர் தடங்கயிலை யெய்தினனே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

திருநேரிசை

எரியலாலு ருவமில்லை யேறலா லேறலில்லை
கரியலாற் போர்வையில்லை காண்டகு சோதியார்க்குப்
பிரிவிலாவமரர் கூடிப் பெருந்தகைப் பிரானென்றேத்தும்
அரியலாற் றேவியில்லை யையனை யாறனார்க்கே'



### சேரமான் பெருமாணாயனார்

இடமால் வலந்தானிடப் பாறுழாய் வலப்பாலொண் கொன்றை
வடமா லிடந்து கிரேல்வல மாழியிடம் வலமா
னிடமால் கரிதரல் வலஞ்சேதி வனுக்கெழி னலஞ்சேர்
குடமாலிடம் வலங்கொக்கரையா மெங்கள் கூத்தனுக்கே.

## 14. அர்த்தநாரீசுரர்

உமாதேவியார் சிவபெருமானுடைய பாதித்திருமேனியைப் பெற விரும்பித் தவஞ்செய்ய, இறைவனார் பிரசன்னராகி வலப்பாற் புலித்தோலுடையும் இடப்பால் துகிலும், வலத்திருச் செவியிற் குண்டலமும், இடத் திருச்செவியில் தோடும், வலத்திருமேனியில் பால் போன்ற விபூதியும், இடத்திருமேனியில் பசியசாந்தும் வலத்திருக்கரத்தில் சூலமும், இடத்திருக்கரத்தில் பசிய கிளிப்பிள்ளையும் வலப்பால் தமது திருரூபமும் இடப் பால் உமாதேவியாருடைய திருரூபமும் பொருந்த அர்த்தநாரீசுவர மூர்த்தங் கொண்டருளினார்.

### திருநாவுக்கரசு நாயனார்

பண்—பியந்தைக்காந்தாரம்

புதுவிரிபொன் செயோலை யொருகா தொர்காது
சுரிசங்க நின்று புரள
விதிவிது வேதகீத மொருபாடு மோதவொருபாடு
மெல்ல நகுமால்
மதுவிரி கொன்றை துன்றுசடையாக மாதர்
குழல் பாகமாக வருவர்
இதுவிவர் வண்ணவண்ண மிவள் வண்ணவண்ண
மெழில் வண்ண வண்ண மியல்பே.

## மாணிக்கவாசக சுவாமிகள்

தோலுந் துகிலுங் குழையுஞ் சுருடோடும்
பால் வெள்ளை நீறும் பசுஞ்சாந்தும் பைங்கிளியுஞ்
சூலமுந் தொக்க வளையுமுடைத் தொன்மைக்
கோலமே நோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ.

## நம்பியாண்டார் நம்பிகள்

கங்கைவல மிடம்பூ வலங்குண்டலந் தோடிடப்பாற்
றங்கும் கரம்வலம் வெம்மழுவியிடம் பாந்தன்வலஞ்
சங்கமிடம் வலந்தோலிட மாடைவல மக்கிட
மஞ்சஞ்சரி யம்பலவன் வலங்கானிட மணங்கே.

## 15. கிராதர்

சிவபெருமான், அருச்சுனன் தவஞ் செய்யும் பொழுது, அவனைக் கொல்லும்படி துரியோதனன் அனுப்பிய மூகாசுரனென்னும் பன்றியைக் கொல்லும் பொருட்டும் அவன் செய்த தவத்திற் கிரங்கிப் பாசுபதங் கொடுத்தற் பொருட்டும் உமாதேவியார் வேடுவிச்சி யுருக்கொண்டு சுப்பிரமணியராகிய குழந்தையைத் தாங்கிப் பின்செல்லச் சிவகணங்கள் கிராதரூபத்தைப் பொருந்திவர, மறைகளாகிய நாய்கள் வளைந்து செல்லத் தாம் வேட்டுவத் தலைவராய்த் திருக்கரங்களில் அம்பும் வில்லும் பரித்துச் சென்று பலவாறாகிய திருவிளையாடல்களை அருச்சனனுடன் செய்தார். உமாதேவியார் இவ்விதமாகிய விளையாடல்களைக் காட்டுதலை விடுத்து அருள்செய்க என்று பிரார்த்தித்தார்.

சிவபெருமான் கிராதவடிவைக் கரந்து இடப வாகனத்தின் மீது சத்திசமேதராய்க் காட்சி கொடுத்தருளினார். அருச்சுனன் வணக்கஞ் செய்து, "சுவாமீ!



தேவரீருடைய அடியார்களுக்கு அடியவனாயிருத்தல் வேண்டும்; தியானிக்குங்காலங்களில் காட்சி தருதல் வேண்டும்; யுத்தத்தில் கன்னன் முதலியோரைச் சங்காரஞ் செய்தல் வேண்டும்; அதற்குப் பாசுபதம் வேண்டும்; யுத்தந்தொடங்கும் வரையுமிருப்பதற்கு இடமும் வேண்டும்; பிறவிகடோறும் "அடிமைக்கொள்ள வேண்டும்" என்றிவ்விதமாகிய வரங்களைக்கேட்க "அவ்விதமேயாகுக" என்று திருவாய்மலர்ந்தருளிப் பாசுபதாஸ்திரம் கொடுத்து மறைந்தருளினார்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

பண்—பழந்தக்கராகம்

வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளும் நம்பியெனவே நினையும்
பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபதமீந்து கந்தான்
கொஞ்சுகிளிமஞ் சணவுங் கோளிலியெம்பெருமானே.

## திருநாவுக்கரசு நாயனார்

### திருநேரிசை

அரும்பெருஞ் சிலைக்கை வேடனாயவ்விற் பார்த்தற்கன்று
உரம்பெரிதுடைமை காட்டியொன்னமர் செய்து மீண்டே
வரம்பெரிதுடைய னாக்கிவாளமர் முகத்தின் மன்னுஞ்
சரம்பொலிதூணி யீந்தார் சாய்க்காடு மேவினாரே.

வெங்கடுங் கானத்தேழை தன்னொடும் வேடனாய்ச்சென்
றங்கமர் மலைந்து பார்த்தற் கடுசரமருளினானை
மங்கை மாராடலோவா மன்னுகாரோணத்தானைக்
கங்குலும் பகலுங் காணப்பெற்று நானுய்ந்தவாறே.

## 16 கங்காளர்

முன்னொருகாலத்திலே, வேதாராணியத்திலுள்ள சிவாலயத்தில் எரிந்துகொண்டிருந்த விளக்குகளுளொன்று ஒளிமழுங்க அதனுள்ளாகப் பொருந்திய நெய்யை ஒரு எலிவந்து குடிக்கும்பொழுது திரிதூண்டப்பட்டுத் தீபம் பிரகாசித்து எரிந்தது. சிவபெருமான் அதனைக்கண்டு அபுத்திபூர்வமாகச் செய்த சிவ நல்வினை காரணமாக மூவுலகங்களையும் அரசாட்சி செய்யும் உரிமையை அவ்வெலிக்குக் கொடுத்தார். அது அவுணனாகிய விரோசனனுக்குப் புத்திரனாய்ப் பிறந்து மாவலியென்னும் பெயரைப் பொருந்தியது. இதனை:-

### திருநாவுக்கரசு சுவாமிகள்

#### திருநேரிசை

நிறை மறைக்காடு தன்னினீண் டெரிதீபந்தன்னைக்
கறை நிறத்தெலிதன் மூக்குச் சுட்டிடக்கனன்று தூண்ட
நிறை கடன்மண்ணும் விண்ணுநீண்ட வானுலகுமெல்லாம்
குறைவறக் கொடுப்பர் போலுங் குறுக்கை வீரட்டனாரே.

எனவும்

### பட்டணத்தடிகள்

வெண்ணெயுண்ண வெண்ணுபுவந்து
நந்தாவிளக்கை நுந்துபு பெயர்த்த
தாவுபுல்லெலிக்கு மூவுலகாள
நொய்தினிலளித்த வீரம்போற்றி. எனவும்,

### சிவஞானசித்தியார்

''சகமதிலெலிதானன்றேமாவலி யாய்த்துத்தானே'' எனவும் கூறுமாற்றானறிக.

இம்மாவலி தேவர்களை வருத்தினான். தேவர்கள் விஷ்ணுவுக்கு முறையிட அவர் காசிபமுனிவருக்கு



மகனாய்ப்பிறந்து வாமனரென்னும் நாமத்தைப் பொருந்தி மாவலியிடஞ்சென்று மூவடிமண் யாசித்தனர். அவன் தத்தஞ்செய்து கொடுக்கத் திரிவிக்கிரம ரூபங்கொண்டு பூமியையோரடியாலும் ஆகாயத்தை மற்றோரடியாலும் அளந்து மூன்றாமடிவைக்க இடம் போதாமையின் அவனது சிரசில் வைத்தூன்றிப் பாதாளத்திலமிழ்த்தினர். அமிழ்த்தியதனால் கர்வங்கொண்டு ஆன்மாக்களை வருத்தினர். தேவர்கள் அதனைச் சிவபிரானுக்கு முறையிட அவர் வைரவமூர்த்தங் கொண்டு அவ்வாமனருக்கு நற்புத்தி புகட்ட, அதனை அங்கீகரியாமையால் திருக்கரத்திற்பொருந்திய தண்டினால் மார்பிலடித்தனர். உடனே அவர் விழுந்தார். வைரவமூர்த்தியானவர் அவருடைய தோலையுரித்துச் சட்டையாகப் போர்த்து முதுகெலும்பைத் திருக்கரத்திலே தண்டாயுதமாகத் தாங்கிக் கங்காளமூர்த்தியாயினர்.

### திருநாவுக்கரசுநாயனார்

#### தனித்திருத்தாண்டகம்

ஆமயந்தீர்த் தடியேனை யாளாக்கொண்டா
ரதிகை வீரட்டான மாட்சி கொண்டார்
தாமரையோன் சிரமரிந்து கையிற்கொண்டார்
தலையதனிற் பலிகொண்டார் நிறைவாந்தன்மை
வாமனனார் மாகாயத்து திரங்கொண்டார்
மானிடங்கொண்டார் வலங்கை மழுவாட்கொண்டார்
காமனையுமுடல் கொண்டார் கண்ணாலேக்கிக்
கண்ணப்பர் பணியுங் கொள் கபாலியாரே.

[வாமனர் ஆணவமலசத்தி நீங்கி நல்வழியடைந்தார்]

## 17. சண்டேசுரானுக்கிரகர்

திருச்சேய்ஞலூரிலே எச்சதத்தனென்னும் அந்தணனுக்கு விசாரசருமர் என்னுமோர் சற்புத்திரர் திருவவ

தாரஞ் செய்தருளினுர். அவர் வேதாகமங்களை ஒருவரிடத்தும் ஓதாதுணர்ந்து, சிவபெருமானே நம்மையடிமையாக வுடையவரென்று அறிந்தனர். ஒருநாள் அவர் பிராமணச் சிறுவர்களோடு விளையாட்டு நிமித்தம் பசுநிரைகளுடன் கூடிச் சென்றபோது, அவ்வூர்ப் பசு மேய்ப்பானுகிய இடையன் ஓரீற்றுப் பசுவை யடித்தான். அதைக் கண்ட விசாரசர்மர் மனம்பொருராகிப், பசுக்களின் பெருமைகளைச் சிந்தித்து, அவ் விடையனை நீக்கி, அன்று தொடக்கம் தாமே மேய்த்து வந்தார்.

பசுப்பால் சிவபெருமானுடைய அபிடேகத்துக்குத் தகுதியுடையதென நினைத்து, அவர் சிவபூசை செய்தற்கு ஆவலுடையவராய், மண்ணி யாற்றங்கரையில் ஓராத்திமரத்தின் கீழ் மண்ணிஞற் சிவலிங்க மமைத்து பசுக்களின் பாலைப் புதுக்குடங்களிற் கறந்து வந்து அபிஷேகஞ் செய்து பலநாட் பூசிப்பாராயினுர்.

ஒருநாள் ஒருவனதைக் கண்டு வீண்செய லென நினைத்து அவ் வூரவர்களுக்குச் சொன்னுன். அவர்கள் எச்சதத்தனுக்குச் சொல்ல, அவன் மறுநா ளுதயத்திற் சோதிக்க நினைத்து மகன் பின் சென்று ஓர் குரா மரத்தி லேறி மறைந்திருந்தான்.

விசாரசருமர் ஸ்நானஞ் செய்து, வழக்கப்படி சிவலிங்க மமைத்துப் பாலைக் குடங்களிற் கறந்து கொண்டு வந்து அபிஷேகஞ்செய்தார். எச்சதத்தன் அதைக் கண்டு விரைந்து வந்து விசாரசருமருடைய முதுகிலடித்தான். அவருடைய மனம் சிவபெருமானுடைய பூசையிலமிழ்ந்திக் கிடந்தமையால் அவ்வடிகள் உறைக்கவில்லை. அவரது உண்மைநிலையை உணராதவனுய்க் கோபங்கொண்டு பாற்குடங்களைக் காலாற் சிதறினுன். விசாரசருமர் அச் சிவாபராதத்தைக் கண்டு, அதனைச் செய்தவர் பிதாவும் குருவும் அந்தணனும் என்பதை யறிந்தும், அவர் செய்தது தீவினையாதலால் அவர் காலை



வெட்ட நினைத்துப் பக்கத்திலிருந்த கோலை யெடுக்க, அது சிவாஞ்ஞையினுலே மழுவாதலும், அதனுற் கால்களை வெட்டிச் சிவபூசையின் குறைகளை முடித்தனர்.

சிவபெருமான் இடபவாகனத்தின் மீது உமாதேவியாருடன் தோன்றியருளினுர். விசாரசருமர் விழுந்து நமஸ்கரித்தனர். சிவபெருமானவரைத் திருக்கரத்தினுலெடுத்தணைத்து, நமக்காக உனது தந்தையின் கால்களை வெட்டினை; ஆகையால் இனிமேல் யாமே உனக்குத் தந்தையாயினேம்; நம்முடைய வஸ்திரம் முதலிய நிருமாலியப் பொருள்களெல்லாம் உனக்கே யுரித்து" எனக் கூறியருளி, அடியார்களுக்கெல்லாந் தலைவராக்கித் திருச்சடையி லணிந்திருந்த கொன்றைமாலையை அவருக்குச் சூட்டிச் சண்டேசுர பதவியைக் கொடுத்தருளினுர்.

இக் காரணத்தானே சிவபெருமான் சண்டேசுராநுக்கிரகர் எனப்படுவர்.

[அவருடைய தந்தையாருஞ் சிவபதவியை யடைந்தார்]

## திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள்

### பண் — கௌசிகம்

கடிசேர்ந்த போதுமலரான கைக்கொண்டு நல்ல
படிசேர்ந்த பால்கொண்டங் காட்டிடத்தாதை பண்டு
முடிசேர்ந்த காலையறவெட்டிட மூக்கண் மூர்த்தி
அடிசேர்ந்த வண்ண மறிவார்சொலக் கேட்டுமன்றே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருநேரிசை

தழைத்த தோராத்தியின்கீழ்த் தாபரமணலாற் கூப்பி
அழைத் தங்கேயாவின் பாலைக்கறந்து கொண்டாட்டக் கண்டு
பிழைத்த தன்றாதைதாளைப் பெருங்கொடுமழுவால் வீசக்
குழைத்த தோரமுதமீந்தார் குறுக்கை வீரட்டனுரே.

### மாணிக்கவாசக சுவாமிகள்

தீதில்லை மாணிசிவகருமஞ் சிதைத்தானைச்
சாதியும் வேதியன் றாதைதனைத் தாளிரண்டுஞ்
சேதிப்ப வீசன் றிருவருளாற் றேவர்தொழப்
பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம்.

### சேந்தனார் திருப்பல்லாண்டு

பண் — பஞ்சமம்

தாதையைத் தாளறவீசிய சண்டிக்கிவ்வண்டத் தொடுமுடனே
பூதலத்தோரும் வணங்கப் பொற்கோயிலும் போனகமுமருளிச்
சோதிமணிமுடித் தாமமுநாம முந்தொண்டர்க்கு நாயகமும்
பாதகத்துக்குப்பரிசு வைத்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே.

## 18. நீலகண்டர்

துருவாசமுனிவர் சிவபூசை செய்த ஒரு புஷ்பத்தை இந்திரன் பவனி வரும்பொழுது கொடுக்க, அவன் அங்குசத்தாலேற்று யானையின் மந்தகத்தில் வைத்தான். யானை புஷ்பத்தைக் கீழே விழுத்திக் காலால் மிதித்தது. முனிவர் கோபங் கொண்டு "சுவர்க்கலோகத்திலுள்ள பஞ்சதருக்கள், நிதிகள், தேனு முதலிய செல்வங்களெல்லாம் நீங்குக" என்று சபித்தார். அவை பாற்கடலிற் சென்று மறைந்தன. மறையவே சுவர்க்கலோகம் வறிதாக, இந்திரன் முதலிய தேவர்கள் துன்பமடைந்து வாடினார்கள். அதைக் கண்ட அவுணர்கள் எதிர்த்து யுத்தஞ் செய்ய, தேவர்களும் இந்திரனும் புறங்கொடுத்து, பிரமா முதலியவர்களுடன் சென்று திருமாலுக்கு விண்ணப்பித்தார்கள்.

விட்டுணுவானவர், பாற்கடலைக் கடைந்து அமிர்தத்தை எடுத்து உண்டால் இறவாமலிருக்கலாமென்று சொல்லி, அவுணர்களையும் இன்சொல்லால் அழைத்துச்



சென்று, சிவபெருமானது ஆஞ்ஞை இன்றித் திருப்பாற் கடலைக் கடைந்தனர். கடையுஞ் சமயத்தில் இவர்களிடத்திலுள்ள அஞ்ஞான இருளானது திரண்டு ஓருருவெடுத்து நஞ்சென்று சொல்லும்படி தோன்றி அவர்களை வருத்தியது. விஷ்ணு அந்த நஞ்சுடன் எதிர்த்து ஒரு கணப்பொழுது நிற்க, அவரது பவள நிறச் சரீரத்தை நீலநிறமெய்யாக்க, அவரும் ஆற்றுதவராய்ப் புறங்கொடுந்தார்.

பின்பு திருக்கைலாச மலையை அடைந்து திருநந்தி தேவரை நமஸ்கரித்து முறையிட, அவர் சிவாஞ்ஞைப்படி அவுணர்களையுந் தேவர்களையும் வெவ்வேறுக்கிச் சிவசந்நிதானத்தில் விட்டனர். விஷ்ணு முதலியோர் தங்களிடையூற்றை நீக்கியருள வேண்டுமென்று பிரார்த்திக்கச் சிவபிரான் "அஞ்சாதீர்கள்" என்று கூறியருளிச் சுந்தரரைப் பார்த்துத் திருவருள் செய்ய, அவரவ் விஷத்தை அகங்கையிலடக்கிக் கொண்டு வந்து அமலருடைய திருக்கரத்தில் கொடுத்தனர். அவர் தேவர்களைப் பார்த்து, "இதை யாது செய்வோம்" என்று வினவியருள "முதலிலுள்ள பாகமெல்லாந் தேவரீருக்கே உரித்து, ஆகையால் விஷமெனினுமாகுக. தேவரீர் திருவமுது செய்தருளவேண்டு" மென்று பிரார்த்தித்தார்கள். பரமபதியானவர், நஞ்சைத் திருவமுது செய்து, திருக்கண்டத்திலடக்கியருளினார். யாவரும் பெருமகிழ்ச்சி அடைந்தார்கள். தேவர்களைத் திருக்கைலாசபதி பார்த்தருளி "கடலை இன்னும் கடையுங்கள்; அமுது எழும்; இப்பொழுதே போங்கள்" என்று அனுமதி செய்தார். அவர்கள் யாவரும் சென்று பாற்கடலைக் கடைந்தார்கள். அதிலிருந்து அமிர்தம் முதலிய பல பொருள்கள் தோன்றின. அவைகளையெல்லாம் தேவர்களே பெற்றார்கள். விஷத்தைப் பரமசிவன் திருவமுது செய்து தேவர்களுடைய உயிரைப் பாதுகாத்த அருஞ்செயலைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார்.

(பண்—பியந்தைக்காந்தாரம்)

பரிய மாசுணம் கயிறுப் பருப்பத மதற்குமத் தாகப்
பெரிய வேலையைக் கலங்கப் பேணிய வானவர் கடையக்
கரிய நஞ்சது தோன்றக் கலங்கிய வவர்தமைக் கண்டு
வரிய வாரமு தாக்கு மடிகளுக்கிட மரசிலியே.

என விரித்துக் கூறினமை காண்க.

சிவபெருமான் ஆலாகலத்தை அமுது செய்தருளி யது அரிபிரமேந்திராதி தேவர்களெல்லாம் இறவாதி ருக்க வேண்டுமென்னும் பெருங்கருணையை விளக்குவ தாம்.

அடியவராமிமையவர் தங்கூட்டமுய்ய
வலைகடல் வாய் நஞ்சுண்டவமுதே......

என திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் புராணத்தா லும்

கோலாலமாகிக் குரைகடல் வாயன் றெழுந்த
வாலால முண்டானவன் சதுர்தா னென்னேடீ
யாலால முண்டிலனே லன்றயன் மாலுள்ளிட்ட
மேலாய தேவரெலாம் வீடுவர் காண்சாழலோ.

என்னும் திருவாசகத்தாலுமுணரப்படும்.

சிவபெருமான் நஞ்சைப் பானஞ் செய்தருளியமை இதர தேவர்களால் நிறைவேற்ற முடியாத அரிய செயல்களை நிறைவேற்றி அருளுதலாகிய அப்பெருமா னது பேராண்மையைக் குறிப்பதுவுமாம்.

அரிபிரமாதி தேவர்கள் சமஸ்தரும் மரித்தலுடைய வர் என்பதும் சிவபெருமான் ஒருவரே மரியாதவர் என்பதும், பார்ப்பதியம்மையார் நித்திய சுமங்கலி என்பதும் இந்த ஆலகால சரிதத்தாற் பெறப்பட்ட மற்றொருண்மையாகும். அது "அக்கறுப்புத் தான்மறு வாயும் வானோரை உய்யக் கொண்டமையின் வேதத் தைப் பயிலும் அந்தணராற் புகழப்படும்" எனவரும் புறநானூற்றுரையானுணரப்படும்.



"எவர் தகிக்கும் ஆலகால விஷத்தைக் குடித் தாரோ அந்தருத்திரருக்கு நமஸ்காரம்"

என்று சரபோபநிடதமும்,

"நீலகிரீவாய"

என்று ஸ்ரீ ருத்திரமும் கூறின.

தம்மை மதியாது பாற்கடலைக் கடைந்த தேவர்க ளுடைய குற்றத்தைப் பொறுத்து, அவர் தம்மை அழிக்க வந்த விஷத்தையுண்டு காத்தமையின், சிவ பெருமான் பொறுமையுடையவர் என்பது பெறப்படும். சிவபெருமான் பொறுமையுடையவர் என்பது "நமஸ் ஸகமானய" என்பதனால் உணரப்படும். சிவபெருமான் ஒருவரே முழுமுதற் கடவுளென்பது இச் சரித்திரத்தி னாற் சித்தித்தவாறு காண்க.

ஆலகால விஷத்தைத் திருக்கண்டத்தில் அடக்கிய ருளிய காரணத்தினால் மணிகண்டர், நீலகண்டர், ஸ்ரீ கண்டர் என்னுந் திருநாமங்கள் சிவபெருமானுக்கு எய்தியன.

## 19. சக்கரதானர்

விஷ்ணுவானவர் குபன் என்னும் அரசன் காரண மாகத் ததீசிமுனிவரை எதிர்த்து யுத்தஞ் செய்து, சக் கராயுதத்தை முனிவர் மீது செலுத்தினர். அது முனி வருடைய வச்சிர தேகத்தில் தாக்கியதனால், நுதிம டிந்து அழிந்தது. பின்பு விஷ்ணு சலந்தரனைச் சங்கா ரஞ் செய்த சுதரிசனமென்னுஞ் சக்கராயுதத்தைச் சிவ பெருமானிடத்திற் பெறவிரும்பிக் காஞ்சீபுரத்தைய டைந்து சிவலிங்கப்பிரதிஷ்டை செய்து நாளொன்றுக்கு ஆயிரம் தாமரை மலர்களாற் சிவார்ச்சனை செய்திருந் தனர்.

சிவபெருமான் விஷ்ணுமூர்த்தியினுடைய பத்தி முதிர்ச்சியை ஆன்மாக்களுக்கு அறிவிக்குங் காரண

மாக ஒரு புஷ்பத்தை மறைத்தருளினர். ஒருமலர் குறைந்தமையால் விஷ்ணு தமது ஒரு கண்ணையிடந்து தாமரைமலராகப் பாவித்து அருச்சித்துச் சிவபூசையின் குறையை முடித்தனர். சிவபெருமான் இடபவாகனத்தில் உமாதேவியாருடன் தோன்றியருளித் தமது திருக்கரத்திலிருந்த சக்கரத்தையும் கண்ணையுங் கொடுத்து மறைத்தருளினர். விஷ்ணு நமஸ்கரித்துச் சக்கராயுதத்தை ஏற்றுக்கொண்டு வைகுண்டத்தையடைந்து நீங்காதபத்தியுடனிருந்தார். விஷ்ணுவுக்குச் சக்கராயுதத்தைக் கொடுத்தருளியமையால் சிவபெருமான் சக்கரதானமூர்த்தி எனப்படுவர்.

## திருநாவுக்கரசு நாயனர்

### பண் — பழம்பஞ்சுரம்

தடமலராயிரங்கள் குறைவொன்றதாகநிறைவென்று தன்கணதனுல்
உடன் வழிபாடு செய்த திருமாலை யெந்தைபெருமானுகந்துமிகவும்
சுடரடியான் முயன்று சுழல்வித்தரக்கனிதயம் பிளந்த கொடுமை
யடல்வலியாழியாழிய வனுக்களித்தவனை நமக்கொர்சரணே.

### திருவாசகம்

சலமுடைய சலந்தரன்றனுடறிந்தநல்லாழி
நலமுடையநாரணற் கன்றருளியவாறென்னேடீ
நலமுடைய நாரணன்றனயன மிடந்தரனடிக்கீழ்
அலராக விடவாழி யருளினன்காண் சாழலோ.

பங்கய மாயிரம் பூவினிலோர் பூக்குறையத்
தங்கணிடந்தரன் சேவடிமேற் சாத்தலுமே
சங்கர னெம்பிரான் சக்கரமாற் கருளியவா
றெங்கும் பரவிநாந் தோணேக்க மாடாமோ:

## 20. விக்கினேசுவரானுக்கிரகர்

ஆன்மாக்களுடைய அஞ்ஞானத்தையும் இடையூறுகளையும் நீக்குவதற்காகப் பிரணவவடிவினர்களாகிய சிவத்தினின்றும் உமையினின்றுந் தோற்றிப் பிரணவத்



தையே திருமுகமாகக் கொண்டருளிய விநாயகக்கடவுள் சிவபெருமானையும் உமாதேவியாரையும் நமஸ்கரித்தனர். அவர்கள் அவரைத் திருக்கரங்களாலெடுத்து மார்போடணைத்துக் கிருபைசெய்து அவரைத் தொடையில் இருத்தியருளினர். சிவபெருமான் விநாயகக் கடவுளைப் பார்த்து "எவர்களாயினும் ஒருகருமத்தைத் தொடங்குமுன் இனிது முடித்தற் பொருட்டு முதலில் உன்னைவழிபடுவார்களேயானல், அவர்களது கருத்தின்படி தொடங்கிய கருமத்தை இனிது முடியும். பொருட்டு அருள் செய்குதி"; பிரம விட்டுணு முதலிய தேவர்களுக்கும் மனிதர்களுக்கும் பூதகணங்களுக்கும் ஏனையோருக்குந் தலைவனுகை இருக்குதி" என்று அனுக்கிரகஞ் செய்தனர்.

இக்காரணத்திஞல் சிவபெருமான் விக்கினேசுரானுக்கிரகர் எனப்படுவர்.

வாமபாகத்தில் கௌரியும், வலப்பாகத்தில் விநாயகரும் அமர, மூன்று திருக்கண்களும், அங்குசமும் உருத்திரா க்ஷமாலையும் தரித்த இருகரங்களும் வரதம் அமைந்த ஒருகரமும் விநாயகருடைய நெற்றியில் விபூதியைத்தரித்த ஒருகரமுமாக நான்கு திருக்கரங்களும் அமைந்த திருவுருவமே விக்கினேசுரானுக்கிரசமூர்த்தம் எனப்படும். இம்மூர்த்தியைத் தியானிப்போர் சர்வாபீஷ்டங்களும் அடைவார்கள். சர்வவிக்கினங்களும் நீங்கப் பெறுவார்கள்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

"பொருந்தாத செய்கை பொலியக்கண்டேன்
போற்றிசைத்து விண்ணோர்புகழக் கண்டேன்
பரிந்தார்க்கருளும் பரிசுங்கண்டேன்
பாராகிப்புனலாகி நிற்கைகண்டேன்
விருந்தாய்ப்பரந்த தொகுதிகண்டேன்
மெல்லியலும் விநாயகனுந்தோன்றக்கண்டேன்
மருந்தாய்ப்பிணி தீர்க்குமாறு கண்டேன்
வாய்மூரடிகளை நான் கண்டவாறே"

## 21. சோமாஸ்கந்தர்

விட்டுணு புத்திரப்பேறின்மையால், சிவபெருமானது திருவடிகளைச் சிந்தித்து ஊழிகாலந்தவஞ்செய்தார். சிவபெருமான் உமாதேவியாருடன் வெளிப்பட்டார், விட்டுணு எழுந்து துதித்து வணங்கி நிற்ப, சிவபெருமான் அருள் செய்து "உனக்கு வேண்டிய வரம் யாது சொல்லுதி," என்று வினவினர். "புதல்வற்பேறில்லாமல் வருந்தினேன், அதனையும் தமியேனுக்கு ஈந்தருளும்," என்றுவேண்டினர். சிவபெருமான் புன்முறுவல்செய்து, உனக்கு ஒரு புத்திரனையுதவினோம்" என்று அருள்புரிந்தார்.

விட்டுணுமுன் செய்த வினையினால் உமாதேவியாரை வணங்கித் துதித்திலர். அப்பொழுது உமாதேவியார் விட்டுணுவை நோக்கி, நீ பெறுகின்ற புத்திரனும் எம் பொருமானது முனிவினால் அழிக, என்று சாபத்தைக் கூறி, சிவபெருமானை நோக்கி, "உயிர்க்குயிராகிய கடவுளே, மீண்டு செல்வோம் வருக" என்று கூறி எம் பெருமானை அழைத்துக்கொண்டு போயினர். விட்டுணு அதனைக்கண்டு துன்பமுற்று அஞ்சி, சிவபெருமானையும், உமாதேவியாரையும், குமாரக் கடவுளையும், ஒரு திருவுருவாக அமைத்து. வேதாகம விதிப்படி பூசனைசெய்து பின்னும் பல்லாயிரகோடி வருஷம் தவமியற்றினர். உமாதேவியாரும் சிவபெருமானும் வெளிப்பட்டு வருதலும் விட்டுணு ஓடிப்போய், முன்னே அம்மையாருடைய திருவடிகளை வணங்கி, பின் எம்பெருமானுடையதிருவடிகளை வணங்கித் துதித்தார், சிவபெருமான், "உமையே நீ சிவனுக்கு அருள்செய்" என்று கூறினர். அவர் விட்டுணுவைநோக்கி, "உன்மகன் எம் பெருமானது நெற்றிக்கண்ணாலிறந்து, "பின் முன் போலத் தோன்றி உயிரோடிருப்பானாக" என்று கூறினர், விட்டுணு தமது உலகத்தையடைந்தார். விட்டுணு



தாம் முன்னரே பூசித்து வந்த சோமாஸ்கந்த மூர்த்தியைத் தம்முடைய மார்பிலே வைத்துக்கொண்டு பாற்கடலிலே சேஷசயனத்தின்மீது பற்பல காலம் துயின்றார்.

இந்திரன் வாற்கலி என்னும் அவுணனால் வருந்தி விட்டுணுவுக்கு விண்ணப்பம்செய்ய, அவர் தம்முடைய மார்பில் இருந்த சோமாஸ்கந்த மூர்த்தியையெடுத்து, "இவரைப் பூசித்து உனது தீவினையை நீக்குதி" என்று சொல்லி இந்திரனுடைய கையிற்கொடுத்து, வாற்கலியுடன் யுத்தஞ்செய்யப்போயினர். இந்திரன் விட்டுணுவினிடம் பெற்றுக்கொண்ட தியாகராஜமூர்த்தியைச் சுவர்க்கலோகத்திற்கொண்டு போய்ப் பூசித்தான்.

பின்பு வலாசுரனால் இடர்ப்பட்ட இந்திரன் முசுகுந்தனைவருவித்து அவனுடைய உதவியால்வலாசுரனைச் சம்மாரஞ் செய்து, வலாரி என்னும் நாமத்தைப் பெற்றான். வலாசுரனைவென்ற இந்திரன் முசுகுந்தச் சக்கரவர்த்தியை அமராவதியிலுள்ளதன் கோயிலினுள் அழைத்துக்கொண்டுபோய், அவனை நோக்கி பல உபசாரங்களைச் சொல்லி ஸ்நானம் செய்து வஸ்திரந் தரித்து விஷ்ணுவினாலே பூசிக்கப்பட்ட தியாகராஜப் பெருமானை அருச்சனை செய்தான். சிவபெருமான் உமாதேவியாரும், சுப்பிரமணியக்கடவுளும் ஒருபக்கத்தில் மகிழ்ச்சியோடு பொருந்தத் திருக்கைலாசமலையின்கண் வீற்றிருத்தல்போல அங்கே வீற்றிருத்தலும், முசுகுந்தன் அவரைக்கண்டு பரவசப்பட்டுத் தொழுது திருவடிகளை முடிமேற்சூடி, சொல்ல முடியாத ஆனந்தமுற்று, அவரை நோக்கித் தோத்திரஞ் செய்தான். இவ்வாறு முசுகுந்தச் சக்கிரவர்த்தி துதிப்ப, எம்பெருமான் கிருபைசெய்து, "விட்டுணு அளவில்லாத காலம் எம்மை அன்போடு பூசித்து இந்திரனிடத்தில் வைத்தான். அரசனே, நீ நம்மைப்பூமியிற் கொண்டு

போய்ப் பூசிப்பாய்,'' என்று இந்திரன் கேளாவண்ணம் சொல்லி அருளினுர். முசுகுந்தன் மிக்க பெருமகிழ்ச்சி யுற்று, சுவாமீதேவ ரீருடைய திருவுள்ளம் இது வாயின் அடியேன் உய்ந்தேனென்று ஆச்சரியமடைந்தான்.

இந்திரன்தன் சிவார்ச்சனையை முடித்து, அக்கினிகா ரியத்தையும் பிறவற்றையும் செய்து, வேருேர் கோயிலி னுட்போய், காமதேனுவை அழைத்து முசுகுந்தனுக்கு விருந்து செய்வித்து, வஸ்திரங்களையும் ஆபரணங்களை யும், பிறவற்றையும் கொடுத்து, "இன்னும் உனக்கு வேண்டியதைச்சொல்லுக,'' என்ருன். முசுகுந்தன், "மகாராசனே நீர் பூசை செய்கின்ற கடவுளை நான்பூவுல கிற் கொண்டுபோய் வைத்துப் பூசித்தற்காக அன் போடு கொடுக்குதி,'' என்ருன். இந்திரன் இவ்வாறு சொல்வான். மகாராசனே, நீ இந்த மூர்த்தியைப் பூசை செய்தற்காகத் தரும்படி கேட்டாய், அப்படி உனக்குத் தருதல் என் சம்மதத்தைப் பற்றியதன்று உனக்கு விட்டுணுவின் சம்மதமுண்டாளுல் அதன் பின் இவரை உனக்குத் தருவேன்'' என்ருன்.

முசுகுந்தன் திருப்பாற்கடலிற் சென்று விட்டுணு வினுடைய அனுமதியைப்பெற்றுவந்து இந்திரனுக்குச் சொன்னுன். இந்திரன் மனம் தளர்ந்து வருந்தி, ஒரு சூழ்ச்சியை நினைத்து, தேவத்தச்சனைக்கொண்டு, நாம் வைத்துப் பூசிக்கும் சோமாஸ்கந்தமூர்த்தி போன்ற ஆறு மூர்த்திகளை ஆறுதரம் செய்வித்து, ஒவ்வொன்ருக முசு குந்தனுடைய கையிற் கொடுப்ப, அவன் அவற்றை வாங்கி அவைகள் வீதிவிடங்கப் பெருமானைப்போல இருந்தும் தனக்கு ஒன்றும் சொல்லாமலிருந்தமையால் வஞ்சனை என்று அறிந்து, "இவர் அவர் அல்ல'' என்று ஆறு முறையும் கூறினுன். இந்திரன் அதனைக் கேட்டு, விட்டுணுவாற் பூசிக்கப்பட்ட சோமாஸ்கந்த மூர்த் தியைக் கொண்டுவந்து, இவர் அவராமோ, என்ருள். இந் திரன் இவ்வாறுரைப்ப, சோமாஸ் கந்தமூர்த்தியானவர் அவன் அறியாவண்ணம் முசுகுந்தனுடைய முகத்தை



நோக்கி,'' "நாம் உன்பால் வந்தோம் இனி நம்மைப் பூவு லகிற் கொண்டுபோய்ப் பூசை செய்குதி'' என்று அருளிச் செய்தார், முசுகுந்தன் பெருமகிழ்ச்சியடைந்து, வணங் கித் துதித்து, "விட்டுணுவினுடைய பூசையை ஏற்றி ருந்தவர் இவர்தான், அரசனே இவரைத் தருக'' என்று வாங்கினுன், இந்திரன் முசுகுந்தனை நோக்கி, இவரை யான் முன்தந்த அறுவரோடும் பூமியிற்கொண்டு போய்த்திருவாரூர் முதலிய தலங்களிற் பூசிப்பாய் என்று சொல்லி விடைகொடுத்தனுப்பினுன்.

முசுகுந்தன் பூமியில் வந்து, திருவாரூரில் வல்மீகப் பெருமான் வீற்றிருக்கும் கமலாலயத்தில் விட்டுணு பூசித்த சோமாஸ்கந்த மூர்த்தியை விதிப்படி தாபித்து, மற்றைஆறு சோமாஸ்கந்த மூர்த்திகளையும்

திருநாகைக்காரோணம், திருநள்ளாறு, திருக்கா ருயல், திருக்கோளரியூர், திருவாய்மியூர், திருமறைக் காடு. என்னும் ஆறு தலங்களிலும் ஒரு நாளில் தாபித்து விதிப்படி சிரத்தையோடு பூசையும் விழாவும் செய்வித்து வந்தான். இவை சத்த விடங்கமென்று சொல்லப்படும்.

சத்த விடங்கர்களுக்கும் அவ்வத்தலங்களில் அமை யும் அபிஷேகத் திருநாமங்களாவன:-

திருவாரூர்—வீதிவிடங்கர். திருமறைக்காடு - புவனி விடங்கர். திருநாகை - சுந்தரவிடங்கர். திரு நள்ளாறு- நகரவிடங்கர், திருக்காருயல், ஆதிவிடங்கர், திருக்கோ ளிலி, அவனிவிடங்கர், திருவாய்மியூர்-நீல விடங்கர் என் பனவாம். அவ்வத்தலங்களில் அமையும் நடனங்கள்: திருவாரூரில் அசபாநடனம், திருமறைக்காட்டில் ஹம்ச நடனம், திருநாகையில் பாராவார தரங்கநடனம், (வீசி நடனம்) திருநள்ளாற்றில் உன்மத்த நடனம், திருக்கா ருயலில்—குக்குநடனம், திருக்கோளிலியில்—பிரமரநட னம் திருவாய்மியூரில் கமலநடனம் எனப்படும்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருநேரிசை.

செல்வியைப்பாகம்கொண்டார் சேந்தனைமகனுகக்கொண்டார்
மல்லிகைக்கண்ணியோடுமா மலர்க்கொன்றைசூடிக்
கல்வியைக்கரையிலாத காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எல்லியை விளங்கநின்று ரிலங்குமேற்றளியனரே

### காஞ்சிப்புராணம்

அடலிற்கொதிக்கும்படையாளி யண்ணன்முதலோரேத்தெடுப்பத்
தடவுஞ்சியப்பிடர்த்தலையிற் கவினுமணிப்பூந்தவிசும்பர்க்
கடவுட்பிராட்டியுடங்கிருப்பக் கதிர்வேற்காளைநள்ளிருப்ப
நடலைப்பிறவிமருந்தாகிவைகு நாதன்றிருவுருவம்.

[ஸ-உமா-ஸ்கந்தர்=சோமாஸ்கந்தர். உமையோடும் ஸ்கந்தரோடும் பொருந்திவீற்றிருப்பவர் சோமாஸ்கந்தர்.]

## 22. ஏகபாதர்

தம்முடைய திருவருளே திருமேனியாகக் கொண்ட சிவபெருமான் பிரமவிட்டுணுக்களை முன்னேதந்து தாம் அவர்களை அதிட்டித்துநின்று, முறையே உயிர்களைப் படைத்தல் காத்தல்களைச் செய்து, அவ்வுயிர்களுக்கு வினைப்பயன்களை நுகர்வித்து, அவற்றுள் இருவினையொப்பு மலபரிபாகம் வரப்பெற்ற ஆன்மாக்களை மோக்ஷமடையச் செய்து, மற்றைய உயிர்களையும் உலகங்களையும் பின்னர்ச் சங்கரித்து, அதன் பின்னர் பிரமவிட்டுணுக்களையொடுக்கி, தாம் முன்போல் ஏகமாயிருப்பர். அதன் பின்னும் என்றும் இவ்வாறே பஞ்சகிருத்தியத்தைச் செய்தருளுவர். சிவபெருமான் இவ்வாறு பஞ்சகிருத்தியங்களைச் செய்யுந்தோறும் ஒடுங்கிய பிரமா முதலிய தேவர்களுடைய எலும்புகளைத் தரிப்பர். அவர்களுடைய சிரங்களெல்லாவற்றையும்



தொடுத்து மாலையாகப் பூண்பர். அவர்களுடைய சிகைகளைத் தமது திருமார்பிலே பூணூலாக அணிவர். இவ்வாறு செய்வதன்றி அவர்களை முத்தலைச் சூலத்திற் கோத்து ஏந்துதலும் செய்வர். அவர்களை நெற்றிக்கண்ணுற் சாம்பராக்கி, அச்சாம்பரைத் திருமேனியில் பூசுதலும் செய்வர்.

சிவபெருமான் இப்படியெல்லாம் செய்தல் அத்தேவர்கள் முன்னே மகாதவங்களைச் செய்தமையினாலேயாம். அன்றி, தம்மை யாவரும் புகழ்தற்கன்று. இதுவன்றி இவ்வாறு செய்தற்கு இன்னுமோர் காரணமுளது; அது யாதெனின்; யாவரும் எவர்க்குந் தலைவர் எவரென்றறிந்து தம்மையடைந்து பாவங்களை நீங்கி மோக்ஷத்தைப் பெற்று உய்தல் வேண்டுமென்னும் அருளேயாம். எலும்பு (கங்காளம்) முதலியவைகளைச் சிவபெருமான் முன்னுளில் அணிந்தமை அவர் எல்லாவுயிர்கள் மாட்டும் வைத்த திருவருட்செயலாம்.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருத்தாண்டகம்

பாதந்தனிப் பார்மேல் வைத்த பாதர்
பாதாள மேழுருவப் பாய்ந்த பாதர்
ஏதப் படாவண்ண நின்றபாத
ரேழுலகுமாய் நின்றவேக பாதர்
ஓதத்தொலி மடங்கி யூருண்டேறி
யொத்துலக மெல்லா மொடுங்கியபின்
வேதத்தொலி கொண்டு வீணைகேட்பார்
வெண்காடு மேவிய விகிர்தனரே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### தனித்திருவிருத்தம்

பெருங்கடன் முடிப்பிரளயங் கொண்டு பிரமனும்போய்
இருங்கடன் மூடியிறக்கு மிறந்தான் களேபரமும்
கருங்கடல் வண்ணன்களேப ரமுங்கொண்டு கங்காளராய்
வருங்கடன் மீளநின் றெம்மிறை நல்வீணை வாசிக்குமே

## சுந்தரமூர்த்தி சுவாமிகள்

### பண்—தக்கேசி

ஏன்றவந் தணன்றலையினை யறுத்து
நிறைக்க மாலுதிரத்தினை யேற்றுத்
தோன்று தோண்மிசைக் களேபரந் தன்னைச்
சுமந்த மாவிரதத்த கங்காளன்
சான்று காட்டுதற் கரியவ னெளியவன்
றன்னைத் தன்னிலா மனத்தார்க்கு
மான்று சென்றணை யாதவன் றன்னை
வலிவலந் தனில்வந்து கண்டேனே.

## 23. சுகாசனர்

முன்னொருகாலத்தில் திருக்கைலாசமலையில் எமது ஆன்மநாயகராகிய சிவபெருமானும் உமாதேவியாரும் எழுந்தருளி இருந்தனர். அப்பொழுது உமாதேவியார் எழுந்து சிவபெருமானை வணங்கித் "தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய வேத சிவாகமங்களின் உண்மைப் பொருள்களை அடியேனறியும்படி உபபேசித்தருளுதல் மேண்டும்" என்று பிரார்த்தித்தனர்.

சிவபெருமான் சுகாசனமாயிருந்து அம்மையாரை இடப்பாகத்திலிருத்தி, "சத்தியே, நீ வினவியது அளவற்ற உனது புத்திரர்களாகிய ஆன்மாக்கள் மோட்சமுறுங் காரணமாகவேயன்றி உன்காரணமாகவன்று"



என்று கிருபைசெய்து, ஆன்மாக்களைப் பந்திக்கும் ஆணவ கன்மமாயைகளினிலட்சணங்களையும், அவைகள் அவர்களினின்றும் நீங்குந் தன்மையையும், நீங்கினோரடையுந் தன்மையையும், வேதசிவாகமங்களின் தோற்றத்தையும், வைகரி முதலிய வாக்குகளையதிட்டிக்கின்ற சுத்தமாயா லட்சணத்தையும், அம்மாயை சத்தி காரணமாக வுள்ள தென்பதையும் சத்தி வாமபாகத்திலமர்ந்த வரலாற்றையும் உபதேசித்தருளினர்.

வேதசிவாகமங்களினுட்பொருளை உமாதேவியாருக்குச் சுகாசனமாகவிருந்து உபதேசித்தருளிய காரணத்தால் சுகாசன மூர்த்தியாயினர்.

### பண்—காந்தாரபஞ்சமம்

தொகுத்த வனருமறை யங்கமாகமம்
வகுத்தவன் வளாபொழிற் கூகமேவினன்
மிகுந்தவன் மிகுத்தவர் புரங்கள் வெந்தறச்
செகுத்த வனுறை விடந்திருவிற் கோலமே.

ஞா. திருவிற்கோலம்

## 24. தக்ஷிணாமூர்த்தி

பிரமபுத்திரர்களாகியசனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்னும் நான்கு முனிவர்களுந் திருக்கைலாசமலையை யடைந்து, சிவபெருமானை வணங்கி, "வேதங்களை ஆராய்ந்தும், தவங்களைச் செய்தும், மனமடங் காமலிருக்கின்றது, யாம் கடைத்தேறும்படி கிருபை செய்தருளுக," என்று பிரார்த்தித்தார்கள்.

சிவபெருமான் பளிங்குநிறத்திருமேனியையும், மூன்று திருக்கண்களையும் சிவஞானபோத புத்தகத்தையும், அன்பர்களை மறைத்த மலவிருளை நீக்குபவர்தாமென்பதை அறிவிக்குங் குறிப்பாகத் தமது திருக்கண்களிலிருந்து தோன்றியதும் திருவருள் ஒளிவீசுகின்றதும் ஆகிய ருத்திராக்ஷமாலையையும்,ஞானசத்தியாகிய கமண்

டல பாத்திரத்தையும், ஞானமுத்திரையையுந் தரித்துக் கொண்டு, குருமூர்த்தியா யெழுந்தருளியிருந்து, முனிவரையிருக்கும்படி செய்து, சரியை, கிரியை, யோகம் என்னும் முப்பாதங்களையும் உபதேசித்தார். அவர்கள் இனிஞானோபதேசஞ் செய்தருளுக, என்று பிரார்த்தித்தார்கள். அப்பொருள் இவ்வாறு இருக்குமென்பதை அவர்களுக்கு உணர்த்தும் பான்மையாக, திருக்கர மொன்றைத் திருமார்புடன் சேர்த்தி, ஞான முத்திரையைக் காட்டி, ஓர் கணப்பொழுது யோகாப்பியாசஞ்செய்வர்களைப்போல இருந்தார். முனிவர்கள் மனமொடுங்கி ஞான நிலையையுணர்ந்து, பேரானந்தப் பெருவெள்ளத் திலமிழ்ந்தித் தங்கள் செயலொன்று மின்றி இருந்தார்கள்.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### பண் - நட்டராகம்

பண்டு நால்வருக் கறமுரைத் தருளிப் பல்லுல கினிலுயிர் வாழ்க்கை
கண்ட நாதனுர் கடலிடங்கை தொழக் காதலித்துறை கோயில்
வண்டு பண் செயுமா மலர்ப் பொழில் மஞ்ஞைநட மிடுமா தோட்டம்
தொண்டர் நாடொறுந் துதிசெய வருள் செய்கே தீச்சரமது தானே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருக்குறுந் தொகை

ஆலத்தார் நிழலில்லற நால் வர்க்குக்
கோலத் தாலுரை செய்தவன் குற்றமில்
மாலுக் காரருள் செய்தவன் மாற்பேறு
ஏலத்தான் றெழுவார்க் கிடரில்லையே.

### திருவாசகம்

அருந்தவருக் காலின் கீழற முதலா நான்கனையு
மிருந்தவருக் கருளுமது வெனக் கறிய வியம்பேடீ
யருந்தவருக் கறமுதலன் கன்றருளிச் செய்திலனேற்
றிருந்தவருக் குலகியற்கை தெரியா காண் சாழலோ.



சிவபெருமான் சீவன் முத்தர் போலத்தக்ஷிணா மூர்த்தியாய் உண்மைப்பொருளை உபதேசித்தபடியால் ஆன்மாக்கள் குரு முகத்திலே உபதேசம் பெறலாயினர்.

## 25. இலிங்கோற்பவர்

ஆயிரஞ் சதுர்யுகங்கழிந்தால் பிரமாவுக்கு ஒரு பகற்காலமாகும். அப்பகற் காலங்கழிந்து இரவுவரப் பிரமாநித்திரை செய்வர். அப்பொழுது சூரியன் முதலிய கிரகங்களும் நக்ஷத்திரங்களும் இந்திராதி தேவர்களும், இப்பூவுலகமும் இங்குள்ள உயிர்களும் அழியும். நாற்றிசைக் கடலும் விரைவில் எழுந்து பூவுலகத்தை விழுங்கி சத்தபாதாளங்களையும் மூடி மேலே உலாவித் தேவருலகத்தை அழித்து நிமிர்ந்து அப்பாலுமாகி இவ்வாறு உலகை அழிக்கும். அப்பொழுது விஷ்ணு பரமசிவனுடைய திருவடிகளைத் தியானஞ் செய்துகொண்டு, ஓராலிலையின்மீது குழந்தைவடிவாய் நித்திரை செய்தார். அதனைச் சனலோகத்திலுள்ள முனிவர்கள் கண்டு புகழ்ந்தார்கள். அவர் விழித்து எழுந்து பூவுலகத்தைத் தேடினர். அது பாதாளத்தில் ஆழ்ந்ததாக, அந்த விஷ்ணு ஒரு பன்றியின் உருவு கொண்டு பாதாளத்திற் போய்த் தேடி அப்பூமியைத் தம்முடைய கொம்பினுல் எடுத்துக் கொண்டு திரும்பி வந்து முன்போல நிறுத்திப் போயினர்.

அப்பொழுது அவ்வாயிரஞ் சதுர்யுகமுங்கழியப் பிரமாவுக்கு மற்றொரு பகற்பொழுதாயது. பிரமா நித்திரை விட்டெழுந்து சிருட்டித்தொழில் செய்ய நினைத்தார். சமுத்திரங்கள் முன்நின்ற நிலையையடைந்தன. விட்டுணு தாம் பூமியை எடுத்து நிலை நிறுத்தினோமென்று நினைத்து அகந்தை கொண்டு பாற்கடலிற் சர்ப்பசயனத்தின் மீது அறிதுயில் செய்தார்.

பிரமா, தேவர் முதலியோரையும் மனுடர் முதலிய வர்களையும் சிருட்டித்து வானுலகத்திலும் பூவுலகத்திலும்

வைத்து இந்திரனை விண்ணுலக அரசனுக்கி மற்றைய திக்குப் பாலகர்களை அவ்வவர் தானங் கடோறுமிருத்தித் தமக்கு ஒருவரும் நிகரில்லையென்று மனத்தில் மதித்து அகந்தை கொண்டு விட்டுணு பாற்கடலில் அகந்தையோடு அறிதுயில் செய்தலைக் கண்டு, அவரை விஷ்ணு என்றறிந்தும் செருக்கோடு சென்று அவருடைய மார்பிலே தட்டி நித்திரைவிட்டெழும்பும் என்று கூறினர். அவர் எழுந்தார். விட்டுணுவை நோக்கி, ''நீயார்?'' என்று பிரமா வினவினர். அவர் ''பிள்ளையே நான் உன்னுடைய பிதா என்றிவ்விதம் பற்பலவற்றைப் பேசிப் பின்பு இருவரும் பொருது ஈற்றில் சிவப் படைக் கலங்களைச் செலுத்தி, ஆயிரம் வருஷகாலம் போர் செய்தார்கள்.

பரமசிவன் இவைகள் எல்லாவற்றையும் பார்த்தருளி இப்பிரம விஷ்ணுக்களுடைய இச்செயலை நாம் பார்த்திருப் போமாகில் உயிர்கள் அழியும்; ஆகையால் நம்முடைய உண்மைத் தன்மைகளை உணர்த்தினல் கொடிய போரையுந் தாமே பரம்பொருளென்று சொல்வதையுந் தாமாகவிடுத்து நல்ல மனத்துடன் விளங்குவார்களெனத் திருவுள்ளங் கொண்டு மாசிமாத அபர பக்ஷசதுர்த்தசியில் ஒரு அக்கினி மலையாகத் தோன்றியருளினர்.

பிரமவிஷ்ணுக்கள் கோபத்தையும் போரையும் நீங்கி அந்தச் சோதியைத் தரிசித்து நின்றர்கள். உங்களுடைய வலிமையைச் சிவபெருமான் காண்பார். நீங்கள் இச்சோதியினுடைய அடியையும் முடியையுங் காணுங்களென்று ஒரு அசரீரி வாக்கு எழுந்தது. அசரீரியின் வாக்கைக் கேட்டு, அடிமுடியைக் காண்பதற்குக் கருதி, விஷ்ணு கருநிறப் பன்றியுருக் கொண்டு அடியையும் பிரமா வெள்ளிய சிறகுகளையுடைய அன்னரூபங் கொண்டு முடியையும் ஆயிரம் வருஷகாலந் தேடியுங் காணுது இனியாது செய்வதென ஆலோசித்துப் பூமியில் வந்து உயர்ந்து பிரகாசிக்கின்ற அக்கினி மலையைக் வலங் கொண்டு வணங்கி நின்றர்கள்.



அவ்விருவரும் சிவலிங்கத்தை விதிப்படி தாபித்து, திருமஞ்சனம் புஷ்பம் சந்தனம் தூபதீபம் முதலிய பூசைக்குவேண்டும் உபகரணங்களெல்லாவற்றையும் அமைத்து அருச்சித்து வணங்குதலும், சிவபெருமான் காளகண்டமும், மான் மழுவும் வரதஅபயங்களுமுடைய திருக்கரங்களும், நான்கு திருப்புயங்களும், நாகயஞ்ஞோபவீதமும், பாலசந்திரன் பொருந்திய திருச்சடையும், பார்வதிபாகமுமாய் அந்தச் சோதிக் கணித்தாக அவர்கள் காணும்படி வெளிப்பட்டு முன்னின்றருள்புரிந்தார். அவர் இருவரும் அங்கே அவருடைய பாதங்களை வணங்கி, அருள்வெள்ளத்துளாழ்ந்து மெய்யுணர்வோடு நின்று தோத்திரஞ் செய்தார்கள்.

சிவபெருமான் அரிபிரமர்களை நோக்கி நீவிர் செய்த குற்றங்களொன்றையுந் திருவுள்ளத்துக் கொள்ளோம், மனத்தில் ஒன்றையும் எண்ணுதொழிமின், உங்கள் பூசனையை உவந்தோம். அந்நாளில் உங்களுக்குத் தந்த பதங்களை இன்னுந் தந்தோம். வேண்டிய வரங்களைக் கேண்மின் என்று அருளிச் செய்தார். அவர்கள் ''தேவரீருடைய திருவடிகளே புகலிடமாகக் கொண்டு வழிபடுகின்ற தலையன்பைத் தந்தருளும் என்று பிரார்த்திப்ப அவர் அதனை ஈந்து விரைவில் அந்த அக்கினிச் சோதியிலே மறைந்தருளினர்.

[பரமசிவன் மறைந்தபொழுது பிரமவிஷ்ணுக்கள் நமஸ்கரித்தெழ அச்சோதி சுருங்கிச் சுருங்கி வந்து உலகமெல்லாந் துதிக்கும்படி ஒருமலையாயது. அந்தச் சிவலிங்கரூபமாகிய மலையைப் பிரமாவும் விஷ்ணுவும் அணுகி மும்முறை பிரதக்ஷிணஞ் செய்து வணங்கித் துதித்து, தங்கள் பதங்களிற் சென்றர்கள். பிரமவிஷ்ணுக்கள், அடிமுடிதேடிய சோதிமலையானது அருண

சலம் என்னும் பெயரைப் பொருந்தியது. சோதி தோன்றிய இரவே சிவரோத்திரியாகும். அவ்விரவில் ஆகமவிதிப்படி சிவலிங்கப் பிரதிட்டை செய்து பூசித்து வேண்டிய வரங்களைப் பெற்றனர். பலர் அத்தி னம்முதலாக அனேக அடியவர்கள் சிவராத்திரி தினத் திற் சிவபூசை செய்து இகபர இன்பங்களை அடைகின் றனர்.]

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### பண் — வியாழக்குறிஞ்சி

பன்றிக் கோலங்கொண்டிப் படித்தடம் பயின்றிடப்
பானு மாருனுமேயப் பறவையி னுருவுகொள
ஒன்றிட்டே யம்புச்சேருயர்ந்த பங்கயத்தவ
னேதானேதா ன:.துணரா துருவின தடிமுடியுஞ்
சென்றிட்டே வந்திப்பத்திருக்களங் கொள்பைங்கணின்
றேசால்வேரூ ராகாரந்தெரிவு செய்தவனதிடங்
கன்றுக்கே முன்றிற்கே கலந்தி லந்நிறைக்கவுங்
காலே வாராமேலே பாய்கழுமல வளநகரே.

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### இலிங்கபுராணக் குறுந்தொகை

செங்கணனும் பிரமனுந் தம்முளே
எங்குந்தேடித் திரிந்தவர் காண்கிலார்
இங்குற்றே னென்றிலிங்கத்தே தோன்றினன்
பொங்குசெஞ்சடைப் புண்ணிய மூர்த்தியே.

கண்டிபூண்டு கபாலங் கைக்கொண்டிலர்
விண்டவான் சங்கம்விம்ம வாய்வைத்திலர்
அண்டமூர்த்தி யழணிற வண்ணனைக்
கெண்டிக் காணலுற்று ரங்கிருவரே.



## சுந்தரமூர்த்தி நாயனர்

### பண் — பழம்பஞ்சுரம்

பேழ்வாயரவி னணையானும் பெரியமலர் மேலுறைவானும்
தாழாதுன்றன் சரண்பணியத் தழலாய் நின்றதத்துவனே
பழாம்வினைக ளவைதீர்க்கும் பரமா பழையனூர்தன்னை
ஆள்வாயாலங் காடாவுன் னடியார்க் கடியேனுவேனே

### திருவாசகம்

பிரமனரியென் றிருவருந்தம் பேதைமையாற்
பரமமியாம்பரம மென்றவர்கள் பதைப்பொடுங்க
அரனுரழ லுருவாயங்கே யளவிறந்து
பரமாகிநின்றவா தோணேக்க மாடாமோ

காமியகர்மமாவது பும்ரூபம், ஸ்திரீரூபம், ஸ்திரீபும் ரூபம் என்னும் மூவித தேவதைகளையும் செபதர்ப்பண பூசைகளினலே சாந்நித்தியம் பண்ணிக்கொண்டு அவ் வாறே நாடோறும் அநுட்டித்தலாம்.

### குருவருச்சனை

சுவாமிக்கு அக்கினி திக்கில் ஆசனமிட்டு அதில் சடுத்தாசனம் பூசித்து, அதன் மேல் குருமூர்த்தியைப் பூசித்து, சிவனை ஆவாகித்து அருக்கியம் முதலியவை களைக் கொடுக்க. சத்தியோடு கூடியவரும், அடியார் களின் ஆன்மப் பிரகாசத்திற்குக் காரணரும், அருட் செல்வமுடையவருமாகிய குருவினுடைய பாதங்களுக்கு நமஸ்காரம், என்று தோத்திரஞ் செய்க.

## சுந்தரமூர்த்தி நாயனர்

### பண் — நட்டராகம்

மறிசேர்கையினனே மதமாவுரி போர்த்தவனே
குறியேயென்னுடைய குருவேயுன் குற்றேவல்செய்வேன்
நெறியேநின் னடியார்நிகைக்குந் திருக்காளத்தியுள்
அறிவேயுன்னை யல்லாலறிந் தேத்தமாட்டேனே.

## சிவாகமங்களின் உற்பத்தி

மகாசங்கார முடிவின் கண்ணே உலகங்களை மீளப் படைக்குமாறு பரமசிவனுர் திருவுளங்கொண்டனர். அப்பொழுது அவருடைய பராசக்தியானவர் குடிலையை நோக்கியபொழுது வேதாகமங்கள் குடிலையினின்று நாதவடிவாயும், அதன்பின் பிந்துவடிவாயும், அதன்பின் அக்ஷரவடிவாயும் முறையே தோன்றின. பின்பு அச் சிவபிரான் சதாசிவமூர்த்தியாய் சாதாக்கியதத்துவத்தில் எழுந்தருளியிருந்து ஆன்மாக்கள் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கையும் அடையும்பொருட்டு, அனுட்டுப்பு சந்தசாக இருபத் தெட்டாகமங்களையும் அருளிச்செய்தார்.

இவ் வாகமங்கள் சதாசிவனுல் அநந்தேசுரருக்கும், அநந்தேசுரரால் ஸ்ரீகண்டருக்கும், ஸ்ரீகண்டரால் தேவர் களுக்கும், தேவர்களால் முனிவர்களுக்கும், முனிவர்க ளால் மனுடருக்கும், மனுடரால் மனுடருக்கும் உப தேசிக்கப்பட்டன. இங்ஙனம் உபதேசிக்கப்படுங்கால் உளவாகிய சம்பந்தம் ஆறும் முறையே பரசம்பந்தம், மகாசம்பந்தம், அந்தராளசம்பந்தம், திவ்வியசம்பந்தம், திவ்வியாதிவ்வியசம்பந்தம், அதிவ்வியசம்பந்தம் எனப் பெயர்பெறும். சதாசிவமூர்த்தியுடைய ஐந்து முகங்க ளுள்ளும் சத்தியோசாத முகத்தினின்றும் கௌசிக இருடியின் பொருட்டு காமிகம், யோகஜம், சிந்தியம், காரணம், அசிதம் என்னும் ஐந்தாகமங்களும் தோன் றின. இவற்றின் படியே இவருக்குத் தீக்ஷை செய்யப் பட்டது.

வாமதேவமுகத்தி நின்றும் தீப்தம், சூக்குமம், சகச் சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம் என்னும் ஐந்தாகமங் களும் காசிப இருடியின் பொருட்டுத் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது.

அகோரமுகத்தி நின்றும் பாரத்துவாச இருடியின் பொருட்டு விசயம், நிச்சுவாசம், சுவாயம்புயம், ஆக்கி



னேயம், வீரம் என்னும் ஐந்தாகமங்களும் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது.

தற்புருடமுகத்தினின்றும் கௌதம இருடியின் பொருட்டு, ரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், முகவிம்பம் என்னும் ஐந்தாகமங்களும் தோன்றின, இவற்றின் படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. ஈசானமுகத்தினின்றும் அகத்திய இருடியின்பொருட்டு புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானம், சர்வோக் தம்பாரமேசுரம், கிரணம், வாதுளம் என்னும் எட்டாக மங்களும் தோன்றின. இவற்றின்படியே இவருக்குத் தீக்ஷை செய்யப்பட்டது. இவ்விருபத்தெட்டாகமங்களுள் ளும்காமிகம் முதலிய பத்தும் விஞ்ஞானகலருள் பரமசிவ னது அனுக்கிரகத்தைப் பெற்ற பிரணவர் முதலிய பத் துச் சிவன்களுக்கும் அருளிச் செய்யப்பட்டமையால் சிவபேதம் எனவும், விசயமுதலிய பதினெட்டும் இவ் வாறு பரம்சிவன் பால் உபதேசம் பெற்ற அனந்திருத் திரர் முதலிய பதினெட்டு ருத்திரர்களுக்கும் அருளிச் செய்யப்பட்டமையால் உருத்திரபேதமெனவும் சொல் லப்படும்.

இச்சிவாகமங்கள் சித்தாந்த மெனவும், மாந்திரமென வும், தந்திரமெனவும் பெயர் பெறும். மூலாகமங்களைக் கேட்டவர்கள் பிரணவர் முதலாக அறுபத்தறுவராவார் கள். சிவபேதம்பத்தையுங் கேட்டவர்கள் ஒருவரிடத் தொருவராக ஒவ்வோராகமத்துக்கு மும் மூன்று பேராய் அனுசதாசிவருட்டலைவராகிய பிரணவர் முதல்முப்ப தின்மராவார். உருத்திரபேதம் பதினெட்டுங் கேட்ட வர் ஒருவரிடத் தொருவராக, ஒவ்வோராகமத்துக்கு இவ்விரண்டுபேராய் அனந்திருத்திரர் முதல் முப்பத்தறு வராவார். அவர் பெயர்களைக் காமிகம் முதலிய ஆகமங் களிற் காண்க. வேதசிவாகம மிரண்டும் சிவபெருமானி டத்தே தோன்றினமையால் முதனூலெனப்படும். சிருட்டி பலபேதப்படுமாதலால் சிவபெருமான் அருளிச்

செய்த ஆகமங்களும் பலவிதமாய்த் தோன்றினவென் றறிக. சிவாகமத்துக்குக் கிரந்த சங்கியை சொல்வாம்.

| ஆகமப் பெயர் | கிரந்தத்தொகை |
|---|---|
| 1. காமிகம், | பரார்த்தம், 100, 000, 000, 000, 000, 000 |
| 2. யோகசம், | இலக்ஷம் 100, 000, |
| 3. சிந்தியம், | இலக்ஷம் 100, 000, |
| 4. காரணம், | கோடி 10, 000, 000, |
| 5. அசிதம், | இலக்ஷம் 100, 000, |
| 6. தீப்தம் | இலட்சம் 100, 000 |
| 7. சூக்குமம், | பதுமம், 1, 000, 000, 000, 000, 000 |
| 8. சகசிரம் | சங்கம், 100, 000, 000, 000, 000, |
| 9. அஞ்சுமான், | ஐந்திலக்ஷம் 500, 000 |
| 10. சுப்பிரபேதம், | மூன்றுகோடி 30, 000, 000 |
| 11. விசயம் | மூன்றுகோடி 30, 000, 000 |
| 12. நிச்சுவாசம், | கோடி 10, 000, 000 |
| 13. சுவாயம்புவம் | முப்பதினாயிரம் 30, 000 |
| 14. ஆக்கிளேயம் அல்லது, அனவம், | லட்சம் 100, 000 |
| 15. வீரம், | பத்துக்கோடி 100, 000, 000 |
| 16. ரௌரவம் | லட்சம் 100, 000 |
| 17. மகுடம், | மூன்றிலக்ஷம் 300, 000 |
| 18. விமலம், | மூன்றுகோடி 30, 000, 000, |
| 19. சந்திரஞானம், | லட்சம், 100, 000 |
| 20. முகபிம்பம் | லக்ஷம், 100, 000 |
| 21. புரோற்கீதம் | மூன்றிலக்ஷம் 300, 000 |
| 22. லளிதம், | எட்டுலக்ஷம் 800, 000 |
| 23. சித்தம், | ஐம்பது லட்சம் 500, 000, |
| 24. சந்தானம், | ஆறிலட்சம் 600, 000 |
| 25. சர்வோக்தம், | இரண்டிலக்ஷம் 200, 000 |
| 26. பாரமேசுவரம், | பன்னிரண்டிலட்சம் 12 00, 000 |
| 27. கிரணம், | ஐந்துகோடி 50, 000, 000, |
| 28. வாதுளம், | லக்ஷம் 100, 000 |



சிவாகமங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியே சரியாபாதம், கிரியாபாதம், யோகபாதம், ஞானபாதமென நான்காக வகுக்கப்படும்.

சரியாபாதத்திலே பிராயச்சித்தவிதி, பவித்திரவிதி, சிவலிங்கலக்ஷணம், செபமாலை, யோகப்பட்ட முதலியவற்றின் இலக்ஷண முதலியன கூறப்படும்.

கிரியாபாதத்திலே மந்திரங்களின் உத்தாரம், சந்தியாவந்தனம், பூசை, செபஓமங்கள் சமயவிஷேச நிருவாண ஆசாரியாபிஷேகங்கள் கூறப்படும்.

யோகபாதத்திலே முப்பத்தாறு தத்துவங்கள் தத்துவேசுரர், இயமநியம ஆசனம் சமாதி முறை முதலிய கூறப்படும்.

ஞானபாதத்திலே பதிபசுபாச லக்ஷணங்கள் கூறப்படும்.

இத்தகைய திவ்வியாகமங்கள் எல்லாவற்றையுமாவது சிலவற்றையாவது, ஒன்றையாவது அந்த ஒன்றிலும் தன்பூசைக்கு உபயோகமான சங்கிதையை மாத்திரமாவது, பட்டுப்பரிவட்டம் விரித்துப் பீடத்தின் மேல் வைத்து, சர்வேப்பிய சிவஞானேப்பியோநம என்று சொல்லி நமஸ்காரம் பண்ணிப் பூசித்தல் வேண்டும்.

## வித்தியாபீட பூசை

சுவாமிக்கு மேற்கே யோகபீடங் கற்பித்து, அதன் மேல் வித்தியாபீடத்தைச் சந்தனம், புஷ்பம் தூப தீபம் முதலியவைகளாற் பூசிக்க, அஞ்ஞானத்தைப் போக்குபவரும், விசுவரூபரும், ஞானத்தைக் கொடுப்பவருமாகிய சங்கரனை மனம் வாக்குக் காயங்களினால் நமஸ்காரம் பண்ணுகின்றேன் என்று தோத்திரம் பண்ணுக.

யோகபீடம்—சத்தியாதிசத்தி பரியந்தம் பூசித்தல். வித்தியாபீடம்—இருபத்தெட்டுச் சிவாகமங்கள், புத்தகம்

கிடையாத பக்ஷத்தில் சதுரச்சிர மண்டலத்தில் பத்துத் தளபத்மக்த்தையும் அதன்மேல் பதினெட்டு தளபத்மத்தையும் வரைந்து, கர்ணிகையில் ஓம்ஹௌம் சிவாயநம: ஓம்வாகீசுவராயநம என்று பூசித்து, கிழக்கு முதலிய பத்துத் தளங்களில் சிவபேதமாகிய காமிகம் முதல் சுப்பிரபேதாந்தமாகிய பத்து ஆகமங்களையும் பூசித்து, அதன்மேல் பதினெட்டுத் தளங்களில், உருத்திரபேதமானவிசயம் முதல் வாதுளமீருன பதினெட்டாகமங்களையும் பூசிக்க.

## பிரதக்ஷிணம்

அடியின் மேல் அடி வைத்துக் கொண்டும், கைகளைக் கூப்பிக் கொண்டும், சிவநாமங்களை உச்சரித்துக் கொண்டும், சிவத்தியானஞ் செய்து கொண்டும் இவ்விதம் மனம் வாக்குக் காயங்களை ஒருவழிப்படுத்திக் கொண்டு மும்முறை பிரதக்ஷிணஞ் செய்க. முதற் காலப் பூசையிற் செய்யப்படும் பிரதக்ஷிணத்தால் ஆணவமல நீக்கத்தையும், இரண்டாங்காலப் பூசையிற் செய்யப்படும் பிரதக்ஷிணத்தால் திருவருட் செல்வத்தையும், மூன்றுங்காலப் பூசையிற் செய்யப்படும் பிரதக்ஷிணத்தால் சகலபாப நிவாரணத்தையும், நாலாங் காலப் பூசையிற் செய்யப்படும் பிரதக்ஷிணத்தால் முத்தியையும் அடைவார்கள்.

மனஅன்போடு சிவபெருமானைப் பிரதக்ஷிணம் செய்யும் அன்பர்கள் ஆணவமலத்தின் சேனைகளாகிய கோபம் முதலியவற்றினின்றும் நீங்கி, மலநிவாரணமாகி திருவருட் செல்வத்தைப் பெற்று, மோக்ஷமடைவார்கள்.

பிரதக்ஷிணமென்பதன் கருத்து வருமாறு, பிர—கோப முதலிய நீக்கம், த—மோக்ஷசித்தி, க்ஷி—மல நிவாரணம், ணம்—திருவருட்பேறு,



## திருநாவுக்கரசு நாயனுர்

### திருத்தாண்டகம்

மதிதருவானெஞ்சமே யுஞ்சுபோக
வழியாவதிதுகண்டாய் வானோர்க்கெல்லாம்
அதிபதியே யாரமுதே யாதியென்று
மம்மானே யாரூரெம்மையா வென்றுந்
துதிசெய்து துன்றுமலர் கொண்டு தூவிச்
சூழும் வலஞ்செய்து தொண்டுபாடிக்
கதிர்மதிசேர் சென்னியனே காலகாலா
கற்பகமேயென் றென்றே கதருநில்லே.

### இலிங்கபுராணத் திருக்குறுந் தொகை அட்டாங்கம்

கட்டுவாங்கங் கபாலங்கைக் கொண்டிலர்
அட்டமாங்கங் கிடந்தடி வீழ்ந்திலர்
சிட்டன் சேவடி சென்றெய்திக் காணிய
பட்டகட்ட முற்றூரங் கிருவரே.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்

### பண்—காந்தாரம்

கையாற்றொழுது தலைசாய்த் துள்ளங் கசிவார்கள்
மெய்யார் குறையுந் துயருந் தீர்க்கும் விமலனுர்
நெய்யாடுதலஞ் சுடையார் நிலாவு மூர்போலும்
பைவாய்நாகங் கோடலீனும் பாதூரே.

## திருநாவுக்காசு நாயனுர்

### பண்—சாதாரி

''ஆக்கையாற்பயனென்—அரன்
கோயில்வலம்வந்து
பூக்கைகயாலட்டிப் போற்றியென்னுதவிவ்
வாக்கையாற்பயனென்·

கால்களாற்பயனென்—கறைக்
கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக் கோகரணஞ்சூழாக்
கால்களாற்பயனென்.

கைகாள் கூப்பித்தொழீர்—கடி
மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரை யார்த்தபரமனைக்
கைகாள் கூப்பித்தொழீர்."

## நமஸ்காரம்

நமஸ்காரமானது அஷ்டாங்கம், பஞ்சாங்கம், திரியங்கம், ஏகாங்கம் என நான்குவகைப்படும்.

ஆண்களுக்கு அஷ்டாங்கநமஸ்காரமும், பெண்களுக்குப் பஞ்சாங்க நமஸ்காரமும் உரித்தாகும். திரியங்கமும் ஏகாங்கமும் இருபாலார்க்கும் பொதுவாகும்.

சிரசு, கைகள், காதுகள், மோவாய், புயங்கள் என்னும் எட்டவயவங்களும் நிலத்திலேபடியும்படி வணங்குவது அட்டாங்க நமஸ்காரமெனப்படும்.

சிரசு, கைகள், முழந்தாள்கள் என்னும் ஐந்துறுப்புக்களும் நிலத்திலே படும்படி வணங்குவது பஞ்சாங்க நமஸ்காரமாம். சிரசிலாயினும்மார்பிலாயினும் கைகளைக் கூப்பி வணங்குவது சிரியங்கநமஸ்காரமாம். சிரசைத் தாழ்த்துநிற்றல் ஏகாங்க நமஸ்காரமாம்.

பிரமவிட்டுணுக்களது தொழிலையும், அவர்களை அதிட்டிக்கும் ஞானக்கிரியைகளையும், தற்போதமென்னும் அதிகாரத்தையும் நீங்கி, நதியானது சமுத்திரத்தோடு சேர்ந்து சமரசமாயிருத்தல் போல, ஆன்மா சிவத்தோடுசேர்ந்து அத்துவித முற்றிருத்தலே இதன் பாவனையாகும்.



### சதாசிவரூபம்

அயன்மாலிருவர் கீழாகையின் பொருட்டுச்
சயமான் புறவெதிர் தண்டம் பண்ணி,

## திருநாவுக்கரசு நாயனார்
### தனித்திருக் குறுந்தொகை

ஞானத்தாற்றொழுவார் சிவஞானிகள்
ஞானத்தாற்றொழுவேனுனை நானலேன்
ஞானத்தாற்றொழுவார் சிலர்தொழக்கண்டு
ஞானத்தாலுனை நானுந் தொழுவனே.

பெருகலாந்தவம்பேதமை தீரலாந்
திருகலாசியசிந்தை திருத்தலாம்
பருகலாம்பரமாய தோரானந்தம்
மருகலானடி வாழ்த்தி வணங்கவே.

### திருவாசகம்

சிந்தனைநின்றனக்காக்கி நாயினேன்றன்
கண்ணிணைநின்றிருப் பாதப்போதுக்காக்கி
வந்தனையுமம் மலர்க்கேயாக்கி வாக்குன்
மணிவார்த்தைக்காக்கியைம் புலன்களார
வந்தனையாட்கொண்டுள்ளே புகுந்தவிச்சை
மாலமுதப்பெருங்கடலே மலையேயுன்னைத்
தந்தனைசெந்தாமரைக் காடனையமேனித்
தனிச்சுடரேயிரண்டுமிலித் தமியனேற்கே.

## திருநாவுக்கரசு நாயனார்
### திருவிருத்தம்

திருந்தாவமணர்தந்நெறிப் பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம் புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய் பாதிரிப்புலியூர்
இருந்தாயடியேனினிப்பிறவாமல் வந்தேன்றுகொள்ளே.

### துவிகாலாதிபூசை

ஒருகாலத்துக்கு மேற் சிவபூசை செய்யச் சத்தியற்றவன் மத்தியான்ன பூசைக்காக ஆசனமூர்த்தி மூலத்தையும், பிரமமந்திரங்களையும் அங்கமந்திரங்களையும் அவ்வத்தானங்களிற் பூசித்துச்சமர்ப்பிக்க மற்றைக்காலங்களுக்கு மிதுவே முறையாம்.

### அக்கினிகாரியம்

அக்கினிகாரியஞ் செய்ய அதிகாரமில்லாதவன் சிவனை ஆசனமூர்த்தி மூலத்தாலும், நேத்திர நீங்கிய அங்கமந்திரங்களாலும், அவ்வவ் விடங்களிற் பூசித்துச் சமர்ப்பிக்க.

அக்கினிகாரியஞ் செய்ய அதிகாரமிருந்தும், திரவியங்களைச் சேகரிக்கச் சத்தியற்றவன் ஓமஞ் செய்யுங் கணக்கிலிருந்து பத்து மடங்கு கூட்டிச் செபித்துச் சமர்ப்பிக்க.

நித்தியாக்கினிகாரியஞ் செய்பவன் அக்கினியைப் பூசித்து, பிரமாதிகளையும் பூசித்து, சிவாக்கினியின் இருதயகமலத்தில் சிவனைச் சாங்கமாகப் பூசித்து நைவேத்திய சமயத்தில் மூலமந்திரத்தாலும் அதில் தசாம்சம் பிரமமந்திரங்களாலும் ஓமஞ் செய்து பூரணகுதி செய்க.

ஆசனசந்தன தாம்பூலாதிகள் சமர்ப்பித்து, பஸ்ம வந்தனம் செய்து அட்ட புஷ்பங்களா லருச்சித்துப் பராமுகார்க்கியங் கொடுத்துச் சிவமூர்த்தியில் சம்யோசிக்க. பின்பு பூராதி ஓமஞ் செய்து, பிரமா முதலியோருக்குப் பலி கொடுத்து, அக்கினியை நமஸ்கரித்து, "என்னுற் செய்யப்பட்ட ஓமத்தை ஏற்றுச் சந்தோஷமடைக" என்று பிரார்த்தித்து அந்தர்ப்பலி, பஹிர்ப்பலியையுங் கொடுத்து, இவைகளைத் தன் இருதயத்தில் ஒடுக்கித் தோத்திரம்பண்ணி நமஸ்கரிக்க.



### திருநாவுக்கரசு நாயனுர்

#### திருக்குறுந்தொகை

பூமென் கோதையுமை யொருபாகனை
யோமஞ் செய்துணர்மின்க ளுள்ளத்தாற்
காமற் காய்ந்தபிரான் கடப்பந்துறை
நாமமேத்த நந்தீவினை நாசமே.

### திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர்

#### பண் — காந்தாரபஞ்சமம்

"மந்திர நான்மறையாகி வானவர்
சிந்தையு ணின்றவர்தம்மை யாழ்வன
செந்தழ லோம்பியசெம்மை வேதியர்க்
கந்தியுண் மந்திரமஞ் செழுத்துமே"

### பூசாஹோம சமர்ப்பணம்

சகளீகரணஞ் செய்து கையில் அருக்கியத்தை எடுத்துச் சிவசந்நிதானத்தை அடைந்து, "சிவபெருமானே யான் செய்யும் எல்லாக் கிருத்தியங்களும் தேவரீருடையனவே. உலகத்தை இரட்சிக்குந் தேவரீரே எனக்குத் தலைவர். தேவரீரின்றி எனக்கு வேறொரு தலைவரில்லை" என்று விஞ்ஞாபனம் செய்து, 'ஓம் ஹாம் சிவாயசுவாஹா' என்று அருக்கிய ஜலத்துடன் பூமியிலூன்றிய முழந்தாளையுடையவனாய், உற்பவமுத்திரையால் பூசை ஓமம் முதலிய புண்ணியபலத்தைப் பரமசிவனுடைய வரதஅத்தத்தில் நிவேதனஞ் செய்து அட்ட புஷ்பஞ் சாத்துக.

### திருநாவுக்கரசு சுவாமிகள்

#### திருக்குறுந்தொகை

பாதேசெய்து பிழையாமலோ நீயென்னில்
ஆதேபோயு மனையில் பெருமையான்
மாதேவானிய வாய்மார் மருவினர்
போதேசென்றும் புகுந்ததும் பொய்கொலோ.

## திருஞானசம்பந்த சுவாமிகள்

### திருவிராகம், பண் — கௌசிகம்

கோலமாய நீண்மதிற் கூடலால வாயிலாய்
பாலனாய தொண்டுசெய்து பண்டுமின்று முன்னையே
நீலமாய கண்டனே நின்னையன்றி நித்தலும்
சீலமாய சிந்தையிற் றேர்வதில்லை தேவரே.

## பட்டணத்தடிகள்

பூதமுங் கரணமும் பொறிகளைம் புலனும்
பொருந்திய குணங்களோர் மூன்றும்
நாதமுங் கடந்தவெளியிலே நீயு
நானுமாய் நிற்கு நாளுளதோ
வாதமுஞ் சமயபேதமுங் கடந்த
மனோபவ வின்ப சாகரனே
ஏதுமொன் றறியேன் யாதுநின்செயலே
யிறைவனே யேக நாயகமே.

### அஷ்ட புஷ்பம்

புன்னை, வெள்ளெருக்கு, சண்பகம், வெள்ளைக்காக்கணம், நீலோற்பலம், பாதிரி, அலரி, செந்தாமரை ஆகிய இவை எல்லாக்காலத்துக்கும் பொதுவாகிய அட்ட புஷ்பமாகும், அட்டபுஷ்பஞ் சாத்தும்பொழுதில் இறைவனுக்கு ஒரு பூ வேனும் எண்ணிற் குறைய வொண்ணாது, சொல்லிய புஷ்பங்கள் கிடையாவிடின் எண்ணிக்கையிற்குறையாதபடி சொல்லப்பட்டமற்றைய புஷ்பங்களாற் கூட்டி அருச்சிக்க,

இலகியபுன்னை வெள்ளெருக்குச் சண்பக
நிலவியவலம்புரி நீலம் பாதிரி
அலரி செந்தாமரை அட்ட புஷ்பமாம்
புலரியம் போதொடெப் பொழுதுஞ் சாத்தலாம்

என்னும் புஷ்பவிதி செய்யுளானு மறிக.



மானதமாகச்சாத்து மட்ட புஷ்பங்கள், கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறை, அருள், அறிவு, வாய்மை, தவம், அன்பு என்பன. பஞ்சகிருத்தியகாரணராகிய பரமசிவனையடைந்தவன் மீண்டும் பஞ்சகிருத்யத்தில் அகப்படாதிருத்தல் வேண்டுமென்னும் பாவனையாம்.

### சதாசிவரூபம்

தாணுவைவிட்டுத் தான் பிரியாமல்
வேணுமென்று மீளவும் பூசித்து,

## திருநாவுக்கரசு சுவாமிகள்

### திருக்குறுந்தொகை,

எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி
மட்டுலரிடுவார் வினை மாயுமால்
கட்டித்தேன் கலந்தன்ன கெடிலவீ
ரட்டனாரடி சேருமவற்கே,

### பிரார்த்தனை

"குறைவாகவேனும் அதிகமாகவேனும் எவை என்னுடைய அஞ்ஞானத்தினாற் செய்யப்பட்டனவோ அவைகள் தேவரீருடைய அனுக்கிரகத்தினால் பூரணமாகும்படி எனக்குக் கிருபை செய்தருளுக" என்று விஞ்ஞாபித்துப் பஞ்சமுகிமுத்திரை கொடுக்க.

### பராமுகார்க்கியம்

சத்தியோசாதாதிக் கிரமத்தாலும், மூலத்தாலும், சிவபெருமானைப் பூசித்து, அருக்கியங்கொடுத்து அஸ்திரமுதல் ஈசானுந்தமான பிரதிலோமக்கிரமமாக அருச்சித்து, அருக்கியங் கொடுத்து காமிய மத்திரங்களையும் அவ்வவ்வங்கல்களிற் சேர்த்து, அஸ்திரத்தையுச்சரித்து நாராச முத்திரையால் புஷ்பக்ஷேபத்தோடு மந்திரங்களையெழுப்பித் திவ்வியமுத்திரையினால் மூர்த்தியில்

யோசித்து, மூலத்தாலருச்சித்து, அருக்கியங் கொடுத்து, "பொறுத்தருளுக" என்று பிரார்த்திக்க. சிவபெருமானது பக்கலாகக் கிருபை பொருந்திய ஞானநேத்திரத்தைச் செலுத்திச் சேருகின்ற இன்னிலைமையை சிவ ஞானத்தாலறிதலே இதன் பாவனையாகும்.

### சதாசிவரூபம்

பரமசிவனது பாங்கினிலாங்கே
திருமிகுஞான நேந்திரஞ் சேர்த்திச்
சேருமிந் நிலைமையைத்திவ்விய ஞானத்
தாலறிதல் பராமுகவருக் கியமே,

"சுவாமீ, அன்பற்ற அடியேனால் அற்பமாகப் பூசிக்கப்பட்டீர், அப்பத்தியின் குறையைப் பொறுத்து, அனுக்கிரகம் செய்தருளுக" என்று விஞ்ஞாபனம் செய்க.

பின்பு திக்குபந்தனம், அவகுண்டனம், அமிர்தீகரணம் பரமீகரணம் செய்து பூசிக்க.

இரத்தினலோகச சைவசலிங்கமானால் பேடகக் கோயிலில் எழுந்தருளப்பண்ணுக. பேடகக் கோயிலாகிய கெர்ப்பக்கிரகத்தைக் காவல் செய்யும் பொருட்டு, பீமருத்திரரை அதன்மேல் பூசிக்க.

## சுந்தரமூர்த்தி நாயனார்

### பண் — தக்கேசி

"குறைவிலா நிறைவே குணக்குன்றே
கூத்தனே குழைக்காதுடையானே
யுறவிலேனுனையன்றி மற்றடியே
னொருபிழை பொறுத்தாலிழிவுண்டோ
சிறைவண்டார் பொழில் சூழ் திருவாரூர்ச்
செம்பொனே திருவாவடு துறையுள்
அறவனே யெனையஞ் சலென்றருளா
யாரெனக் குறவமரர்களேறே."



## திருநாவுக்கரசு சுவாமிகள்

### பண்—காந்தாரம்

"கைப்போது மலர்தூவிக் காதலித்து வானோர்கள்
முப்போது முடிசாய்ந்துத் தொழநின்ற முதல்வனை
அப்போது மலர்தூவி யைம்புலனு மகத்தடக்கி
எப்போது மினியானை யென்மனத்தே வைத்தேனே"

### தேசிகாதிவிசர்ச்சனம்

தம்முடைய குரு, வித்தியாபீடம், சப்தகுரு, மகாலட்சுமி, கணபதி, துவாரபாலகர் ஆகிய இவர்களை அருக்கியங்கொடுத்து உத்துவாசனம் பண்ணி தனது இருதயத்தில் ஒடுக்குக.

### சண்டேசுரபூசை

ஈசானதிக்கில் ஆசனமிட்டு அதில் ஓம்சண்டாசனாய ஹூம் பண்ணம; என்று ஆசனத்தைப் பூசித்து, அதன்மேல் சண்டமூர்த்தியைத் தியானித்து, ஓம் சண்டமூர்த்தியே ஹூம் பண்ணம் என்று பூசித்து, உருத்திராக்கினியில் தோற்றியவரும், கருநிறமுடையவரும், பயங்கரமான உருவத்தையுடையவரும், உக்கிரரும், நான்கு முகங்களையும், நான்கு புயங்களையுமுடையவரும், முகத்திற் பரவுகின்ற சோதியையுடையவரும், சிறந்த பன்னிரண்டு கண்களையுடையவரும் சடாமுடியிற் சந்திரனைத் தரித்தவரும், சர்ப்பகங்கணங்களையணிந்தவரும், சர்ப்பயஞ்ஞோப வீதத்தையுடையவரும், சூலம், மழு, ருத்திதாக்ஷமாலை, கமண்டலத்தைத் தரித்தவரும், வெண்டாமரைப்பூவில் இருப்பவரும், அடியாரது இடரை நீக்குபவரும், ஆகிய துவணிச்சண்டேசுரரைத் தியானித்து, ஆவாகித்து இருதயாதி நியாசங்களையும் செய்து, பூசிக்க, அருக்கியங் கொடுத்து, சிவநிருமாலியத்தைச் சமர்ப்பித்து, சிவாஞ்ஞையினாலே அவருடைய நிர்மாலியங்களைத் தேவரீருக்குச் சமர்ப்பித்தேன் என்று விஞ்ஞாபனம்செய்து, ஆசமனார்க்கியம் கொடுத்து, செப

சமர்ப்பணம் செய்க, "சண்டேசுரரே என்னுடைய மோகத்தாற் செய்யப்பட்ட இக்கிரியை நூனுதிகமா யிருப்பினும், பரிபூரணமாக ஏற்றருளுக" என்று விஞ் ஞாபனம் செய்து அருக்கியங்கொடுத்து, உத்துவாச னம் செய்து பூரகஞ்செய்து மூலமந்திரத்தையுச்சரித்து, சம்மார முத்திரையினுல் தம்முடைய இருதயத்தில் யோசிக்க, அருக்கியபாத்திரங்களிலுள்ள மந்திரங்களை யும் தன் இருதயத்தில் யோசிக்க.

(சூரியபூசை யினந்தத்திலே அச்சண்டேசுரரைப் பூசை செய்யாவிடின் அதனை இச்சண்டேசுர பூசைக்கு முன் செய்க) சண்டேசுரபூசை செய்யாதவர்கள் சிவ பூசையின் பலனை அடையமாட்டார்கள். நிருமாலியங் களை அகற்றி அந்தத்தானத்தைச் சுத்திசெய்து, பஸ்ம தாரணமும் சகளீகரமும் செய்க.

பூசாபலப் பேற்றின்பொருட்டு அகோரமந்திரத்தை
இருபத்தொருதரம் செபிக்க.

### கபிலபூசை

பசுக்கள்நந்தை, பத்திரை, சுரபி, சுசீலை, சுமனை என ஐந்துவகைப்படும். அவைகளுள், நந்தை கபில நிறமும், பத்திரைகரு நிறமும், சுரபிவெண்ணிறமும் சுசீலை புகைநிறமும் சுமனை செந்நிறமும் உடையன வாம், சிவபூசாந்தத்தில் பசுவைப்பூசித்தல் வேண்டும். பசுவை அருக்கிய சலத்தினுற் புரோக்ஷித்து.

ஓம்கபிலாநந்தாயைநம
ஓம்கபிலாபத்திராயைநம
ஓம்கபிலாசுரபயேநம
ஓம்கபிலாசுசீலயைநம
ஓம்கபிலாசுமனையைநம;

என்று பூசித்து அருக்கியங்கொடுத்து, சந்தனம் புஷ் பம் முதலியவற்ருல் அருச்சித்து, அன்னமும் சலமும் ஊட்டி, தூபதீபங்காட்டி,

"நின்மலராகிய சிவபெருமான் ஆன்மாக்களிடத்திற் கொண்ட பெருங்கருணையினுலே அவர்கள் செய்த



பாவத்தைநீக்கி மோக்ஷமடையும் பொருட்டு, தேவர்கள் அமிர்தம் பெறவிரும்பி, பாற்கடல்கடைந்த காலத்தில் அக்கடலிற்தோன்றி ஆன்மாக்களது துன்பத்தைப் போக்கும் பயோதரத்தையுடைய மாதாவே, யான்தரு கின்ற புல்லை ஏற்றுக்கொள்க" என்னும் கருத்தமைந்த மந்திரத்தைச் சொல்லிப் புல்லையருத்துக. பின்பு வல மாக வந்து நமஸ்காரம் செய்க.

பசுக்கிடையாத பக்ஷத்தில், சந்தனத்தில் பசுவை எழுதி அதிற் பூசித்து வணங்குக.

### போசனவிதி

வாயையும் கைகால்களையும் சுத்திசெய்து கொண்டு, ஆசமனம்பண்ணி விபூதி தரித்துக்கொண்டு, போசனம் செய்க. போசனஞ் செய்யும்பொழுது குரு கிழக்குமுக மாகவும், சாதகர் வடக்குமுகமாகவும், மற்றையோர் மேற்குமுகமாகவும் இருகால்களையும் மடக்கிக்கொண்டு, இடமுழந்தாளின்மேலே இடக்கையை ஊன்றிக்கொண்டு இருக்க.

தெற்கு நோக்கியிருந்து போசனஞ் செய்யற்க செய்தவருக்குச் சரீரத்திலே நோயுண்டாகும். போசன சாலையில், ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு முழம் சதுர மாகமெழுகி;* அதன்மேல் போசனத்தக்கு விதிக்கப் பட்ட பாத்திரங்களைச் சலத்தினுல் அலம்பிப்போடுக. பாத்திரத்திலே நெய்யினுல் புரோக்ஷித்துச் சுத்திபண்ணி, அன்னத்தையும் கறி முதலிய பிறவற்றையும் படைக்க.

*சுத்திபண்ணுத விடத்திலே புசிக்கப்படும் அன்னத் தின் சுவையை பிசாசு முதலியவைகள் சூழ்ந்து வந்து புசிக்கும். சுத்தி செய்த மண்டலத்தின் அன்னத்தை ஆதித்தன் உருத்திரன் பிரமன் முதலிய தேவர்கள் புசிப்பரென்று அறிக.

வலக்கையைச் சலபாத் திரத்தின்மேலே வைத்து, சலத்திலே மிருத்தியுஞ் சய மந்திரத்தை வௌஷட் அந்தமாக ஏழுதரம் அபிமந்திரிக்க, அபிமந்திரிக்கப் பட்ட சலத்தினுல், கவசமந்திரத்தை உச்சரித்து அன் னபாத்திரத்தை வளைக்க. பின்பு பாத்திரசலத்தை வலக்கையினுற் தொட்டு, அவ்வன்னம் சுத்தியாதற் பொருட்டு அதன்மேல் அஸ்திர மந்திரத்தாற் புரோ க்ஷிக்க, அவ்வன்னத்தைத் தொட்டு மிருத்தியஞ் சயமந் திரத்தால் ஏழுதரம் செபிக்க, ஓம் சிவாயசுவாஹா குரவே சுவாக என்று சிவனுக்கும் குருவுககும் நிவேதித்து வலப்பக்கத்திலே மெழுகி, தான்றிக்காயளவு அன்ன மெடுத்து, நடுவிலும் நான்கு கோணத்திலும், ஓம் நாகாயசுவாஹா, ஓம் கூர்மாயசுவாஹா கிருகராய சுவாஹா, ஓம்வேதத்தாயசுவாஹா தனஞ்சயாயசுவாஹா என்று உபப்பிராணவாயுக்களுக்குப் பலியிடுக, வலவுள் ளங்கையிலே சலத்தை ஒருவர் வார்க்கவாங்கி அப், போசனபாத்திரத்தைஈசானமந்திரத்தினுலேசுற்றி, முன் பலியிட்ட இடத்திலே நாகாதிபஞ்சவாயு மந்திரத்தால்சிறு விரனுனியினுலே அச்சலத்தில் சிறிது விட்டு, உள்ளங்கை யிலே உழுந்தமிழ்ந்தத்தக்க சலத்தை ஓம் தற்புருஷாயசு வாஹா, என்று உட்கொள்க. அந்தச் சலத்தை உட் கொள்ளும் பொழுது போசன பாத்திரத்தை இடக் கையினுலே தீண்டிக்கொள்க, மிருகமுத்திரையினுல் அவ் வன்னத்திற் சிறிதெடுத்து, அஸ்திர மந்திரத்தினுலே உதரத்திலுள்ள சடராக்கினியைத் சொலித்ததா கப்பா வித்து அவ்வக்கினியினிடத் தேபல்லிலே படா மல், ஓம் பிராணுயசுவாஹா, ஓம் அபானுயசுவாஹா ஓம் சமானுயசுவாஹா, ஓம் உதானுயசுவாஹா ஓம் வியானுயசுவாஹா, என்று பஞ்சவாயுக் களுக்கும் தனித் தனியே பலியிடுக.



ஆன்மாவிடத்துப் பிராணனும், பூதயோனிகளி டத்து அபானனும், தேவர்களிடத்து உதானனும் பிதிர்களிடத்துச் சமானனும், மானுடரிடத்து வியான னும், விசேடித்திருத்தலால், இப்பஞ்ச வாயுக்களுக்கும் பலியிடிற் பஞ்சமகாயஞ்ஞும் செய்தபவனும் என்று ஞானரத்திஞவளி செப்புகின்றது.

குண்டத் தானமாகிய நாபியிலே பொருந்திய உத ராக்கினியை, அஸ்திரமந்திரத்தினுலே சொலிப்பித்து, அதிலிருக்கும் சிவபெருமானுக்கு, ஓம்சிவாய சுவாகா என்று முன்னே பலியிட்டெஞ்சிய அன்னதைப் பசி தீருமளவும் புசித்தலாகிய ஆகுதியைப் பண்ணுக.

போசனம் பண்ணும்போது அதற்கு உபயோகமல் லாத பிறவார்த்தைகளைப் பேசலாகாது. ஒருவர் குடித்து மிகுந்த ஜலத்தை மற்ருெருவர் குடித்தலா காது. சிவாகமவிதிப்படி பிராணுக்கினி ஆகுதி முடிந்த பின்னர் சிறிது ஜலத்தை உள்ளங்கையில் வாங்கி, ஓம்தற்புருஷாய சுவாஹா, என்று அந்தச் சலத்தை உட்கொள்ளுக.

அதன் பின்னர் உச்சிட்டமான அன்னத்தில் சிறி தள்ளி, தமது கோத்திரத்தில் அந்தியேட்டி முதலிய கருமஞ் செய்து, குருவினுல் யோசிக்கப்படாது நரகத்திலே கிடப்பவர்களுக்கு, பிரேதநரகவாசிப்பிய சுவாகா, என்று உச்சரித்து அந்த அன்னத்தை தரை யிலே பலியிட்டு சுளுகோதகங் கொடுக்க, அந்நரக வாசிகள் அதனையுண்டு பசிநோய் நீங்குவார்கள்,

பின்பு வீட்டுக்குப் புறத்திலே போய் கைகழுவிக் கொண்டு பதினுறு தரம் தண்ணீர் வாயிற்கொண்டு இடப்புறத்திலே கொப்புளித்து கைகால் கழுவுக. வலக் கையை முட்டியாகப் பிடித்துக் கொண்டு அதில் ஜலத்தை வார்த்து அதன் பெருவிரல் நுனியினின்று விழுகின்ற சலத்தை ஓம்காலாக்கினிருத்திராய சுவாஹா என்று வலக்காற் பெருவிரலிலே வார்க்க.

காலாக்கினிருத்திரர் வலக்காற் பெருவிரலில் எப்பொழுதும் அக்கினியைச் சொலிப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருப்பர். அவ்வக்கினி சாந்தமாதற் பொருட்டு அபிஷேகஞ் செய்ததாகப் பாவித்துவார்க்க.

அதன்பின் விபூதிதரித்து ஆசமனம்பண்ணி, சகளீகரணம் செய்து, பரமசிவனுடைய திருவடிகளையும் குருவினுடைய பாதங்களையும் தியானிக்க, அகோரமந்திரத்தை ஏழுதரம் உச்சரித்துக் கொண்டு மௌனத்தை விடுக.

கிருசத்தர் போசனஞ் செய்தபின்னர் வாக்குச் சுத்தியாகும் பொருட்டுத் தாம்பூலத்தைப் புசிக்கக்கடவர். பிரமசாரி முதலியோர் கராம்பு ஏலம் முதலியவற்றைப் புசிக்க.

பின்பு வேதாகமங்களையும் திருமுறைகளையும் ஆராய்ந்து உணர்க.

## திருநாவுக்கரசு நாயனர்

### தனித்திருநேரிசை

கோவண முடுத்தவாறுங் கோளரவசைத்த வாறுங்
தீவணச் சாம்பர் பூசித் திருவுருவிருந்தவாறும்
பூவணக் கிழவனரைப் புலியுரிய ரையனரை
ஏவணச் சிலையினரையா வரேயெழுதுவாரே.

### நித்தியகன்மபரிகாரம்

சூரியோதயமாகுமுன் மூன்றே முக்கால் நாழிகையளவில் நித்திரைவிட்டெழுந்து சுத்திசெய்து விபூதி தரித்துக் கொண்டு சிவத்தியானஞ் செய்க. நித்திரைவசத்தாற தியானியா தொழியின் இருமடங்கு தியானிக்க நித்திரையில்லா மலிருக்கவும் தியானியாது விடின் நான்மடங்கு தியானிக்க.



விபூதி தரியாமல் வெளியே போகினும் பூணூலை வலக்காதிலேனும் வலத்தோளிலேனும் வையாமல் மலசலமோசனம் செய்தாலும் அகோரமந்திரம் இருநூறுருச் செபிக்க.

மலசல மோசனத்தில் சூரிய சந்திரர் பெண்கள் முதலியோரைப் பார்த்தால் அகோரத்தை நூறுருச் செபிக்க.

சந்தியாகாலங்களிலும் பகலிலும் வடக்கு நோக்கியும் இரவில் தெற்கு நோக்கியுமிருந்து மலசலங்கழியாதவனும் அகோரத்தை நூறுருச் செபிக்க.

சிவசந்நிதித் தெருவிலும் புண்ணிய தீர்த்தக் கரையிலும் நந்தனவனத்திலும் கழித்தால் பஞ்சப்பிரமங்களை நூறுருச் செபிக்க.

ஒருகாலச் சந்தி தவறினல் சத்தியோசாதத்தை நூறுருச் செபிக்க. இரண்டாம் மூன்றும் சந்திதவறினல் இருநூறு முன்னூறுருச் செபிக்க.

சிவபூசை ஒருகாலந் தவறினல் ஆயிர முரு அகோர மந்திர செபஞ் செய்து பின் சிவபூசை செய்க. ஒரு நாண்முதல் பத்து நாள்வரை பூசை செய்யாதிருந்தால் ஒவ்வொருகாலப் பூசைக்கும் ஆயிரம் ஆயிரம் உருவாக ஏற்றிச் செபிக்க. பதினைந்து நாள் வரையும் பூசை தவறினல் அம்முறையாகச் செபஞ் செய்து கலசத் தாபனஞ் செய்து அபிஷேகம் பண்ணி ஓமஞ் செய்து பூசிக்க.

மானுஷலிங்கம் அக்கினியாற்றகிக் கப்படின் அகோர மந்திர செபஞ் செய்து வேறொரு லிங்கத்தை எழுந்தருளப்பண்ணிப் பூசிக்க. கள்வராற்றிருடப்பட்டால் நாற்பதுநாள் உபவசியாயிருந்து பின்பு முற

கூறியபடி பரிகாரஞ் செய்து வேறொரு லிங்கத்தை எழுந்தருளப் பண்ணிப் பூசிக்க.

வாய்த்திவலை இலிங்கத்தில் தெறித்தால் ஆயிரமும், கோழைபடின் இரண்டாயிரமும் அகோரம் செபிக்க.

சிவலிங்கத்தில் கால்படினும் கடக்கினும் அகோர மந்திரமாயிரமுருச்செபிக்க. காலில் தூள் திருமேனி யிற்பட்டால் அதிற்பாதி செபிக்க. லிங்கத்தின் சாயை யைக் கடந்தால் அகோரத்தை நூறுருச் செபிக்க. செபமாலை சிவாகமம் முதலியவைகளில் கால் பட்டால் சிவலிங்கத்துக்குக் கூறிய பரிகாரத்தில் எட்டிலொரு பங்கு செய்க.

சுயம்பு தைவிகம் ஆரிடம் காணம் இவைகளிற் பழுது காணப்படினும் அக்கினியினுற் பழுதானுலும் அச்சிலையைத்தானே முன்போலச் சந்திக்கவைத்து, திடமுறும்பொருட்டு செம்பு முதலிய லோகங்களாற் பட்டங்கட்டி அதனையே பூசிக்க பீடம் பின்னமானுல் சீர்ணோத்தாரவிதியால் அதை யெடுத்துப்போட்டு பெண்சிலையினுல் முன்போலத் திருமேனிகொண்டுபிர, திட்டை பண்ணிப் பூசை செய்க.

அபிஷேக கலசம் கை நழுவித் திருமுடியிற்பட்டால், ஆயிரமுரு அகோரஞ் செபிக்க, அருக்கியசலந் தாபிக் கப்பட்டபின் அது விழுந்தால் இருநூறுருச் செபித் துப் பின் அருக்கியந் தாபிக்க.

## பாத்திரசுத்தி

பொன்முதலிய பஞ்சலோகங்களினுற் செய்யப்பட்ட பாத்திரங்களும், சுருக்கு சுருவம் முதலானவைகளும் ஜலத்தினுல் அஸ்திர மந்திரஞ்சொல்லி அலம்பினுற் சுந்தி. அசுசியுற்றுல் கோமயத்தாலும் புற்றுமண்ணுலும் ஜலத்தாலும் சுத்திசெய்க. தாமிரத்தில் அசுசியுண்டா



ஞல் புளிநீராற் சுத்தியாம். பொன்மஞ்சற்பொடியாற் சுத்தி, வெண்கலபாத்திர முதலானவை வெண்ணீற்று லும் சலத்தாலும் சுத்தி அவைகளைக் காக்கை முதலி யவை தீண்டினுல் நெய்பூசி அக்கினியிற் காய்ச்சினுல் சுத்தி.

தருப்பை முதலானவை தயிர் சேர்ந்த ஜலத்தால் சுத்தி புலித்தோல் முதலிவவை கோசலத்தாலும் ஜலத் தாலும் சுத்தி, பட்டுவஸ்திரம் ஜலத்துடன் கூடிய புனலம் பழத்தாற்சுத்தி, தேனை ஆடையால் வடிப்ப தனுற் சுத்தி உப்பைத் தண்ணீரினுற்கழுவிக் காய்ச்சி னுல் சுத்தி.

திருமஞ்சனமும் எண்ணெய் முதலானவையும், கர்ப் பூரம் முதலான சுகந்த திரவியங்களும் அருக்கியப் புரோக்ஷணத்தாற் சுத்தி.

பஞ்சகவ்வியம், திருநீறு, சுத்ததலத்துப்புற்றுமண திருமஞ்சனம் இவைகளால் சாமானியலிங்கசுத்தியாம், பிராயச்சித்தத்தில், வில்வபத்திரச்சாற்றினுல் சிவலிங்கத் துக்கு அபிஷேகம் செய்வது விசேஷசுத்தியாம்.

அன்னம் முதலிய நிவேத்தியப்பொருள்கள் அருக் கிய சலத்தினுல் புரோக்ஷிப்பதனுல் சுத்தியாம்.

பரமேசுரன் ஆன்மாக்களிடத்தில் வியாபித்திருக் கும் முறைமையை உள்ளபடியறிதல் உயிர்ச்சுத்தியாம்.

முப்பத்தாறு தத்துவங்களிலும் சிவபெருமான் வியா பித்திருக்கும்முறையை உள்ளவாறு அறிதல் தத்துவ சுத்தியாம்.

இவ்வாறு சில தருமோத்தரங் கூறும்

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனர்

### பண—கௌசிகம்

திருச்சிற்றம்பலம்

ஆட்பாலவர்க்கருளும் வண்ணமுமாதிமாண்புங்
கேட்பான் புகலளவில்லை கிளக்கவேண்டா
கோட்பாலனவும்வினையுங் குறுகாமையெந்தை
தாட்பால்வணங்கித்தலை நின்றிவைகேட்கத்தக்கார்

திருச்சிற்றம்பலம்

சிவபூசை விளக்கம் முற்றிற்று.

கலைவாணி அச்சகம், யாழ்ப்பாணம். 92—64



# சிவபூசை விளக்கம்

## சுத்தாசுத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 2 | 4 | நிறப்பிற் | பிறப்பிற் |
| 3 | 28 | லோகசலிங்கா | லோகசலிங்க |
| 5 | 20 | வேதிகையிட்டு | வேதிகையிலிட் டுப் |
| 5 | 22 | சலயென | சலமென |
| 7 | 17 | ணீரிரு | னீரிரு |
| 10 | 17 | ளேந்தி | ளேத்தி |
| 10 | 17 | தையும் | நையும் |
| 16 | 22 | மூவுலகு | மூவுலக |
| 16 | 23 | யாசங்க | யாகங்க |
| 21 | 12 | பாத்திரத்தைக் | பாத்திரததைச் |
| 21 | 16 | கலோல்காய | கஷோல்காய |
| 23 | 15 | விம்லே | விமலே |
| 27 | 12 | கண்டர் | சண்டர் |
| 27 | 24 | வியாழன் | வியாழம் |
| 31 | 5 | ொருமை | பெருமை |
| 31 | 6 | கற்பகம் | கற்பம் |
| 33 | 2 | கொடுப்பது | கெடுப்பது |
| 38 | 24 | ஆச்சியரயித்து | ஆச்சிரயித்து |
| 39 | 21 | திரஞ் | திரயஞ் |
| 45 | 13 | வியோமவிரூபி | வியோமரூபி |
| 47 | 27 | சுழுமுநா | சுழுமுணு |
| 48 | 7 | விஷ்னு | விஷ்ணு |
| 55 | 14 | மன்வளவி | மனவளவி |
| 55 | 28 | விதழ்களாவும் | விதழ்களாகவும் |

| | | | |
|---|---|---|---|
| 56 | 3 | பொருட்டினுட் | பொகுட்டினுட் |
| 56 | 27 | சனங்தளிடத்து | சனங்களிடத்து |
| 58 | 4 | யொன்சுடர் | யொண்சுடர் |
| 58 | 13 | பூசளை | பூசனை |
| 58 | 27 | செய்வாச் | செய்வானைக் |
| 63 | 24 | அங்குட்டாந்தச் சனி | அங்குட்டந்தர்ச் சனி |
| 69 | 3 | ஏந்தியயபிடேக | ஏந்தியபிடேக |
| 75 | 24 | நாளிகேரோக த்தை | நாளிகேரோதக த்தை |
| 76 | 9 | கந்தோகத்தை | கந்தோத்கதைதை |
| 77 | 2 | பவ | பல |
| 77 | 3 | பலோதகமம் | பலோதகம் |
| 77 | 29 | ஆயி | ஆவி |
| 78 | 4 | சாந்தி | சாத்தி |
| 78 | 8 | மெனியன் | மேனியன் |
| 80 | 7 | பாவட்டங் | பாவாட்டகங் |
| 84 | 28 | கரு | லகு |
| 84 | 28 | வாயுவேலர் | வாயுவேகர் |
| 85 | 14 | திரிதசேருவரர் | திரிதசேசுவரர் |
| 85 | 25 | சரித்திடு | தரித்திடு |
| 86 | 7 | மயாதத்துவ | மாயாதத்துவ |
| 86 | 27 | ஜல்பிபேசுரர் | ஜல்ப்பேசுரர் |
| 91 | 2 | பரிபாலஞ் | பரிபாலனஞ் |
| 91 | 19 | பவனததில் | புவனததில் |
| 95 | 13 | மயாதத்துவ | மாயாதத்துவ |
| 96 | 2 | சுரர்களாவே | சுரர்களாலே |
| 96 | 3 | சந்தகோடி | சத்தகோடி |
| 96 | 9 | வௌஷட் | வஷட் |
| 96 | 13 | ஸிவதா | ஸ்வதா |
| 96 | 17 | ஷட் | வஷட் |
| 99 | 17 | தீயாதி | தீயாகி |
| 99 | 24 | புணர்தீது | புணர்ந்து |
| 100 | 18 | மேலும் | போலும் |



| | | | |
|---|---|---|---|
| 108 | 3 | விதள்தெனக் கோடி | வித்தென்னக் கோடி |
| 110 | 10 | னல்வான் | னல்லால் |
| 114 | 26 | லஷண | லக்ஷண |
| 116 | 26 | ஸ்திரீலிங்கிம் | ஸ்திரீலிங்கம் |
| 117 | 22 | யுயிர்க்க்கெல்லா | யுயிர்க்கெல்லா |
| 117 | 24 | தினத்தற் | நினைத்தற் |
| 120 | 27 | அகோர | அகோரசிவாசாரிய |
| 129 | 12 | பரமா | பிரமா |
| 136 | 27 | அளிக்கும் | அழிக்கும் |
| 137 | 4 | நெஞ்சடை | செஞ்சடை |
| 137 | 7 | ஞநள்க்காவு | ஞனைக்காவு |
| 133 | 20 | சொலனே | சொலென |
| 139 | 27 | பிரசாதாதீப | பிராசாததீப |
| 144 | 11 | மென்பதுன் நிரோத | மென்பதுசந் நிரோத |
| 145 | 8 | ஓம்ஹாஃ | ஓம்ஹாம் |
| 145 | 9 | ஒஃ ஹீம் | ஓம்ஹீம் |
| 145 | 11 | சிகாடுயெ | சிகாயை |
| 146 | 13 | நிமித்திமாகவும் | நிமித்தமாகவும் |
| 152 | 24 | குறிஞ் | குறிஞ்சி |
| 153 | 21 | பொய்பொரு ளாம் | மெய்பொரு ளாம் |
| 157 | 19 | இரத்தின | இரத்தினம் |
| 158 | 6 | மனோன்மணி | மனோன்மனி |
| 160 | 16 | நிறமுள்ள | நிறமுள்ளவரும் |
| 165 | 21 | பஞ்சாவர்ண | பஞ்சாவரண |
| 165 | 27 | ஆசனம் | ஆசமனம் |
| 165 | 30 | பஞ்சாவர்ண | பஞ்சாவரண |
| 174 | 26 | கேக்கும்படி | கேட்கும்படி |
| 176 | 18 | வாரூர்புக | வாரூர்புக் |
| 181 | 4 | விடங்க | ஷடங்க |
| 182 | 16 | குனித்தால்வினை | குனித்தான்வினை |
| | 17 | பமன் | பரமன் |

| | | | |
|---|---|---|---|
| 186 | 27 | வெயிவாய | வெயிலாய |
| | 28 | பிகிர்தர் | விகிர்தர் |
| 187 | 20 | யொள்று | யொன்று |
| 188 | 29 | திவேட்டா | தீவேட்டா |
| 195 | 10 | வளா | வளர் |
| 196 | 8 | றமன் | நமன் |
| 196 | 14 | தண்காணல் | தண்கானல் |
| 196 | 17 | றடரஞ்வசுவரே | றடரவஞ்சுவரே |
| 196 | 25 | செல்லவே | செல்லலே |
| 199 | 5 | தகுந்தப்பெற்ருர் | தகுந்தப்பெருர் |
| 199 | 10 | எனவாஞோ | எனவாஞேர் |
| 199 | 12 | பெரி | யெரி |
| 202 | 11 | செல்வ | செல்ல |
| 204 | 6 | கொய்யாமா | கொய்யாமோ |
| 206 | 17 | வாட்டங் | வாட்டடங் |
| 208 | 4 | நீறுப் | நீறும் |
| 208 | 11 | மஞ்சஞ் | மங்கஞ் |
| 213 | 30 | தாளைப் | தாளைப் |
| 214 | 16 | மந்த | மத்த |
| 219 | 29 | பரித் | பரிந் |
| 219 | 29 | ககருளும் | கருளும் |
| 219 | 33 | நீர்க்கு | தீர்க்கு |
| 226 | 4 | முடி | மூடி |
| 227 | 15 | வளா | வளர் |
| 241 | 11 | பேதமை | பேதைமை |
| 241 | 12 | லாசிய | லாகிய |
| 241 | 17 | கண்ணிளை | கண்ணிணை |
| 241 | 29 | இருத் | இருந் |
| 243 | 11 | யாழ்வன | யாள்வன |
| 245 | 13 | மடடு | மடட |
| 245 | 15 | மவறகே | மவருககே |
| 252 | 19 | வாறுங் | வாறுந் |
| 256 | 6 | புக | புகி |

உ

சிவமயம்

# சிவானந்த குருகுலம்

## திருக்கேதீச்சரம்

அறிவும், ஒழுக்கமும், ஆற்றலும், இறை பக்தியும் நிறைந்த சைவக்குருமார்களை உருவாக்கத் திருக்கேதீச்சரத்தில் சிவானந்த குருகுலம் நிறுவப்பட்டுள்ளது. இங்குப் பயிற்சி பெறும் மாணவர்கள் சிவாகம முறைகளையும் சைவசமயத் தத்துவங்களையும் தமிழிலும் வடமொழியிலும் நன்கு கற்று, நித்திய நைமித்தியங்களையும், சைவக்கிரியைகளையும் சைவாலயங்களிலும் சைவ ஸ்தாபனங்களிலும் சிறந்த முறையில் நன்கு நடாத்தக் கூடியவராகப் பயிற்றப்படுவர்.

மூர்த்தி தலம் தீர்த்தம் மூன்றும் ஒருங்கே அமைந்து, திருமுறைகளால் போற்றப்பெற்று, புனிதமும் அமைதியும் நிறைந்த சூழலில், பழமை வாய்ந்து திகழும் திருக்கேதீச்சர ஆலயத்தின் நிழலில் இத்தகைய சமயக்கல்வி நிலையம் நிறுவப்படுவது மிகப் பொருத்தமானதெனச் சைவ உலகம் ஏற்றுக்கொள்ளும். அன்றியும் அருளூற்றுய ஓர் புராதன சிவாலயத்தில் நடைபெறும் சிவாகம முறைகளை அவதானித்தும் அவ்வப்போது வேண்டிய சேவைகளில் தங்களால் இயன்ற அளவு பங்குபற்றியும் அனுபவம் பெறும் வாய்ப்பும் மாணவர்களுக்குக் கிடைக்கும்.

சிவானந்த குருகுலத்திற்கென அழகான கட்டிடம் ஒன்று நிறுவப்பட்டுள்ளது. மாணவர்கள் தங்கியிருப்பதற்கும், படிப்பதற்கும் வசதியான படுக்கை அறைகளும், வகுப்பறைகளும் அங்கு உள. தற்போதைய ஒழுங்கின்படி மாணவர்களுக்கு இலவசமாகக் கல்வி, உணவு, உடை என்பன வழங்குவதற்கு வசதிகள் செய்யப்பட்டுள்ளன.

குருகுலத்தில் பயிலும் மாணவர்கள் முதல மூன்று ஆண்டுகளில் வடமொழியிலும் தென்மொழியிலும் இலக்கணம், இலக்கியம், வேதம். ஆகமம், சமயபாடங் கள், திருமுறைகள், சாத்திரங்கள் என்பனவற்றைப் பொதுவாகவும் அடுத்த இரண்டாண்டுகளில் உயர்தர வகுப்புக்களில் மேலே குறிக்கப்பட்டவைகளுடன் சித் தாந்த சாத்திரங்கள், இந்து தத்துவ ஞானம், சகல வேதாகம கிரியை முறைகள், மேல்நாட்டு விஞ் ஞான அறிவு என்பவைகளைச் சிறப்பாகவும் கற்கக் கூடிய விரிவான பாடவிதானம் வகுக்கப்பட்டுள்ளது.

சிவானந்த குருகுலம் **1961** ஆம் ஆண்டு கார்த்தி கைத் திங்களில் தொடங்கப்பெற்றுச் சிறந்த முறையில் நடைபெற்று வருகின்றது. கடந்த மூன்று ஆண்டுக ளாகப் பயிற்சி பெற்று வந்த மாணவர்களில் சிலர் படிப்பின் முதற் பகுதியை முடித்துச் சிறு ஆலயங்க ளில் பூசை செய்யக்கூடிய தகுதியுடனும், விசேட கிரியைகளில் உதவி செய்யக்கூடிய திறமையுடனும் வெளியேறியுள்ளனர். ஏனைய மாணவர்கள் தமது படிப் பின் இரண்டாம் பகுதியை முடிக்கத் தொடர்ந்து பயிற்சி பெறுகின்றனர். மேலும் இவ்வாண்டில் வேறு புதிய மாணவர்கள் முதற் பகுதிப் படிப்புக்குச் சேர்த் துக்கொள்ள ஆயத்தம் செய்யப்படுகிறது.

சிவானந்த குருகுலக் கல்வி பண்டைய குரு சிஷ்ய முறைப்படி நடைபெறும். மாணவர்கள் சிஷ்ய முறை யில் ஒழுகி தமது கல்வியில் ஆற்றலும் வளர்ச்சியும் பெறவும், தமது பிற்கால முயற்சியில் சிறப்புப் பெற வும், முயற்சிக்கேற்ற இலட்சியங்களைக் கடைப்பிடிக்க வும் ஊக்கமுடையராவர்; ஆசிரியர் குரு முறையில் மாணவர்களைத் தமது குழந்தைகள்போல வழிநடத்தி நல்லொழுக்க வாழ்வு அளித்துக் கல்வி போதிப்பர்.

“தொண்டர் நாள்தொறும் துதிசெய
அருள்செய் கேதீச்சர மதுதானே” (சம்பந்தர்)